விவேகாநந்த ஸ்வாமிகளின்

உபந்யாஸங்களாகிய

# ஞானத்திரட்டு.

---

"லோகோபகாரி" பத்திரிகையின்

ஆசிரியராகிய

வி. நடராஜ ஐயரவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டது.

(முதற்பாகம்)

சென்னை :

தாம்ஸன் அண்டு கம்பெனியில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1902.

விவேகாநந்த சுவாமிகளின்

உபந்யாஸங்களாகிய

# ஞானத்திரட்டு.

"லோகோபகாரி" பத்திரிகையின்

ஆசிரியராகிய

வி. நடராஜ ஐயரவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டது.

(முதற்பாகம்)

சென்னை:

தாம்ஸன் அண்டு கம்பெனியில்

பதிப்பிக்கப்பட்டது.

1902.

MOST RESPECTFULLY

DEDICATED

TO

HIS HOLINESS SWAMI VIVEKANANDA

V. NATARAJA AIYAR.

உ

ஓம்.

பரப்பிரம்மணே நம:

# ஞானத்திரட்டு.

## எதார்த்தமனிதன், போலிமனிதன்.

நாம் இங்கு நிற்கிறோம். நமது கண்கள் நமக்கு எதிரில் வெகு தூரத்திலுள்ள பொருள்களை நோக்குகின்றன. மனிதன் நினைக்கும் சக்தியைப் பெற்றது முதல் இம்மாதிரியே தூரத்திலுள்ள வஸ்துக்களைப் பார்க்கிறான். எப்போதும் எதிரிலுள்ள வஸ்துக்களையே நாடுகிறான். தன் கண்ணுக்கு நேரேயிருக்கும் பொருள்களையே காண்கிறான். சரீரம் அழிந்த பின்னும் தான் போகிறவழி இன்னதென்றறிய விரும்புகிறான். உடலைவிட்டு உயிர் நீங்கியபின்னர் அது எங்கே போகிறதென்பதைக் கண்டறிய ஒவ்வொருவனும் ஆசைகொள்ளுகிறான். மனிதன் இறந்து போனபின் எப்படியாகிறான், எங்கே செல்லுகிறான், என்பதை அறியவேண்டிய ஆசை எல்லோருக்குமுண்டு. மேற்கூறிய வினாக்களுக்கு விடை தெரிந்துகொள்ளுமாறு இவ்வுலகத்தில் பற்பல மதங்கள் உண்டாயிருக்கின்றன. ஒவ்வொரு மதத்திலும் அதன் உட்பிரிவுகளான கொள்கைகளை இது தப்பு இது தவறு என்று ஆசங்கைசெய்து புறமதஸ்தர்கள் கண்டித்துவருகிறார்கள். அந்த மதம் பொய், இந்த மதம் பிசகு, அந்த கொள்கை தப்பு, இந்த கொள்கை தவறு என்று புறமதஸ்தர்கள் அவைகளை ஒப்புக்கொள்ளாமல் நிராகரித்து வருவது யாவருமறிந்தவிஷயம். மனிதன் இவ்வுலகத்திலிருக்குமளவும், அவனுக்கு பகுத்தறியும் சக்தி உள்ளளவும் இம்மாதிரியே ஒவ்வொரு மதத்தையும் கொள்கையையும் கண்டித்து வருவான். ஒவ்வொரு கொள்கையிலும் சிறிது சிறிது உண்மையுண்டு. எல்லாவற்றிலும் உண்மையல்லாத விஷயங்களும் மிகுதியாயிருக்கின்றன. நான் உங்களுக்கு இவ்விஷயமாய் இந்தியாவில் பற்பல மதஸ்தர்கள் கேட்ட கேள்விகளும், அவைகளின் சாரமும், அக்கேள்விகளா லுண்டான உபயோகமும், அக்கேள்விகளுக்குக் கிடைத்த மறுமொழிகளும் கூறுகிறேன். இந்திய தத்துவ சாஸ்திரிகளின் மனதிற்கு அப்போதைக்கப்போது தோன்றின பற்பல அபிப்பிராயங்களையெல்லாம் ஸமரஸப்படுத்தி தற்காலத்திய மனோ தத்துவ சாஸ்திரிகள், ஜடதத்துவ சாஸ்திரிகள் முதலிய எல்லோருக்கும் இதில் இனிமையுண்டாகும்படி சொல்லுகிறேன்.

ஏகைக தத்துவத்தை யறியவேண்டியதே வேதாந்த சாஸ்திரத்தின் கருத்து. குறிப்பிட்ட ஓர் விஷயத்தைமட்டு மறிவதற்கு இந்துக்களின் மனம் இசைகிறதில்லை, அவர்களின் மனம் எப்போதும் பொதுவான விஷயத்தையே நாடுகிறது. எந்த ஒன்றையறிந்தால் அதன் மூலமாய் மற்றவைகளை அறியக்கூடு மென்பதே வேதாந்தத்திற் கூறியிருக்கும் விஷயம். களிமண்கட்டி யொன்றைக்கொண்டு எல்லாக் களிமண்களின் சுபாவத்தையு மறிகிறதுபோல், எந்த ஒன்றை அறிந்தால் எல்லா வஸ்துக்களையும் அறிவது எளிதாகுமோ அந்தவிசாரமே வேதாந்த விசாரம். இந்துக்களின் கொள்கைப்படி உலக முழுவதும் ஆகாச மென்னும் ஒரு வஸ்துவாலாகி யிருக்கிறது. நம்மைச் சுற்றிலும் நாம் பார்க்கிற, உணருகிற, ருசிபார்க்கிற வஸ்துக்களெல்லாம் ஆகாசத்தின் நானாவிதமான தோற்றங்களேயன்றி வேறல்ல. ஆகாசமானது எங்கும் நிறைந்ததாயும் வெகு நுட்பமாயும் இருக்கிறது. கட்டிப்பொருள்களென்றும், நீர்ப்பொருள்களென்றும், காற்றுப் பொருள்களென்றும் நாம் சொல்லுகிற சகலவிதமான வஸ்துக்களும், உருவங்களும், தோற்றங்களும், சரீரங்களும் பூமியும், சூரிய சந்திர நக்ஷத்திராதிகளும் இன்னுமுள்ள எல்லா வஸ்துக்களும் ஆகாசத்தினாலே ஆக்கப்பட்டவை.

இவ்வாகாசத்துடன் எது சேர்ந்ததனால் இவ்வுலகம் உண்டாயிற்று? ஆகாசத்துடன் ஸர்வசக்தி யென்னும் ஓர் சக்தி கலந்திருக்கிறது. ஆக்கிராணம், பலன், எண்ணம் என்று இவ்வுலகத்தில் சொல்லப்படுகிற ஸகலசக்திகளும் இந்துக்கள்கூறுகிற பிராணன் என்பதின் பற்பல தோற்றங்களேயன்றி வேறல்ல. பிராணன் ஆகாசத்துடன் கலந்து இவ்வுலகத்தை யுண்டாக்குகிறது. உலக உற்பத்தியின் ஆரம்பத்தில் இந்த பிராணன் ஆகாசமாகிய பெரிய ஸமுத்திரத்தில் தூங்குகிறது. ஆதியில் இந்த பிராணன் அசைவற்றிருந்தது. பிறகு ஆகாசமாகிற ஸமுத்திரத்தில் அசைவுண்டாயிற்று. அது பிராணனுடைய காரியம்தான். இந்த பிராணன் அங்குமிங்கும் அசையவும் நகரவும் ஆரம்பிக்கவே, அந்த ஸமுத்திரத்தினின்றும், வானத்தில் தோன்றும் பற்பல நக்ஷத்திரக்கூட்டங்களும், சூரிய சந்திரர்களும், பூமி, மனிதன், மிருகம், பூண்டு முதலியவைகளும், பலவகையான சக்திகளும் தோற்றங்களும் உண்டாயின.

இந்துக்களின் கொள்கைப்படி சக்தியின் பலவகைத் தோற்றங்களும் இந்தப் பிராணனேயன்றி வேறல்ல. ஒவ்வொரு வஸ்துவின் தோற்றமும் ஆகாசமே. உலகம் முடியும்போது கட்டிப்பொருள்களெல்லாம் நீர்ப்பொருள்களாகி பிறகு காற்றுப்பொருள்களாகமாறி அதன் பிறகு ஒரே தன்மையதாயிருக்கும் உஷ்ணத்தின் அசைவுகளா

கவும் கடைசியில் ஆகாசமாகவும் ஆகின்றன. நாம் கவர்ச்சி, பிரயோகம், அசைவு என்று சொல்லுகிற சகல சக்திகளும் மெள்ள மெள்ள பிராணனாக மாறுகின்றன. அதன் பிறகு பிராணன் சில காலம்வரை நித்திரை செய்வதுபோல் அசைவற்றிருக்கிறது. மறுபடியும் உலக ஆரம்பத்தில் இந்த பிராணனே பற்பல சக்திகளாக ஆய்விடுகிறது. இப்படியே உலக சிருஷ்டியும் அழிவும் அடிக்கடி உண்டாகின்றன. நமது கையிலுள்ள பலம் ஒருவனை யடிக்கும்போது வெளிப்படுகிறது. அதுபோல் அசைவற்றிருக்கும் பிராணன் அசைந்து ஆகாசத்துடன் சேர்ந்து சகல வஸ்துக்களாகவும், சகல சக்திகளாகவும் ஆகி உலகமாய்க் காணப்படும்போது தன்னிருப்பைப்பிறருக்கு அறிவிக்கிறது. மேற்கூறிய விஷயங்களை தற்காலத்திய ஜட தத்துவ சாஸ்திரிகள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். என்றாலும் உலகத்தை ஆகாசமாகவும் பிராணனாகவும் பிரித்திருக்கிறது போதாது. அதாவது இவ்வுலகத்திலிருக்கும் சூரிய சந்திராதி நக்ஷத்திரங்களும், மனுஷியன், மிருகம், பக்ஷி முதலியவைகளும், மரம், மலை, புல், பூண்டுகளும், இன்னும் பலவகையான வஸ்துக்களும், ரூபங்களும், தோற்றங்களும், சக்திகளும் சேர்ந்து ஆகாசம் பிராணன் என்னும் இரண்டு வஸ்துக்களாலானவைகளே யன்றி வேறல்லவென்பது மட்டும் போதாது. இவ்வளவுதான் ஜடதத்துவ சாஸ்திரிகளுக்குத் தெரியும். இன்னும் நாம் "எந்த ஒரு வஸ்துவினால் எல்லா வஸ்துக்களையுமறியலா" மென்பதைத் தெரிந்துகொள்ளவில்லை. நாம் இந்த உலகம் முழுவதையும் (அதாவது இவ்வுலகத்திலுள்ள பொருள்களெல்லாவற்றையும்) வஸ்து, சக்தியென்ற இரண்டு கூறுகளாகவும் அதாவது நம்முடைய இந்திய தத்துவசாஸ்திரிகளின் அபிப்பிராயப்படி ஆகாசம், பிராணன் என்ற இரண்டு பிரிவுகளாகவும் பிரித்திருக்கிறோம். இதன் பிறகு நாம் செய்யவேண்டிய காரியம் என்ன? இந்த ஆகாசமும் பிராணனும் எதனாலுண்டானவை என்றறியவேண்டும். இவைகளை யுண்டாக்கியது யாது. இவ்விரண்டும் எந்த ஒன்றிலிருந்து உண்டாயிருக்கின்றனவென்பதே நாம் கேட்கும் கேள்வி. இவைகள் **மனம்** என்பதினின்றும் உண்டாயின. எங்கும் நிறைந்த **மனோசக்தியினால்** ஆகாசமும, பிராணனும் தோன்றியிருக்கின்றன. இந்த மனதுதான் மகத் எனப்படுகிறது. மனதானது ஆகாசம், பிராணன் என்பவைகளைவிட அதிக நுட்பமானது. மனந்தான் ஆகாசமாயும் பிராணனாயும் பிரிகிறது. ஆதியில் எங்கும் நிறைந்த இந்த மனசு ஒன்றுதானிருந்தது. அது தோன்றி, மாறி, ஆகாசம், பிராணன் என்ற இரண்டு பிரிவுகளாகி அவைகளினின்றும் உலகம் உண்டாயிற்று. (அதாவது உலகத்திலுள்ள சகல பொருள்களும் உண்டாயின.)

நாம் இதன்பிறகு மனோதத்துவத்தைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம். மனதின் தன்மை எப்படிப்பட்டதென ஆலோசிப்போம். நான் உங்களைப் பார்க்கிறேன். என்னுடைய கண்களால் எனக்கு வெளியுணர்ச்சிகள் வருகின்றன (கொண்டுவரப்படுகின்றன). இவ்வுணர்ச்சிகள் பஞ்சேந்திரியங்களில் சம்பந்தப்பட்ட நாடிகளால் மூளைக்குக் கொண்டுபோகப்படுகின்றன. வெளியேயிருக்கும் கண்கள் பார்க்கும் கருவிகளன்று. (திருஷ்டி இந்திரியங்களல்ல. திருஷ்டி உறுப்புகளல்ல) அவைகள் வெளியந்திரங்கள். ஏனெனில் உள்ளேயிருக்கும் கண்ணிந்திரியம் அதாவது மூளைக்கு உணர்ச்சிகளைக் கொண்டுபோகிற அல்லது அனுப்புகிற உறுப்பு நாசமானால் எனக்கு 20-கண்ணிருக்கட்டும். என்ன பிரயோஜனம்? உங்களில் ஒருவனைக் கூட நான் பார்க்கமுடியாது. ஆதலின் உறுப்பு வேறு, அதன் யந்திரம் வேறு. யந்திரங்களுக்குப் பின்னால், அதாவது, கண்களுக்குப் பின்னால் உறுப்பு இருக்கவேண்டும். இந்தமாதிரியே பஞ்சேந்திரியங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. மூக்கு வாசனை யறிகிறதில்லை. அது வாசனை யறிவதற்கான கருவி. அதற்குப் பின்னாலிருப்பதே வாசனை யிந்திரியம் (வாசனை யறியும் உறுப்பு). ஒவ்வொரு இந்திரியத்திற்கும் முதலில் கருவியும் (இது தேகத்திலிருக்கிறது,) அதன்பின்னால் அதே சரீரத்தில் உறுப்புமிருக்கிறது. என்றாலும் இவைகள் மட்டும் போதாது. அதாவது பஞ்ச இந்திரியங்களும், அவைகளின் கருவிகளும் இருந்தால்மட்டும் போதாது. நான் உன்னுடன் பேசிக்கொண்டிருப்பதாகவும், அதை நீ வெகு கவனமாய்க் கேட்டுக்கொண்டிருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். இன்னொன்று நேரிடுகிறது. ஒருமணியோசை யுண்டாகிறது. ஒருவேளை நீ அந்த சப்தத்தையே கேட்காமலிருக்கக்கூடும். மணியோசை யுண்டாயிற்றென்று ஒரு சமயம் உனக்குத் தெரியாமலே போய்விடும். மணியோசையின் அசைவுகள் உன் காதுக்குள் வந்தன. அவைகள் காதிலிருக்கும் ஓர் வகையான கருவியில் விழுந்தன; அந்த உணர்ச்சியை நாடிகள் மூளைக்குக்கொண்டுபோயின. அப்படியிருந்தும் நீ ஏன் அதைக்கேட்கவில்லை. மூளைக்குச் சங்கதி தெரியும்வரை சகல காரியங்களும் சரியாக நடந்திருக்கும்போது நீ ஏன் மணியோசையைக் கேட்கவில்லை. உனக்கேன் மணியிலிருந்து உண்டான ஓசை தெரியவில்லை. ஏதோ ஒன்று அந்த மூளையில் இல்லை. அதுதான் குறைவு. அதுதான் நீ ஓசையை அறியாத காரணம். மனது மூளையில் சேராமலிருந்துவிட்டது. மூளையிலிருந்து மனம் வேறுபட்டிருக்கும்போது மூளை எவ்வளவு சமாசாரங்களைக் கொண்டுவந்தாலும் மனம் அவைகளை வாங்கிக்கொள்ளாது. மனம் மூளையுடன் கலந்திருந்தால் மட்டும் மூளை கொண்டுவருகிற சமாசாரங்களை அது ஏற்றுக்

கொள்ள முடியும். என்றாலும் இத்துடன் எல்லாம் முடிந்துவிடுகிற தாய் எண்ணத்தகாது. வெளியிலிருந்து உணர்ச்சிகளை யந்திரங்கள் கொண்டுவரலாம், அவைகளை இந்திரியங்கள் உள்ளே யனுப்பலாம். மூளைக்கருவியுடன் மனம் சேர்ந்திருக்கலாம். அப்படியிருந்தும் நீ அவ்வுணர்ச்சிகளைத் தீர்க்கமாய் அறிய முடியாமற்போகும். ஏதோ ஓர் ஓசை கேட்டதுபோல் தோன்றுமேயன்றி அது இன்ன ஓசை யென்று உணரமுடியாது. ஆதலின் மனதைத் தவிர மற்றொரு வஸ்து வேண்டியிருக்கிறது. அந்த வஸ்துவைத்தான் **புத்தி** யென்கிறோம். நம்முடைய எண்ணத்தை நிச்சயப்படுத்துகிறதெதுவோ அதுதான் புத்தி. (ஒருபையன் மனத்தினைக் கவரத்தக்க நாடகத்திற்குப் போகலாமா அல்லது பள்ளிக்கூடத்திற்குப் போகலாமா வென்று நினைக்கிறான். இதுதான் மனதின் காரியம். பிறகு சில நேரத்திற்கெல்லாம் நாடகத்திற்குப் போவது நன்மையல்ல, பள்ளிக்கூடத்திற்குத்தான் போகவேண்டும் என்று நிச்சயிக்கிறான். இதுதான் புத்தியின் காரியம்). ஆதலின் வெளியேயிருந்து வந்த உணர்ச்சிகளை மூளைக்கருவியிடம் பெற்ற மனம் அவைகளைப் புத்தியிடம் கொடுக்கிறது. என்றாலும் இத்துடன் எல்லாம் முடிந்துபோனதாய் எண்ணக்கூடாது. இன்னொருபடி யேறவேண்டும். பஞ்சேந்திரியங்கள், மூளை, மனம், புத்தி ஆகிய இவைகள்மட்டுமிருந்தாற்போதாது. மூளைக்கருவியிட மிருந்து மனம் உணர்ச்சிகளையெல்லாம் மொத்தமாய் வாங்கிக்கொள்ளுகிறது. பலவிதமான அவ்வுணர்ச்சிகளை இன்னின்ன வகையென்று பிரிப்பது புத்தியின் காரியம். அப்படி பிரிக்கப்பட்ட உணர்ச்சிக ளெல்லாவற்றையும் அசையவொட்டாமல் ஓரிடத்தில் வைக்கவேண்டிய தவசியம். அந்த இடமோ அந்த இடமாகிய பொருளோ அசைவற்று என்றென்றைக்கும் அழிவில்லாது உறுதியாயிருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஓர் வஸ்து இல்லாவிட்டால் வெளியுணர்ச்சிகள் ஒருபோதும நிலைக்கமாட்டா. அசையக்கூடிய அவ்வுணர்ச்சிகள் அசைவற்ற ஓரிடத்தில் தங்கவேண்டிய தவசியம். எல்லா உணர்ச்சிகளும் ஒன்றாய்க்கூடி சலனமும் அழிவுமில்லாத ஓரிடத்தில் இருக்கவேண்டிய தவசியமென நாம் நிர்ணயிக்கிறோம். அந்த வஸ்து தேகத்திற்கும் மனத்திற்கும் சம்பந்தப்பட்டதாய் அசைவின்றி யிருக்கவேண்டும். அப்படியில்லாத பக்ஷத்தில் உணர்ச்சி யென்பதே தெரியாமற்போகும். மனதினாலும் புத்தியினாலும் கொண்டுவரப்படுகிற எல்லா உணர்ச்சிகளும் ஒன்றாக்கப்பட்டு அசைவும் அழிவுமில்லாத ஓரிடத்தில் வைக்கப்படவேண்டுமென்றோமே அந்த இடமாகிய வஸ்துதான் **ஆத்மா.** அந்த ஆத்மாவைத் தான் நாம் அறியவேண்டும். அதை யறிந்தோமானால் மற்றவைகளையெல்லாம் அறிவது வெகு சுலபமாகும். எந்த ஒன்றையறிந்தால்

அதன் மூலமாய் மற்றவைகளை யறியலாம் என்றேமோ அந்த ஒன்று தான் ஆத்மாவென்பது. அதுதான் ஏகைகதத்துவம்.

எங்கும் நிறைந்த மனோசக்தியே ஆகாசம் பிராணன் என்கிற இரண்டு பொருள்களாய்ப் பிரிகிறதென்றும், இம்மனோ சக்திக்கு அப்பால் ஆத்மாவென்னும் ஒரு பொருள் நம்மிடத்தில் உண்டென்றும நாம் அறிந்துகொண்டோம். இந்த உலகத்தில் மகத் எனப்படுகிற மனோசக்திக்குப் பின்னுல் ஆத்மா விளங்கிவருகிறது. இவ்வாத்மாவைத்தான் நாம் கடவுளென்கிறோம். ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இருக்கிற இவ்வஸ்துவை ஜீவாத்மா வென்கிறோம். இந்தப் பிரபஞ்சத்தில் மகத் எனப்படுகிற மனது ஆகாசமாயும் பிராணனும் ஆய்விடுகிறதுபோல் ஸர்வ வியாபகராகிய பரமாத்மாவே மனோ சக்தியாக மாறுகிறார். இவ்வாறே மனிதனுக்குள்ளும் ஆகிறதா? மனிதனுடைய மனோ சக்தியாலா அவனது சரீரம் உண்டாயிற்று? அவனுக்குள்ளிருக்கும் ஆத்மாவா அவனுடைய மனதைச் சிருஷ்டித்தது? அதாவது அவனுடைய தேகம், மனம், ஆத்மா ஆகிய மூன்றும் வெவ்வேறு பொருள்களா? அல்லது அவைகள் ஒன்றினுள்ள மூன்று பொருள்களா? அல்லது ஒரே வஸ்துவின் மூன்று வகையான தோற்றங்களா? மெள்ள மெள்ள இக்கேள்விகளுக்குத் தக்க சமாதானத்தைத் தெரிந்துகொள்வோம். நாம் முதலில் அறிந்துகொண்ட விஷயம் இன்னதென்று பார்ப்போம். இதோ நமது சரீரமிருக்கிறது. இதற்குப் பின்னுல் இந்திரியங்கள், மனம், புத்தி ஆகிய இவைகளிருக்கின்றன. இதற்குப்பின்னுல் ஆத்மா இருக்கிறது. ஆரம்பத்தில், நாம் ஆத்மா வேறு தேகம் வேறு, மனதிற்கும் ஆத்மாவுக்கும் வித்தியாச முண்டென்று அறிந்தோம். இதைப்பற்றிப் பற்பல மதஸ்தர்கள் வெவ்வேறு விதமாய் அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள். துவைதிகள் ஆத்மாவை ஸகுணமென்கிறார்கள். அத்வைதிகள் அதை நிர்க்குண மென்கிறார்கள். துவைதிகள் ஆத்மாவுக்கு சுகம், துக்கம் முதலிய குணங்களுண்டென்று கூறுகிறார்கள். அத்வைதிகள் ஆத்மாவுக்கு சுகம் துக்கமுதலிய குணங்கள் கிஞ்சிற்றேனுமில்லை யென்கிறார்கள்.

முதலில், நாம் துவைதிகள் சொல்வதைக் கவனிப்போம். ஆத்மாவுக்கும் அதன் கதிக்கும் உள்ள சம்பந்தத்தை ஆராய்வோம். அதன் பிறகு அவர்களின் கோட்பாடுகளைக் கண்டிக்கும் நியாயங்களைப் பற்றிப் பிரஸ்தாபிப்போம். கடைசியாக அத்வைதத்தினுல் சகல கோட்பாடுகளும் சமரஸப்படுவதை நோக்குவோம். மனிதனுக்குள்ளிருக்கும் இவ்வாத்மா தேகத்துக்கும், மனதிற்கும் சம்பந்தப்படாததாலும், ஆகாசம், பிராணன் என்பவைகளால் ஆக்கப்படாத

தாலும் என்றும் அழிவற்ற வஸ்துவாயிருக்கவேண்டும். ஏன்? அழிவு என்பதால் நாம் எதைக் குறிப்பிடுகிறோம். பிரிந்து போவதை யன்றோ? இது எப்போது கூடும். இரண்டு பொருள்கள் சேர்ந்து ஆயிருக்கும் மற்றொரு பொருளுக்கே பிரிவு என்னும் வார்த்தை பொருந்தும். ஆக்கப்படாத பொருளுக்கு அழிவு இல்லை. அதாவது மரணமில்லை. எத்தனையோ கற்பகோடி காலங்களாக அப்பொருள் இருந்து வருகிறது. அது சிருஷ்டிக்கப்படாத வஸ்து. சிருஷ்டிப் பொருள்களென்றால் இரண்டு மூன்று பொருள்களால் ஆக்கப்பட்டவை யென்றருத்தம்.

ஏற்கனவேயுள்ள இரண்டு மூன்று பொருள்கள் சேர்ந்து வேறு ரூபமாவதே சிருஷ்டி யெனப்படுகிறது. ஆதலின் மனிதனது ஆத்மா இரண்டு வஸ்துக்களால் ஆக்கப்படாத ஒரே பொருளாயிருத்தலால் அது சிருஷ்டிக்கப்பட்டதல்ல. எத்தனையோ கற்பகோடி காலங்களாக இருந்து வருகிறது. தேகம் அழிந்துபோகிறதே யன்றி ஆத்மா அழிகிறதில்லை. வேதாந்திகளின் எண்ணப்படி தேகம் அழியும்போது மனிதனுடைய பிராண சக்திகளெல்லாம் தாங்கள் பிறந்தவிடமாகிய மனதிற்கே போய்விடுகின்றன. மனதும் பிராணனில் ஐக்கியமாகி அந்தப் பிராணன் மனிதனுடைய ஆத்மாவுக்குள் நுழைந்து அவ்வாத்மா மிகவும் மேன்மை பொருந்திய ஓர்வித மனோசரீரம் அல்லது இலிங்க சரீரத்தால் மூடப்பட்டு வெளியே வருகிறது.

இந்த மென்மை பொருந்திய மனோ சரீரத்தில்தான் மனிதனுடைய ஸம்ஸ்காரங்களிருக்கின்றன. ஸம்ஸ்காரங்களென்றாலென்ன? இந்த மனது ஓர் ஏரிபோல் இருக்கிறது. ஒவ்வொரு எண்ணமும் அந்த ஏரியிலுண்டாகும் அலைகளுக்குச் சமானம். ஏரிபோன்ற மனதில் பலவகையான எண்ணங்கள்தோன்றி மறைந்துபோகின்றன வென்றால் அழிந்துபோகின்றன வென்று அருத்தமல்ல. அவைகள் வரவர சூக்ஷ்மமாகின்றன. எல்லாம் அங்கேயேயிருந்து மறுபடியும் வெளியேவரத் தயாராயிருக்கின்றன. நம்முடைய ஞாபகந்தான் மனதாகிய அனேக அலைகளை மறுபடியும் எழுப்புவதற்குத் தகுந்த கருவி. இவ்விதமாக நாம் எண்ணும் எண்ணங்களும் செய்யும் செய்கைகளும் மனதிலேயே குடியிருக்கின்றன: அவைகளெல்லாம் மனதில் சூக்ஷ்மமாய் அடங்கியிருக்கின்றன. மனிதன் இறந்துபோகும் போது அவன் மனதிலுள்ள சூக்ஷ்மமான மனோ விர்த்திகளின் கூட்டமே இந்த லிங்கதேகத்தில் பிரவர்த்திக்கின்றன. ஆத்மா இத்தகைய எண்ணங்களாலும் உணர்ச்சிகளாலும் மிக்க மென்மை பொருந்திய ஓர்வித சரீரத்தாலும் மூடப்பட்டு வெளியே செல்லுகிறது.

அவ்வாத்மாவின் கதி மேற்கூறிய பற்பல விதமான எண்ணங்களின் பிரயோஜனத்தால் நிர்ணயிக்கப்படுகிறது. நம்முடைய இந்து சாஸ்திரப்படி ஆத்மாவுக்கு மூன்று கதிகளுண்டு.

மிகுந்த புண்ணியம் செய்த ஆத்மாக்கள் சூரிய கிரணத்தின் வழியாக சூரியமண்டலத்திற்குச் சென்று பிறகு அங்கிருக்கும் புண்ணியாத்மா வொன்றால் பிரமலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போகப்படுகின்றன. பிரமலோகமே பிரமா வசிக்குமிடம். அங்கே இவ்வாத்மாக்கள் ஸர்வ வல்லமையுடன் அடைந்து ஈசுவரனுக்குச் சமானமாயிருக்கின்றன. துவைதிகளின் கொள்கைப்படி அங்கே அவ்வாத்மாக்கள் எப்போதும் வசித்துக்கொண்டிருக்கின்றன. அல்லது அத்வைதிகளின் அபிப்பிராயப்படி ஈசுவரனிடம் கலந்து ஒன்றாய்விடுகின்றன. புண்ணியகாரியங்களை ஈசுவரார்ப்பணஞ் செய்யாமல் தனக்கென்றே செய்கிற பேர்வழிகள் இறந்துபோனபிறகு சந்திர மண்டலத்திற்குச் சென்று அங்கே நுட்பமாகிய தேவசரீரங்களைப் பெற்று தேவலோகத்தில் வசிக்கிறார்கள். வெகுநாள்வரையும் தேவர்களாயிருந்து சொர்க்கபோகங்களை யடைந்து புண்ணியம் முடிந்தவுடன் பழையகர்மத்தால் பீடிக்கப்பட்டு பூமியில் விழுகிறார்கள். அவர்கள் வாயுமண்டலம் மேகமண்டலங்களின் வழியாக வந்து மழைத்துளிகளாகப் பூமியிலிறங்குகிறார்கள். அங்கே புற் பூண்டுகளாக முளைத்து மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் உணவாகி அவர்களால் ஸ்தூல சரீரத்தைப் பெற்று பூமியில் மறுபடியும் ஜனிக்கிறார்கள்.

மூன்றாவது வகுப்பு மனுஷ்யர்கள், அதாவது பாபிகள் இறந்துபோனபின் பேயாக மாறி சந்திரமண்டலத்திற்கும் பூமிக்கும் மத்தியில் வசிக்கிறார்கள். சில பிசாசுகள் மனிதர்களுக்கு விரோதமாயும் சில சினேகமாயு மிருக்கின்றன. அங்கே சிலநாளிருந்தபிறகு பூமியில் விழுந்து பிராணிகளாய்ப்பிறந்து அதன்பிறகு அம் மிருகசரீரத்தினின்றும் விடுபட்டு மனிதர்களாகி மறுபடியும் மோக்ஷசாதகமான காரியங்களைச் செய்யத்தக்கவர்களாக ஆய்விடுகிறார்கள். கொஞ்சமேனும் ஆசாபாசங்களின்றி நிர்மலசித்தர்களா யிருக்கிறவர்கள் இறந்துபோனபின் சூரியமண்டலத்தின் வழியாய்ப் பிரமலோகம் போகிறார்களென்றும், சொர்க்காதி போகங்களை யிச்சித்து புண்ணியம் செய்கிறவர்கள் சந்திரமண்டலத்தின் வழியாய்ச் சென்று தேவசரீரத்தையடைந்து புண்ணியபலன் முடிந்தவுடன் பூமியில் விழுந்து மனிதர்களாய்ப் பிறந்து மறுபடியும் மோக்ஷமடையவேண்டிய சாதனங்களைச் செய்ய யோக்கியர்க ளாகிறார்களென்றும், பாபிகள் பிசாசுகளாய் மாறி மிருகாதிகளாய்ப் பிறந்து மறுபடியும் மனித ஜன்மத்தை

யடைந்து வீட்டையடையவேண்டிய வழியைத் தேடத்தக்கவர்களா கிறூர்களென்றும் அறிந்துகொண்டோம்.

இந்தப் பூமியைக் கர்மபூமி யென்கிறோம். மனிதனுடைய புண்ய பாபகர்மங்கள் இவ்வுலகத்திலேயே செய்யப்படுகின்றன. ஒரு மனுஷன் சொர்க்கலோகம் போகவேண்டி நற்கருமத்தைச் செய்து தேவரூபத்தை யடைந்து புண்ணியபலன் முடிந்தவுடன் மறுபடியும் தொப்பென்று கர்மபூமியில் விழுகின்றான். இப்படி விழுவதற்குக் காரணம் அவன் ஜன்மாந்திரங்களிற் செய்த பாபகர்மமேயன்றி வேறல்ல. இம்மாதிரியே பிசாசு ஜன்மத்தை யடைந்தவர்கள் அதிலேயே யிருந்து புதிதாய் ஒரு கர்மத்தையும்செய்யாமல் தாங்கள் முந்திச்செய்த பாவத்திற்காக கஷ்டமனுபவித்து அதன் பிறகு மிருகசரீரத்தில் சில நாள் வசித்து அப்போது யாதொரு கர்மத்தையும் செய்யாமலிருந்து கடைசியாக மனுஷசரீரத்தை யடைகிறார்கள். புண்ணிய பாபங்களால் வெகுமதியையும் தண்டனையையும் அடையும்போது புதிதாய் ஒரு கர்மத்தைச் செய்கிறதில்லை. அப்போது சொர்க்கத்தையோ அல்லது நரகத்தையோ அனுபவிக்கிறது மட்டும் உண்டு. புண்ணியமாவது பாபமாவது அதிகமானல் அதன்பலன் உடனே கிடைத்து விடும். ஒருவன் மிகுந்த பாபங்களைச் செய்து சொற்ப புண்ணிய மட்டும் செய்தானானல் முதலில் புண்ணியபலனை யடைந்து பிறகு பாபபலனை யடைவான். மறுபடியும் பூலோகத்திற்குத் திரும்பி வராதிருக்கும் பிரமலோகத்திற்குப்போகும் வழிக்கு தேவயானமென்று பெயர். சொர்க்கத்திற்குச் செல்லும் வழிக்கு பிதிர்யான வென்று பெயர். வேதாந்தத்தின்படி மனிதனே இப்பூமியிலுள்ள சகல வஸ்துக்களிலும் சிரேஷ்டன். இந்தப் பூலோகம்தான் மனிதன் முக்தியடையக்கூடிய சிலாக்கியமான விடம். தேவதைகள் மோக்ஷமடைய வேண்டுமானலும் பூலோகத்தில்தான் பிறக்கவேண்டும். ஆதலின் மனுஷ்யஜன்மமே மோக்ஷமடையத் தகுந்த ஜன்மம்.

பௌத்தர்களின் கொள்கை யென்ன? அவர்கள் ஆத்மா வென்னு மோர்பொருள் உண்டென்பதையே ஒப்புக்கொள்ளுகிற தில்லை. சரீரத்திற்கும் மனத்திற்கும் ஆதாரமாக ஆத்மாவை ஏன் கொள்ளவேண்டும்? மனதும் தேகமுமே போதுமானவை. ஆத்மா எதுக்கு? அதன் உபயோகமென்ன? புதிதாய் ஒருபொருளை ஏன் நாமாகவே வரவழைத்துக் கொள்ளவேண்டும்? என்கிறார்கள். மேற்கூறிய நியாயங்களெல்லாம் பலமானவையே. வெளிநோக்காக நோக்கினல் இந்தக் கேள்விகளெல்லாம் நியாயமாகவே தோன்றுகின்றன. மனதிலும் சரீரத்திலும் சம்பந்தப்படாத ஆத்மாவை அவ்

விரண்டுக்கும் ஆதாரமாகக் கொள்ளுவானேன். மனதும் சரீரமும் இருக்கட்டும். அடிக்கடி மாறுகிற ஜடப்பொருளே சரீரம். அடிக்கடி மாறுகிற மனோவிர்த்திகளே மனது. இவ்விரண்டுக்கும் ஓர்வித ஒற்றுமையை எது உண்டாக்குகிறது? இவ்வித ஒற்றுமை உண்மையாகவேயில்லையென்பதாய் வைத்துக்கொள்வோம். உதாரணமாக, ஓர் தீவட்டியை எடுத்துச் சுற்றுவோம். அதனால் ஓர்வித நெருப்புவட்டமுண்டாகிறது. நிஜமாகவே அப்படிப்பட்ட வட்டமொன்றில்லை. ஆனால் தீவட்டி சுழலுகிறதால் நெருப்புவட்டமொன்று காணப்படுகிறது. அதே மாதிரி இந்த ஜீவனில் ஒற்றுமையென்பதில்லை, நமக்குள் உதிக்கும் ஒவ்வொரு எண்ணமும் வெவ்வேறாகவிருக்கிறது. இப்படி வித்யாஸமான எண்ணங்களெல்லாவற்றையும் ஒருங்குசேர்த்து மனம் என்றோம். இம்மாதிரியே அழிந்துபோகும் பலவகைப்பட்ட வஸ்துக்களின் கூட்டத்தையே பிராணன் என்கிறோம். இதனாலே எல்லாம் ஒன்றிலிருந்துண்டாகிறதென்னும் மயக்கமான கொள்கையை நாமாகவேற்படுத்திக் கொள்ளுகிறோமேயன்றி உண்மையில் அப்படிப்பட்டதொன்றுமில்லையென விசிதமாகிறது. இவ்வுலகத்தில் தேகம் மனம் என்னுமிரண்டு வஸ்துக்கள்தானுண்டு. அவைகட்குப்பின்னால் வேறொரு வஸ்துவை வைக்கத்தகாது. மேற்கூறிய கொள்கையே பௌத்தர்களின் கொள்கை. இக்கொள்கைகளைத் தற்காலத்திய தத்துவசாஸ்திரிகளிற் சிலர் தாங்கள் புதிதாய்க்கண்டுபிடித்ததுபோல் பிரஸ்தாபிக்கின்றனர். பௌத்தர்களின் தத்துவ சாஸ்திரங்களிலெல்லாம் இக்கொள்கையே சிறந்திருக்கிறது. இவ்வுலகமே போதுமானது. வேறு உலகம் எதுக்கு? இவ்வுலகத்திற்கு ஆதாரமாக மற்றொரு உலகத்தை யேன்கொள்ளவேண்டும்? ஒவ்வொரு வஸ்துவும் குணங்களின் சேர்க்கை. இந்த வஸ்துக்களெல்லாம் இன்னொரு வஸ்துவில் ஐக்கியமாகிறதென்று கொள்ளுவானேன்? பொருள் என்னும் வியவகாரம் குணங்களின் மாறுதலால் உண்டாகிறதேயன்றி அவைகளுக்குப் பின்னால் அசைவற்றிருக்கும் மற்றொரு வஸ்துவினாலுண்டாகவில்லை. இம்மாதிரி பௌத்தர்கள் கூறுகின்றனர். இந்தப்புத்தர்களின் நியாயங்களெல்லாம் ஆச்சரியகரமானவை. ஸாதாரண மனுஷ்யன் தன்னுடைய அனுபோகத்தால் மேற்கூறியமாதிரியே தத்துவார்த்தங்களைக் கண்டறிவான். ஆயிரத்தில் ஒருவன்மட்டும் ஆத்மஸ்வரூபத்தை அறியவல்லவன். அனேகருக்கு இவ்வுலகம் மாறி, சுழன்று, சேர்ந்துவருவதுபோல் தோன்றுகிறது. நாம் கடலின் மத்தியைப் பாராமல் கரையோரத்தைக்கண்டு அங்கு அலைகள் மோதி சப்தமுண்டாகிறதை யறிந்து அப்படியே எங்குமிருக்குமென் றெண்ணுகிறோம். இது தவறன்றோ? இவ்வுலகில் ஆத்மாவொன்றுதான் வியாபித்திருக்கிறது. அதைத்தான் அத்வைதிகள் பிரமம் என்று கூறுகி

றார்கள். நாதத்தினுலும் உருவத்தினுலும் இந்தப் பிரமம் வேறுபடுகிறது. ஸமுத்திரத்தின் அலைகளைப்பார். ஒரு அலையாவது ஸமுத்திரத்தினின்று வேறல்ல. வித்யாஸமன்று. ஆனல் அலைகளைக் கடலினின்றும் வித்யாஸப்படுத்துவதென்ன? பெயரும் ரூபமுமே. அலையின் உருவமும் அதற்கு நாம்கொடுத்த பெயரும் அதைச் சமுத்திரத்தினின்றும் வேறுபடுத்துகின்றன. பெயரும் ரூபமும் அழிந்துபோனல் அலைகள் ஸமுத்திரமாகின்றன. யார்தான், உண்மையாகவே ஸமுத்திரத்தையும் அலைகளையும் பிரிக்கவல்லவர்கள்? அதுபோல் இவ்வுலகமுழுவதும் ஒரே பிரம்ம மயமாயிருந்தும் நாம ரூபங்களால் வித்யாஸமான பொருள்களாகக் காணப்படுகிறது. ஒவ்வொரு இடத்திலும் சூரியன் பிரகாசிப்பதுபோல் ஒவ்வொரு பொருளிலும் பிரம்மம் விளங்குகிறது. "நான்" "நீ", என்னும் வித்யாஸம் இல்லை. எல்லாம் ஒன்றுதான். "எல்லாம் நான்" அல்லது எல்லாம் "நீ." இரண்டு என்னும் எண்ணம் முற்றிலும் பிசகு. இந்த உலகமுழுவதும் மேற்கூறிய பிசகானகொள்கையால் உண்டாயிருக்கிறது. மனுஷ்யனுக்கு ஞானம் உண்டானவுடனே அவன் இவ்வுலகத்தில் இரண்டு பொருள்களில்லையென்றும் தானே உலகமென்றும் அறிந்துகொள்ளுகிறுன். நிர்விகாரமாய் நித்ய சுத்தமாய் பரிபூர்ணமாயுள்ள ஆத்மா ஒன்றுதான் இவ்வுலகத்தில் பற்பல ரூபங்களாகத் தோன்றுகிறது. நாமரூபபேதத்தால் அலை கடலினின்றும் வித்யாஸப்படுகிறது. அலையின் ரூபம் ஒழிந்தால் அது கடலாகிறது. அலைக்கு ஆதாரம் கடல். கடலுக்கு ஆதாரம் அலையல்ல. அலையிருக்கும்வரை அதனுடைய ரூபமுண்டு. அலையடங்கினல் அதன் ரூபம் போய்விடுகிறது. மேற்கூறிய நாமரூபங்கள் மாயையால் நேர்ந்தவை. இந்த மாயை தான் ஒருவஸ்து மற்றொரு வஸ்துவினின்றும் வித்யாஸப்படுகிறதைக் காட்டுகிறது. ஆகிலும் இம்மாயைக்கு இருப்பில்லை. ரூபம் ஒருவஸ்துவில் உண்டேயன்றி தனித்திருக்க முடியாது. ஆதலின் மாயை இல்லை. ஆனல் உலகத்தில் இவ்வித வித்யாஸங்களை யுண்டாக்கும் மாயையை எப்படி இல்லையென்று சொல்லலாம்? ஒருமனிதன் இரண்டு என்னும் எண்ணங் கொண்டிருக்கும்வரை இந்த மாயையால் அவன் பீடிக்கப்படுகிறுன். எல்லாம் ஒன்றென்னும் ஞானம் உண்டாய்விட்டால் மாயையும் அவனைவிட்டு விலகிவிடுகிறது.

அப்படியானல் துவைதிகள் சொல்லும் சொர்க்கம் நரகம் என்பன இல்லையா? இறந்துபோனபின் மனிதர்கள் பிசாசுகளாயும் தேவர்களாயும் ஆகிறுர்களென்பது பொய்யா? ஒருவர் வருகிறதுமில்லை போகிறதுமில்லை யென்று அத்வைதிகள் கூறுகின்றனர். நீ எப்படி வரலாம்? போகலாம்? அகண்டமான பொருளே நீயாயிருக்

கும்போது நீ போகக்கூடிய இடமெது? ஒரு பள்ளிக்கூடத்தில் சில சிறு குழந்தைகளைப் பரிக்ஷித்தார்கள். பரிக்ஷைசெய்தவர் அறிவீனத் தால் சிறுவர்களுக்குக் கடினமான கேள்விகளைப் போட்டார். அவர் கேட்ட கேள்விகளில் அடியில்வருவதொன்று. "பூமி ஏன் விழவில்லை?" அவருடைய எண்ணம் யாதெனில் பூமிக்கு 'ஆக்கிரா ணம்' என்னும் சக்தி உண்டென்று குழைந்தைகளுக்கு அறிவிக்கலா மென்பது. அநேக குழந்தைகள் அந்தக் கேள்வியின் தாற்பரியத் தையே அறியமுடியாமல் தங்களுக்குத் தோன்றியவாறு விடைகொ டுத்தார்கள். ஒரு பெண்மாத்திரம் "பூமி எதன்பேரில் விழும்?" என்று ஓர் கேள்விகேட்டாள். பரிக்ஷித்தவரின் கேள்வியே ஆபாஸம். உலகத்தில் மேலென்றும் கீழென்றும் இல்லை. ஒருபக்கத்தை மேல் என்று வைத்துக்கொண்டால்இன்னொருபக்கம் கீழ் என்று ஏற்படும். இம்மாதிரியே ஆத்மாவைப்பற்றிய பிரச்னமும். ஆத்மாவுக்கு ஜனன மரண துக்கத்தை வருவித்துக்கேட்கும் கேள்விகள் அஸந்தர்ப்பம். போகிறதார்? வருகிறதார்? நீ எங்கேயில்லை?நீ இல்லாத ஸ்வர்க்கம்ஏது? மனிதனுடைய ஆத்மா எங்கும் நிறைந்ததன்றோ? அது எங்கே போகக் கூடும்? அது எங்கே போகக்கூடாது? ஆத்மா எங்குமுள்ளது. ஆத லின் பிறப்பிறப்பு என்னும் சொற்பனமும் சொர்க்க நரகம் என்னும் வித்யாஸங்களும் ஞானிகளைக்கண்டால் பறந்து போகின்றன. பூர்ண ஞானிகளல்லாத பேர்வழிகளுக்கு பிரமலோகம்வரை|தோன்றி பிறகு ஒழிந்துபோகிறது. மாயையில் சிக்குண்டவர்களுக்கு சொர்க்கநர கங்கள் எப்போது மிருக்கின்றன.

அப்படியானால் உலகமெல்லாம் சொர்க்கத்துக்குப்போகிறதென் றும், பிறகு புண்யமுடிந்தவுடன் பூமியில் ஜனிக்கிறதென்றும், பாபம் செய்தால் நரகத்தை யனுபவிக்கிறதென்றும் நம்புகிறதே. அதற் கென்னகாரணம்? நான் ஒரு புஸ்தகத்தைப் படிக்கிறேன். அதன் பக்கங்களை ஒவ்வொன்றாய்த் தள்ளுகிறேன். மாறுகிறதெது? வருகி கிறது யார், போகிறது யார்? நானல்ல, புஸ்தகமன்றோ? அதுபோல் ஆத்மாவின் முன்னிலையில் இவ்வுலகம் ஓர் புஸ்தகம்போல் காணப் படுகிறது. ஒவ்வொரு பக்கமாய்ப் படித்துத் தள்ளப்படுகிறதுபோல் ஒவ்வொரு சமயத்திலும் புதிய தோற்றங்கள் உண்டாகின்றன. அதை படித்துத் தள்ளிவிடுகிறோம். புதுஏடு வருகிறது. ஆனால் ஆத்மா எப் போதும் ஒன்றுதான். அதற்கு அழிவில்லை. உலகம் மாறுகிறதே யன்றி ஆத்மா மாறவில்லை. பிறப்பும் இறப்பும் உலகத்திலுண்டு. உன் னிடமில்லை. பூமி சுற்றுவதை அறியாமல் சூரியன் சுற்றுகிறதென்று நாம் தப்பிதமாய் நினைப்பதுபோல் உலகத்திலுள்ள ஜடப்பொருள்கள் அழிந்துபோவதை நாம் அழிந்துபோகிறோமென்று வீணாக நினைத்து

அவதியடைகிறோம். மனிதர்களுடைய மனம் ஒரு நிலைமையிலிருக்கும்போது பூமி, ஆகாசம், சூரியன் சந்திரன், நக்ஷத்திரங்கள் முதலியவைகள் காணப்படுகின்றன. இன்னொரு நிலைமைக்கு வந்தால் சொர்க்கம், நரகம் என்பன தோன்றும். எப்போதும் புண்யசாலிகளாயிருந்து சுவாமி வைகுண்டத்திலும் கைலாஸத்திலும் இருக்கிறாரென்று நினைத்து அவரையே ஸதா தியானம் செய்கிறவர்களுக்கு அவர்கள் இறந்தபின் இந்த ஜகத் மறைந்து வைகுண்டமாயும் கைலாஸமாயும் காணப்படும். தேவலோகம் என்பதும் நரகமென்பதும் மனிதர்கள் தாங்களாகவே உண்டாக்கிக் கொள்வதேயன்றி வேறல்ல. அதாவது மனிதர்களின் புண்யபாபங்களுக்குத் தக்கபடி இந்த ஜெகத்தானது இப்போதிருக்கும் நிலை மாறி சொர்க்கமாயும், பிரமலோகமாயும் நரகமாயும் ஆகிறது. அங்கே தேவர்கள் காணப்படுவார்கள். ஆதலின் துவைதிகள் கூறும் சுவர்க்க நரகவியவகாரங்களை அத்வைதிகள் உண்மை யென்றே ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால் சொர்க்கமென்பதும் நரகமென்பதும் அவனவனுடைய கர்மாவினாலேற்படுகின்றனவே யன்றி வேறல்ல. நமது வாழ்க்கையும் இவ்வுலகமும் பொய்யாயிருந்தும் உண்மையைப்போல் காணப்படுகின்றன. அதுபோல் சுவர்க்க நரகங்களும் நிச்சயமாகத் தோன்றுகின்றன. நாம் இவ்வுலகத்தை மெய்யென்று நம்பினால் சொர்க்க, நரகங்களையும் மெய்யென்றே கொள்ளவேண்டும். இவ்வுலகமெல்லாம் பிரம்மமென்ற உண்மைக் கொள்கையைக் கொண்டவர்களுக்கு சொர்க்கமும் நரகமும் சொற்பனமாகும். உலகத்தையும் அதிலுள்ள இன்பதுன்பங்களையு மட்டும் நிஜமென்று நம்பி சொர்க்க நரகங்களைப் பொய்யென்று நினைப்பவன் மூடனே. நம்மை சரீரிகளென்று நினைப்பதுதான் நாம் தினந்தோறும் செய்யும் பெரும் பிசகு. நம்மைக் கேவலம் மனுஷ்யர்களென்று மதிப்பதைவிட தப்பிதமான எண்ணம் வேறொன்றில்லை. நாம்தான் இவ்வுலகத்திற்குக் காரணமான கடவுள். நாம் கடவுளை வணங்குவதெல்லாம் நம்முடைய ஆத்மாவை வணங்குவதே யன்றி வேறல்ல. நமக்குள்ளிருக்கும் பரமாத்மாவே ஈசுவரன். அவரே நாம், நாமே அவர். வீணாக இவ்வுடலை நாமென்று நினைத்து நலம் குலைவது அறிவீனம். நம்மைப் பாபிகளென்றும் துஷ்டர்களென்றும் நாம் நினைப்பதும் சொல்லிக்கொள்வதும் மதியீனம். பொய்களிற் சிறந்தபொய் இதுதான். பாவியாயிருப்பவன் தான் பாவியைப்பார்க்கக்கூடும். இங்கே ஒரு குழந்தை யிருக்கிறதாக நினைத்துக்கொள்வோம். அதன் முன்னிலையில் ஆயிரம் சவரன்கள் நிறைந்த பையை வைப்போம். ஒரு திருடன்வந்து அத்தனை சவரன்களையும் கொள்ளையடிக்கிறான். குழந்தைக்குத் திருடுகிறானென்ற சங்கதிதெரியுமா ? அதற்கு எல்லாம் ஒன்றுதான். ஏன் ? உள்ளே

(குழந்தையின் மனதிற்குள்) திருடனில்லை. வெளியேயும் திருடனில்லை. பாவிகளுக்கு பாவம் உண்டு. புண்யசாலிகளுக்கு அது தோன்றாது. அதுபோல் துஷ்டர்களுக்கு இவ்வுலகம் நரகமாகிறது. கிறிது புண்யம் செய்தவர்களுக்கு இது சொர்க்கமாகிறது. எல்லா மறிந்த ஞானிகளுக்கு இது பிரம்மமாய்த் தோன்றுகிறது. எப்போதுதான் உன் கண்ணிலுள்ள மங்கல் தெளியும். எதார்த்த ஸ்வரூபத்தை நீ காணமுடியும். மாயை ஒழிந்து ஞானம் உண்டானவுடனே கோடி ஜன்மங்களாகப் பிடித்த ஜனன மரண துக்கங்கள் நிவர்த்தியாகின்றன. தன்னை மனிதன், தேவதை, பிசாசு என்றும் தான் பூமி, சொர்க்கம், நரகம் முதலிய இடங்களில் வஸிக்கிறதாகவும் கண்ட சொற்பனங்களெல்லாம் தொலைந்துபோம். தானே எங்கும் நிறைந்த பிரம்மமென்பதை அறிகிறான். காலம் தனக்குள் இருக்கிறது. காலத்திற்குள் தானில்லை. சுவர்க்கங்கள் தனக்குள்ளிருக்கின்றன. தான் சொர்க்கத்துக்குள்ளில்லை மனிதர்கள் வணங்கும் தேவதைகளெல்லாம் தனக்குள்ளிருக்கின்றன. தான் அவர்களுக்குள் இல்லை. தேவர்கள், மனிதர்கள், புற்பூண்டுகள், மிருகங்கள், கற்கள் ஆகிய இவற்றை யுண்டாக்கினது தான் என்பதாக அறிந்து கொள்வான். மனுஷ்யனுடைய உண்மையான ஸ்வரூபம் அவனுக்குத் தெரிகிறது. இவ்விதமாக மனிதன் நிர்ப்பயமாய் முக்தி யடைகிறான். அதன்பிறகு ஸகலவிதமான மாயைகளும் மறைந்து போகின்றன. துக்கங்களும் பயமும் தொலைகின்றன. பிறப்பும் இறப்பும் நாசமாகின்றன. இன்பதுன்பங்கள், இருந்தவிடம் தெரியாமல் மறைந்து போகின்றன. பூமி, சொர்க்கம், ஜடப்பொருள்கள் மனம் எல்லாம் மறைகின்றன. சகல வஸ்துக்களும் ஒரே பிரம்மமாய்க் காணப்படும். மனிதன் தானே அந்த பிரம்மமென்னும் ஞானத்தை அடைவான். ஆகாசத்தில் பற்பல விதமான மேகங்கள் தோன்றி மறைவதுபோல் நம்முடைய ஆத்மாவின் முன் பூமி, சொர்க்கம், நரகம், சூரியன், சந்திரன், இன்பம், துன்பம் ஆகிய இவைகள் தோன்றி ஒழிந்துபோகின்றன. ஆகாசம் மாறுகிறதில்லை. மேகங்களன்றோ மாறுகின்றன. ஆகாசம் மாறுகிறதென்று நாம் நினைப்பது பிசகு. அதுபோல் நம்மை அசுத்தர்களாக நாம் நினைப்பது தவறு. நாம் காலத்தால் வரையறுக்கப்பட்டவர்களென்றும் நாம் தனிமை (—வேறு) என்பதும் பிசகான எண்ணம். எதார்த்த மனிதன் எங்கும் நிறைந்த ஏகமாகிய பிரம்மமே.

இப்போது இரண்டு கேள்விகள் உண்டாகின்றன. எதார்த்த மனிதனாகிய இந்த பிரம்மத்தை நாம் அடையமுடியுமா? ஆம் முடியும். மாயையினின்று விடுபட்டும் மகான்கள் இவ்வுலகத்தில் இன்னு

மிருக்கிறார்கள். அப்படியானால் பிரம்மத்தைக் கண்டவுடனே அவர்கள் இறந்து போய்விட்டார்களா? நாம் நினைப்பதுபோல் அவ்வளவு சீக்கிரத்தி லிறப்பதில்லை.

ஒரு கோலில் மாட்டிய இரண்டு சக்கரங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன. நான் அவ்விரண்டில் ஏதேனும் ஓர் சக்கரத்தை நிறுத்தி கோலை முறிக்கிறேன். நான் பிடித்த சக்கரம் நின்று விடுகிறது. மற்றொரு சக்கரம் சிறிதுதூரம் சென்று பிறகு விழுந்து விடுகிறது. அதுபோல் ஆத்மா வொருசக்கரம். சரீரமும் மனதும் மற்றொரு சக்கரம். கர்மமென்பது கோல். ஞானமே கையாற் பிடிப்பது. ஆத்மாவென்னும் சக்கரம் நின்றுவிடும். அது வருகிறது போகிறதென்கிற எண்ணம் நின்றுபோம். அது நிராசை பரிபூரணமென்பது விளங்கும். சரீரம் மனது ஆகிய சக்கரத்தில் பழைய கர்மங்கள் ஒட்டிக்கொண்டிருக்கும். ஆதலின் அந்தசக்கரம் சிறிதுநாள் வரை ஓடும். பழையகர்மங்கள் தொலைந்தவுடன் மனமும் சரீரமும் மாண்டுபோகின்றன. ஆத்மா பந்தத்தினின்றும் விடுபடுகிறது. அதன் பிறகு சொர்க்கத்திற்குப் போகிறதென்றும் மறுபடியும் திரும்பி வருகிற தென்றும், பிரமலோகத்துக்குப் போகிறதென்றும் வியவகாரமில்லை. எங்கேபோகிறது? எங்கிருந்து வருகிறது? இம்மாதிரி இந்த ஜன்மத்திலேயே முக்தி யடைகிறவருக்கு ஜீவன் முக்தரென்று பெயர். இந்த ஜீவன் முக்தியை அடைவதே வேதாந்திகளின் கருத்து.

ஒரு காலத்தில் இந்தியாவின் மேற்கரையில் காட்டுமார்க்கமாய் போய்க்கொண்டிருந்தேன். அனேகநாள் நான் வனத்தின் வழியாய் நடந்துபோவதுண்டு. ஒவ்வொருநாளும் அழகான ஏரிகளையும் அவைகளைச் சுற்றியுள்ள மரங்களையும் நான் பார்ப்பது வழக்கம். அவைகள் எவ்வளவு ஆச்சரியமாய்த் தோன்றுகின்றன! அப்படியிருந்தும் வீணாக இவைகளை வனம் என்று சொல்வானேனென்ன ஜனங்களைக் கடிந்துகொண்டேன். ஒருமாதம் இம்மாதிரியாகப் பிரயாணம் போனதில் ஒருநாள் தாகமுண்டாகி அழகான அவ்வேரியில் ஜலமருந்துமாறு கிட்டச் சென்றேன். ஏரி திடீரென்று மறைந்து போயிற்று. உடனே, ஓகோ இது கானல் என்று என்மனதில் பட்டது. அத்துடன் சென்ற ஒரு மாதகாலமாய் நான் பார்த்த ஏரிகளெல்லாம் கானல்களென்று அறிந்துகொண்டேன். இம்மாதிரியே இவ்வுலகமும். இவ்வுலகமாகிய கானலை உண்மையான ஏரியென்று நினைத்து மோசம்போகிறோம். கர்மபந்த மிருக்கும்வரை இவ்வுலகம் நம்மை விடாது. ஞானம் உதயமானால் வரவர இப்பாசங்கள் நீங்கும்.

அப்போது உலகத்தின் உண்மையான ஸ்வரூபம் நமக்குத் தெரிய வரும். ஆனால் இங்கொரு அபாயமுண்டு. ஒவ்வொரு தேசத்திலும் ஜனங்கள் இந்த தத்துவத்தை ஆதாரமாகக்கொண்டு "நான் புண்ய பாபங்களுக்கு அதீதன். என்னை யாதொரு சட்டமும் பந்தப்படுத் தாது. எனக்கிஷ்டமானபடி நான் செய்வேன்" என்று சொல்லுகிறார் கள். இத்தேசத்தில் இம்மாதிரி புகலும் மூடர்கள் வெகுபேருண்டு. அவர்களெல்லாம் "என்னை யொன்றும் பந்திக்காது. நானே கடவுள். எனக்கிஷ்டமானபடி யெல்லாம் நான் செய்யலாம்" என்று கூறுகிறார் கள். இது சரியல்ல. ஆத்மா சகல பந்தங்கட்கும் அதீதமென்பது உண்மையானாலும் மேற்கூறியவர்கள் அவ்வாறு சொல்வது சரியல்ல. சட்டத்துக்குள் பந்தமுண்டு. சட்டத்துக்கு வெளியே முக்தி. முக்தியென்பது ஆத்மாவுக்கு. ஒவ்வொரு நிமிஷமும் நாம் பந்த மின்றி யிருக்கிறோம். தாராளமாய் நடக்கவும் பேசவும் நமக்கு சக்தி யிருப்பதால் நாம் பந்தமில்லாதவர்களே. ஆனால் சிறிது யோசித் தால் நம்முடைய சரீரம் ஓர் கருவியேயன்றி வேறல்ல. கருவிகளுக் குப் பந்தமுண்டு. ஆதலின் எது உண்மை? பந்தமின்மை யென்பது சொற்பனம் தானே? ஒரு கக்ஷியார் பந்தமின்மை யென்பது கிடையா தென்கிறார்கள். மற்றொரு கக்ஷியார் பந்தமென்பது இல்லை யென்கி றார்கள். இது எப்படி நேரிடுகிறது? மனிதன் உண்மையாகவே முக்தனா யிருக்கிறான். எதார்த்த மனிதன் முக்தனின்றி எப்படி யிருக்கக் கூடும்? ஆனால் அவன் மாயாசம்பந்தமான இவ்வுலகத்திற்கு வந்தால் நாமரூபங்களை பெற்று பந்தத்திற்குள்ளாகிறான். ஸ்வய இச்சை யென்பது அருத்தமில்லாத பதம். இச்சை பந்தமின்றி யிருக்க முடி யாது. எதார்த்த மனிதன் பந்தத்தில் அகப்பட்டபின் இச்சையென்ப துண்டாகிறது. மனுஷனுடைய இச்சை பந்தத்திற் கட்டுப்பட்டாலும் அதற்கு ஆதாரமாயுள்ளது கட்டுப்படவில்லை. ஆதலின் மனுஷர்களா யாவது, தேவர்களாயாவது நாமிருக்கும்போது நம்முடைய ஆத்மா முக்தனென்னும் அபிப்பிராயம் நமக்குத் தோன்றுகிறது. நாம் தெரிந்தோ தெரியாமலோ அத்தகைய முக்தியையடைய முயற்சி செய்கிறோம். ஓர் மனிதன் முக்தனானால் அவனை சட்டம் எப்படி கட்டக்கூடும்? இந்த பிரபஞ்சத்திலுள்ள எந்த சட்டமும் அவனைக் கட்டமுடியாது.

அவனே இப்பிரபஞ்சமாய் விளங்குகிறான். அவனே இப் பிர பஞ்சமென்பதும் அவனுக்கு இப்பிரபஞ்சம் இல்லை யென்பதும் ஒன் றே. ஆண், பெண், தேகம் முதலிய பாகுபாடுகளான அற்ப எண்ணங் கள் எதார்த்த மனிதனுக்கு எவ்வாறு தோன்றும்? நான் மனுஷன், நான் மனுஷி, நான் குழந்தை என்று அவன் எப்படி சொல்லுவான்.

அவைகளெல்லாம் பொய்யன்றோ? மனுஷனுக்கு பாத்தியம், ஸ்திரீக்கு பாத்தியம் என்று எவ்வாறு சொல்லலாம்? மனுஷனுமில்லை, ஸ்திரீயுமில்லை. ஆத்மாவுக்கு ஆண், பெண் என்ற ஜாதிவித்யாஸமில்லை. உலகத்தையே நான் வஸ்திரமாக தரித்துக் கொண்டிருக்கிறேன். மேற்கூறிய அபிப்பிராயங்கொண்ட அநேகர் காரியத்தில் ஊழலாயிருக்கிறார்கள். ஏன் ஐயா நீர் பாபகர்மம் செய்கிறீர் என்றால், எல்லாம் மாயை; யாதொரு பாபமும் என்னால் செய்யமுடியாதென்கிறார்கள். அவர்களின் யோக்யதையை நாம் எப்படி அறியலாம். அதற்கு ஒரு உபாயமிருக்கிறது.

நன்மை தீமை ஆகிய இரண்டும் ஆத்மாவின் தோற்றங்களாயினும் நன்மை அதிசமீபமாயும் தீமை சற்று தூரமாயுமுள்ளது. ஆத்மாவை மறைத்துள்ள மேற்கூறிய இரண்டு போர்வைகளில் தீமையைக் கிழித்தபிறகுதான் நன்மைக்குப் போகவேண்டும். ஆத்மாவை அடைகிறவனிடம் என்ன ஒட்டிக்கொண்டிருக்கிறது? சிறிதுகர்மம் ஒட்டிக்கொண்டிருக்கிறது. இந்தக் கர்மமும் முற்பிறப்பில் செய்த நற்கர்மந்தான். பழைய பாபகர்மங்களை முற்றிலும் ஒழிக்காதபேர்கள் உண்மையை அனுபவிக்க முடியாது. ஆதலின் ஆத்மாவை அடையும்போது மனுஷ்யனுக்கு மீதியாயுள்ளது அவனுடைய புண்ய கர்மமே. அவன் தேகியாய் செய்யும் காரியமெல்லாம் நன்மையை நாடியே. எல்லோருடைய நன்மையையும் கோரிக்கொண்டிருக்கிறான். அவனுடைய கைகள் நற்கருமங்களையே செய்கின்றன. அவனுடைய மனம் நல்விஷயங்களையே நாடுகிறது. அவன் எங்கே போனாலும் அவனுடைய வரவைக்கண்டு எல்லோரும் மகிழ்ச்சியடைகிறார்கள். அப்படிப்பட்ட மனுஷன் எங்கேபோனாலும் அவனைக்கண்ட துஷ்டர்களெல்லாம் ஸாதுக்களாகிறார்கள். அவன் பேசாமலிருந்தாலும் அவனுடைய தரிசனமே நன்மையைத்தருகிறது. ஆதலின் அத்தகைய மனுஷ்யர்கள் பாபம் செய்வார்களா? யார் வேண்டுமானாலும் பேசலாம். முட்டாள்கள்கூட பிரஸங்கிக்கலாம். கிளிகள் பேசுகின்றன. பேசுவதொன்று, அனுபோகிப்பதொன்று. தத்துவங்களும் கொள்கைகளும், புஸ்தகங்களும், கோவில்களும் மதங்களும் சிலாக்கியமானவை. ஆனால் ஆத்மாவை தரிசித்து எல்லாம் பிரம்மம் என்னும் ஞானம் உண்டானவுடனே அவைகள் மறைந்துபோகின்றன. உதாரணமாக தேசபடங்கள் சிலாக்கியம்தான். ஆனால் தேசத்தையே பிரத்தியக்ஷமாகப் பார்த்தபின் அப்படங்கள் அனாவசியம். ஆதலின் பிரம்மத்தையறிந்தவர்களுக்கு புண்ய பாபகர்மங்கள் அவசியமில்லை. உண்மையை யறிந்தவர்களிடம் நீ எவ்வளவுதான் தர்க்கம்செய்தாலும் அவர்கள் தங்கள் கொள்கையை விடமாட்டார்கள். நீ ஒரு

தேசத்தைப் பார்த்திருக்கிறதாக எண்ணிக்கொள். அந்த தேசத்தைப்பாராதவன் அது இல்லையென்று உன்னோடு தர்க்கஞ்செய்கிறான். அவன் சொல்வதை எவ்வளவேனும் கவனிப்பையா? கவனிக்க மாட்டாய். ஸ்வாநுபோகத்தால் பிரம்மத்தை யறியாதவன் ஏறக்குறைய நாஸ்திகனேயாகிறான். ஏனெனில் அவனும் ஆத்மவிசாரணை செய்கிறதில்லை. இவனும் ஆத்ம விசாரணை செய்கிறதில்லை.

நல்லது, நாம் ஆத்மவிசாரணைசெய்கிறோம். நம்முடைய ஆத்மாவே இவ்வுலக ரூபமாயிருக்கிறதென்று அறிந்துகொள்ளுகிறோம். அதன்பிறகு நாம் செய்யவேண்டிய காரியமென்ன ? ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு யாதொருவேலையும் செய்யாமல் நாளைக்கழித்துக் கடைசியில் பிராணனை விடுகிறதா ? அவ்வாறிருப்பதால் உலகத்திற்கு என்ன பிரயோஜனம் ? இது பழைய கேள்வி முதலில், அந்த நன்மை உலகத்திற்கேன் போகவேண்டும். அது உலகத்திற்குப் போகவேண்டுமென்பதற்கு ஏதேனும் தகுந்த காரணமுண்டா ? இந்தக்கேள்வியைக் கேட்க எவனுக்கு பாத்தியமுண்டு. " அது உலகத்திற்கு என்ன பயனைத்தரும் ?" என்னும் கேள்வியின் அருத்தமென்ன ? ஒருகுழந்தை கற்கண்டை விரும்புகிறது. நீ மின்சாரத்தைப்பற்றிப் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறாய். அப்போது அந்தக்குழந்தை உன்னைநோக்கி 'என்ன பண்ணிக்கொண்டிருக்கிறாய். அதிலிருந்து கற்கண்டு கிடைக்குமா' வென்கிறது. நீ என்ன பதில் சொல்லுவாய். அதுபோல் மனிதர்கள் எழுந்து 'அத்வைதத்தால் உலகத்திற்கென்ன பிரயோஜனம். ஏதேனும் பணம் கிடைக்குமா' வென்கிறார்கள். வேதாந்தம் படிப்பதால் யாரிடமும் விருப்பமில்லாமற் போய்விடுமென்று ஜனங்கள் நினைத்து பயமடைகிறார்கள். எப்போது வேதாந்தி இவ்வுலகத்திலுள்ள சகலஜனங்களையும் தன் ஆத்மாவாகப் பார்க்கிறானோ அப்போது அவனுக்கு உலகத்திலுள்ள சகலஜீவராசிகளிடத்தும் மிகுந்த தயையுண்டாகிறதென்பது விளங்கவில்லையா ? பெண்சாதி வேதாந்தம்படிப்பதால் தன் புருஷனை பிரத்தியக்ஷதெய்வமென்று அவனை ஏற்றிப்போற்றுவாள். எல்லாம் ஈசுவர ஸ்வரூபமாய்த் தோன்றும். தாய் பிள்ளைகளை கிர்ஷ்ணஸ்வாமியென்று நினைப்பாள். அரசன் சத்துருவைக் கடவுளென்று மதித்து விசுவாசிப்பான். கஷ்டமெல்லாம் சுகமாய் முடியும். அப்போது இப்பிரபஞ்சம் ஆனந்தமயமாய்த்தோன்றும். இந்தபூமியே சுவர்க்கமாக மாறிவிடும். பொறாமை, அஸத்தியம், அகங்காரம் முதலிய துர்க்குணங்கள் தொலைந்துபோம் உலகத்தில் பல பாவனைகளுண்டு. முதலாவது நாம் பிறரைக் கேவலம் மிருகங்களாகவெண்ணி நம்மை மனுஷ்யர்களாக மதிக்கிறோம். பெரியபட்டணங்களில்

எத்தனை தனவான்கள் வண்டியிலுட்கார்ந்துகொண்டு அவைகளை மாடுகளுக்குப்பதிலாய் மனுஷ்யர்களைக்கொண்டு நடத்துகிறார்கள். மாட்டைக்கட்டி யிழுக்கவேண்டிய வண்டியை மனுஷ்யனைக்கொண்டு இழுக்கச்செய்யும் எஜமானன் தன்னைமட்டும் மனுஷ்யனாக நினைத்து மற்றவர்களை மிருகமாகவன்றோ நினைக்கிறான். இந்தபாவனைக்குத்தான் சத்துருபாவனையென்று பெயர். சிலர் சிறிது விவேகத்துடன் நாமும் அயலார்களும் மனுஷ்யர்களே. ஆனால் அவர்கள் தாழ்ந்தவர்கள். நாம் உயர்ந்தவர்கள். ஆதலின் அவர்களிடம் 1000 ரூபா யிருந்தால் நம்மிடம் 10000 ரூபா இருக்கவேண்டும் என்று நினைக்கிறார்கள். இதுதான் உதாசினபாவனை. சத்துருபாவனையை யுடையவன் அயல்வீட்டுக்காரன் தனவானாயிருப்பதை நோக்கி அவனுக்குப் பகவான் தனத்தைக்கொடுத்திருக்கிறார். நமக்கு வறுமைக்கொடுத்திருக்கிறார். ஆதலின் அவனை ஒரேபோடாய்ப்போட்டுக் கொன்று அவனிடமுள்ள தனத்தை அபகரிக்க வேண்டுமென்று நினைப்பான். உதாசினபாவனையுடையவன், கொஞ்சம் விவேகத்துடன் தன்னை உயர்வாகவும் மற்றவர்களைத் தாழ்வாகவும் மதிக்கிறான். இதுதான் சத்துருபாவனைக்கும் உதாசினபாவனைக்குமுள்ள வித்யாஸம். மேற்கூறியபடி யன்றி உலகத்திலுள்ளவர்களை நம்முடைய சகோதரர்களைப்போலெண்ணி அவர்களிடம் நாம் விசுவாஸமாயிருப்பது மித்திரபாவனை. இந்தபாவனையைவிட சிரேஷ்டமான பாவனை ஒன்றுண்டு. அதுதான் ஆத்மபாவனை. அதாவது, சகலஜீவராசிகளையும் நம்முடைய ஆத்மாவைப்போல் பாவிப்பது. உலகத்தில் ஒவ்வொரு மனுஷனும் தன் ஆத்மாவை விரும்புகிறான். ஒவ்வொருவனுக்கும் தன் ஆத்மாவைவிட பிரியகரமான பொருள் வேறொன்றில்லை. மித்திரபாவனையில் எவ்வளவு காலம் அன்யோன்யமிருக்கிறதோ அவ்வளவுகாலம்வரையும் தான் சுகமுண்டு. ஏதேனும் விரோதமுண்டானால் அது முற்கூறிய பாவனைகளெல்லாவற்றிலும் உக்கிரமாய் முடியும். இவ்வித சங்கடம் ஆத்மபாவனையில் கிடையாது. ஆத்மாவிடம் துவேஷம் கொண்ட ஆசாமியே கிடையாது. ஆதலின் வேதாந்திகள் எல்லோரையும் தங்களுடைய ஆத்மாவைப்போல் பாவிக்கின்றனர். அதனால் உலகத்திற்கு அனந்தமான நன்மைகள் விளையுமன்றோ. இவ்வுலகத்திலுள்ள மனுஷ்யன், மரம், புல், பூண்டு, சூரியசந்திர நக்ஷத்திரங்கள் முதலியவெல்லாம் வேதாந்தியை நோக்கி 'தத்துவமஸி' யென்று சொல்லுகின்றன. அதாவது அது நீயாகவேயிருக்கிறாய் என்று பொருள். எதார்த்தமனிதன் எங்கும் நிறைந்த பிரம்மமே.

இவ்வுலகத்தில் வெகுநாளாக விருக்கும் மதங்கள் மூன்று. (1) இந்துமதம். (2) ஸோராஸ்டர்மதம். (3) யூதர்மதம் அவைகளெல்லாவற்றிற்கும் இடையே ஆபத்துகள் உண்டாயினவாயினும் நிலைகெடாமல் நின்றதற்குக் காரணம் அவைகளின் அஸ்திவார பலமேயன்றி வேறல்ல. யூதர்மதம் கிறிஸ்து மதத்தைத் தன்னுள்ளடக்கச்சக்தியற்றதாய் தோல்வியடைந்து போயிற்று. தற்காலமிருக்கும் சில பார்ஸிகளாலே ஸோராஸ்டர் மதம் உயிரோடிருக்கிறதென்னலாம். இவைகளின் கதி இப்படியாக ஹிந்துமதத்தின் நிலைமையை நோக்குவோம். இந்தியாவில் வேதமார்க்கத்தை வேரோடு பெயர்க்கவேண்டி அனேக மதஸ்தர்கள் உண்டானர்கள். அவர்கள் கிளம்பி முக்கரணம் போட்டும் இந்துமதத்தை அசைக்க அவர்களால் முடியாமற் போயிற்று. ஹிந்து வேதாந்தமானது அதற்கு விரோதமாய்க் கிளம்பின. ஸகல மதங்களையும் வாயிற்போட்டுக்கொண்டது. இந்தியாவில் விக்கிராராதனை செய்பவர்களும், துவைதர்களும், ஜெயினர்களும், பௌத்தர்களும் இன்னும் பற்பல மதஸ்தர்களும் உளர். இவர்களெல்லாம் புறப்பட்ட இடம் ஒன்றே. இந்துக்களிலுள்ள சைவம், வைஷ்ணவம் முதலிய சகலமதங்களுக்கும் ஆதாரம் ஒன்றுதான். அதுதான் எல்லோருக்கும் பொது. அப்படிப்பட்ட பொதுவான வஸ்து என்ன? அதைத்தான் நாம் இன்னதென்று அறிந்து கொள்ளவேண்டும். அதுதான் வேதம். ஸர்வமதஸ்தர்களுக்கும் வேதமே ஆதாரம். வேதத்திற்கு ஆதியுமில்லை, அந்தமுமில்லை. ஒரு புஸ்தகத்திற்கு ஆதியும் அந்தமும் இல்லையென்று கூறுவது இங்கிருப்பவர்களுக்கு ஆச்சரியமாயும் பரிகாசமாயும் காணப்படும். ஆனல் வேதம் என்பதால் புஸ்தகம் என்று அருத்தம்கொள்வது பிசகு. பற்பல காலங்களில் பற்பல மகரிஷிகளால் கண்டுபிடிக்கப்பட்ட ஈசுவர சம்பந்தமான விஷயங்களை வேதங்கள். பூமிக்கு எந்த வஸ்துவையும் இழுக்கும் சக்தியுண்டு. இந்த சக்தி இப்போது உண்டானதன்று. நேற்று உண்டானதன்று. பூமி சிருஷ்டிக்கப்பட்டது முதல் அதற்கு இந்த சக்தி உண்டு. அதைச் சில வருஷங்களுக்கு முன் தான் தத்துவசாஸ்திரிகள் அறிந்துகொண்டனர். அதுபோல், வேதம் இன்னகாலத்தி லுண்டாயிற்றென்று கூறுவது அஸங்கதம். ஜீவனும் ஈசுவரனும் ஒன்றென்பது எப்போதும் உண்டாயிருப்பது. அதை நாம் மறந்துபோனாலும் அவைகள் வேருகாமட்டா. இத்தகைய வேதங்களை அத்யயனம் செய்தவர்கள் ரிஷிகள். அவர்களிற் சிலர் பெண்பாலர்கள். இங்கே ஒரு ஆக்ஷேபணையுண்டாகலாம். சட்டங்களுக்கு முடிவில்லாமலிருக்கலாம். ஆரம்பமில்லாதிருப்பதெப்படி யென்று சிலர் ஆக்ஷேபிக்கக்கூடும். வேதத்தில் சிருஷ்டிக்கு ஆதியுமில்லை அந்தமுமில்லையென்று

கூறியிருக்கிறது. படைப்பில்லாத நாளில்லை. தற்காலத்திய ஜடதத்துவசாஸ்திரிகளும் அதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஒன்றுமே யில்லாத காலம் எப்போதாவதிருந்திருக்குமானால் பிராணசக்தி எங்கே யிருந்தது ? சிலர் சுவாமியிடமிருந்ததாக விடையளிப்பார்கள். அப்படியானால் சுவாமி சிறிதுகாலம் சக்தியை மறைத்துக்கொண்டும் சிறிதுகாலம் வெளிப்படுத்திக்கொண்டும் இருந்திருக்கவேண்டும். அப்படி நிலைமை மாறுகிற கடவுள் தற்காலத்திய ஆங்கிலேய ஜடதத்துவசாஸ்திரப்படி இறந்தன்றோ போகவேண்டும். ஆதலின் சிருஷ்டியில்லாத சமயம் ஒருபோதும் இருந்ததில்லை. ஈசுவரன் பிரளயங்கள்தோறும் சூரிய சந்திர நக்ஷத்திராதிகளைப் படைத்து அழிக்கிறார். இதுதான் இந்துக்களின் கொள்கை. இக்கொள்கை தற்காலத்திய ஆங்கிலேய தத்துவ சாஸ்திரிகளின் அபிப்பிராயத்திற்கு ஒத்ததாயிருக்கிறது.

நான் இங்கேநின்று கண்ணை மூடிக்கொண்டு என்னிலையை அறிய விரும்புகிறேன். நான்-நான்-நான்-எனக்கு என்னைப்பற்றி என் மனதில் தோன்றுகிறதென்ன ? சரீரமென்று. அப்படியானால் நான் என்பது மாமிசத்தாலாகிய என் தேகத்தைமட்டுமா குறிக்கிறது ? 'இல்லை,' யென்று வேதங்கள் முறையிடுகின்றன. நான் சரீரத்தில் வசிக்கும் ஓர் சூக்ஷமப்பொருள். நான் சரீரமன்று. சரீரம் இறந்துபோம். நான் இறக்கமாட்டேன். நான் இந்த தேகத்திலிருக்கிறேன். இது இறந்துபோனாலும் நான் இருப்பேன். நான் முந்தியும் இருந்திருக்கிறேன். ஒன்றுமில்லாமல் ஆத்மாவை எப்படி சிருஷ்டிக்கக்கூடும் ? சிருஷ்டி யென்றாலே இரண்டு பொருள்கள் சேர்ந்து உண்டானதென்று அருத்தமாகும். அப்படி உண்டான வஸ்து அழிந்துபோவது அதாவது மறுபடியும் பிரிந்துபோவது நிச்சயம். ஆதலின் ஆத்மா சிருஷ்டிக்கப்பட்டதாயிருந்தால் அது இறந்துபோகவேண்டும். ஆகவே ஆத்மா சிருஷ்டிக்கப்பட்டதல்ல. சிலர் சுகசரீரிகளாய் பாக்கியசாலிகளா யிருக்கின்றனர். சிலர் அழகாயிருக்கின்றனர். சிலர் தைரியசாலிகள். சிலர் மகா ஏழைகளாய்ப் பிறக்கின்றனர். சிலருக்குக் கைகால்களில்லை. சிலர் முழுச்சோம்பேறிகள். இவர்களெல்லாம் ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்டிருந்தால் நியாமுமும் இரக்கமுமுள்ள அவ்வீசுவரன் ஏன் அவர்களை அவ்வாறு படைக்கவேண்டும்? ஈசுவரன் அவ்வளவு பக்ஷபாதமாயிருப்பானேன் ? இப்போது கஷ்டப்படுகிறவர்கள் இன்னொரு ஜன்மத்தில் சுகமடைவார்களென்றால் சரியாய்விடுமா ? மகா நீதியுடனிருக்கும் கருணாநிதியான கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட மாந்தர்கள் ஏன் கஷ்டமடையவேண்டும் ? ஆதலால் தனவானையும், தரித்திரனையும், அழகனையும், அவலக்ஷணனையும்,

புத்திமானும், மூடனும் பிறப்பதற்குத் தக்க காரணங்களிருக்க வேண்டும். அவைகள் அவரவர்கள் முன்செய்த வினையாம். பூர்வ ஜன்ம புண்ய பாபங்களுக்குத் தக்கபடி ஜனங்கள் சுகத்தையும் கஷ்டத்தையும் அனுபவிக்கிறார்கள். மகனுரைக்கும் தந்தை நலம் என்றும் தாயைப்போல் சேய் என்றும் பழமொழிகளுண்டு. தகப்பனுடைய உருவமும் அழகும் சாமர்த்தியமும் விசேஷமாய்ப் புத்திரனுக்கு உண்டாகின்றன.

இது சிற்சில விஷயங்களில் உண்மையானாலும் புத்திரனுடைய குணமெல்லாம் பிதாவினிடமிருந்தே யுண்டாகிறதென்பது நிஜமல்ல. நமக்குண்டாகும் புத்தி, குணம் ஆகிய இவைகள் முன் ஜன்மத்தின் புண்ணியபாப கர்மங்களினாலேயன்றி வேறல்ல. ஆதலின் ஜன்மாந்திரம் உண்டென்று ஏற்படுகிறது. அப்படியானால் முன்ஜன்மத்தில் நாம் செய்த காரியங்களை இந்த ஜன்மத்திலேன் மறந்துபோகிறோம். இதற்குச் சமாதானம் வெகு சுலபமாய்ச் சொல்லலாம். நான் தற்காலம் இங்கிலீஷ் பேசுகிறேன். அது என்னுடைய சொந்த பாஷையல்ல. என்னுடைய சொந்த பாஷையிலுள்ள வார்த்தைகள் என் மனதில் இப்போதில்லை. ஆயினும் அவைகளை நினைத்துக்கொண்டால் உடனே என் ஞாபகத்திற்கு வந்துவிடுகின்றன. நினைவு என்பது மனதென்னும் ஸமுத்திரத்தின் மேற்பாகம். அதனடியில் நம்முடைய அனுபோகங்களெல்லாம் ஆழ்ந்து கிடக்கின்றன. நாம் பிரயத்தனம் செய்தோமானால் சென்ற ஜன்மத்தில் செய்தகாரியங்கள் நம்முடைய நினைவிற்கு வரக்கூடும்.

மேற்கூறியதை நிரூபிக்கவேண்டுமானால் நம்முடைய முன்னோர்களாகிய ரிஷிகளின் காரியத்தைக் கவனிப்பதவசியம். நம்முடைய ஞாபகத்தை நல்ல நிலைமையிற் கொண்டுவரக்கூடிய ஞான நூல்களை ரிஷிகள் செய்திருக்கின்றனர். ஆதலின் மேற்கூறிய நியாயங்களால் ஒவ்வொரு இந்துவும் தன்னை ஆத்மாவாக நினைக்கிறான் என்றறிகிறோம். அவ்வாத்மாவைக் கத்தியால் குத்தமுடியாது. அதை நெருப்பு சுடாது. அதைத் தண்ணீர் நனைக்காது. ஒவ்வொரு ஆத்துமாவும் சுற்றுக்கோடற்று தேகத்தில் மத்திய ஸ்தானத்தைமட்டும் கொண்ட ஓர்வகை வட்டம். மரணமென்பது இந்த மத்தியஸ்தலத்தின் மாறுதலேயன்றி வேறல்ல. ஆத்மா ஜடமன்று. அது எப்போதும் சுத்தமும் நைவுமுடையது. என்ன காரணத்தாலோ அதற்கு மாயாசம்பந்தமுண்டாகி தன்னை ஜடமென்று நினைத்துக்கொள்ளும் வழக்கமுண்டாகிறது. இதற்குக் காரணமின்னதென்று அறியோம். பரிபூர்ணமாய் ஆனந்த மயனாயிருக்கும் ஆத்மா மாயா சம்பந்தத்தால்

ஜீவனென்று நினைக்கப்படுவானேன்? இது கடவுளின் காரியமென்று சிலர் சொல்லுவார்கள். ஆனால் அது தகுந்த சமாதானமாகாது. தகுந்த ஸமாதானம் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் மாயை யென்பது உண்டென்றும் அம்மாயையால் ஆத்மா ஜீவனாக நினைக்கப் படுகிற தென்பதும் நிச்சயமே.

மனுஷ்யனுடைய ஆத்மா அழிவில்லாதது. பூர்ணமாயும் சுத்த மாயுமுள்ளது. மரணமென்பது ஒரு சரீரத்திலிருக்கும் ஆத்மா மற் றொரு சரீரத்திற்கு மாறுவதென்னும் வியவகாரம். இந்த ஜன்ம பலன் பூர்வஜன்ம கர்மங்களாலுண்டானது. இந்த ஜன்மத்தில் நாம் செய் யும் புண்யபாபங்கட்குத் தக்கபடி அடுத்த ஜன்மத்தில் நமக்குப் பலன் கிடைக்கும். ஹிந்து வேதாந்திகளின் கருத்துப் பிரகாரம் யாரும் பாபிகளன்று. சிங்கங்கள் தங்களை ஆடுகளென்று நினைத்துக்கொண்டு சும்மாவிருப்பதுபோல் ஆத்மாவாகிய நாம் நம்மை ஜடமென்று நினை த்து இருவினைகளால் துன்புற்று மாயையில் சிக்கி மனம் வருந்துகி றோம். மாயையைத் தவிர்ப்பவன் உடனே முக்தனாகிறான். கடவுளை யே நமக்குப் பிரியமான பொருளாய் நாம் நினைத்து பக்திசெய்தால் அவருடைய பரம கருணையால் நம்மைச் சூழ்ந்துள்ள மாயை விலகிப் போம். ஸ்ரீ கிர்ஷ்ண பகவான் சொல்லுகிறார். "மனுஷ்யன் இவ்வு லகில் தாமரையிலையைப் போலிருக்கவேண்டும். தாமரை தண்ணீரி லேயே உண்டானாலும் அதனால் நனைகிறதில்லை. அதுபோல் மனுஷ் யன் உலகத்தி லுண்டானது உண்மையானாலும் அவன் உலகவியாபார ங்களில் தன்னுடைய புத்தியைச் செலுத்தாமல் எல்லாக்கர்மங்களை யும் ஈசுவரார்ப்பணஞ்செய்து தன்னுடைய ஹிருதயத்தையும் சரீரத் தையும் கடவுளின் காரியத்திற்கென்று கட்டிப்போட்டால் நிச்சய மாக மோக்ஷத்தையடைவான். நமக்குப் பொருள் கிடைக்கவேண்டு மென்றும் நாம் சுவர்க்கத்தை அடையவேண்டுமென்றும் ஈசுவரனைப் பிரார்த்திப்பது நல்லது. ஆயினும் கடவுளே நமக்கு பிரியகரமான வஸ்துவென்றும் அவரையடைவதே நமக்கு உகந்த காரியமென்றும் மதித்து நாம் அவரை ஆராதிப்பது சிறந்தவிஷயம். முக்தியை அடை வதற்காக முதலில் மாயையைத் தொலைக்கவேண்டும். மாயையொழி வதற்குக் கடவுளின் கிருபைவேண்டும். அந்தக் கிருபையை ஸம் பாதிப்பதற்காக அவரைப் பிரார்த்திக்கவேண்டும். இவ்வாறு ஈசுவர னைப் பிரார்த்திக்கும்போது நம்முடைய மனம் சுத்தமாயிருப்பது அவசியம். அசுத்தமான ஹிருதயத்தை யுடையவர்களுக்கு ஈசுவர கிருபை யொருநாளு முண்டாகாது. ஆதலின் மனுஷ்யன் சுத்தமான ஹிருதயத்துடன் ஈசுவரனிடம் பக்தி செய்தால் அவருடைய கிருபை யின் ஆதரவைக்கொண்டு மாயையை யொழித்து முக்தனாகி பிரம்மா னந்தத்தை யனுபவிப்பான்.

ரோஜா புஷ்பத்திற்கு என்னபேரிட்டாலும் அதன் வாசனை மாறாது. அது எப்போதும் பரிமளத்தையே வீசிக்கொண்டிருக்கும். அதுபோல் இந்துக்கள் பரப்பிரம்மத்தை சிவன், விஷ்ணு, பிரமன், சுப்பிரமண்யன், கணபதியென்று பலவிதமாய்க் கூறுகின்றனர். இதனால் இந்துக்கள் ஒரு தேவனை வணங்காமல் பலதேவர்களை வணங்குகிறார்களென்பது பொருந்துமா? அன்னியமதஸ்தர்கள் இந்துக்களை விக்கிரகாராதனை செய்வது பழிப்புக்கிடமாமா? பரமாத்மாவினிடம் பக்திசெய்வதற்கு நம்முடைய மனம் ஒரேவழியில் நிற்கவேண்டும். அதற்காக இந்துக்கள் எங்கே பார்த்தாலும் தேவாலயங்கள் கட்டி அங்கே விக்கிரகங்களை ஸ்தாபித்து அவைகட்கு வேதமந்திரங்களால் பிராணப் பிரதிஷ்டைபண்ணி எல்லோரும் போய் தரிசிக்கும்படியான ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட விக்கிரகமும் கோவிலும் ஞானிக்கு அவசியமில்லை. ஏனெனில், ஞானி பகவத்ஸ்வரூபத்தை அறிந்திருக்கிறான், அப்படிப்பட்ட ஞானிகள் இக்காலத்தில் இருப்பது அபூர்வம். ஆதலின் சகல மதஸ்தர்களும் கோயில்களுக்குப் போகவேண்டியது அவசியம்தான். விக்கிரகங்களை வணங்க வேண்டியதும் அவசியமே. விக்கிரகத்தில்தானா ஸ்வாமியிருக்கிறார், நம்முடைய மனதில் இல்லையா. வீணாக கல்லையும் செம்பையும் சுவாமியென்று நினைக்கலாமாவெனின், கோயிலில்தானா தேவனிருக்கிறார்? அவர் எங்கும் நிறைந்தவரன்றா? அப்படியானால் அவரை கிறிஸ்துவர்கள் வீட்டிலிருந்தே தியானம் செய்யாமல் கோவிலுக்குப்போய் தொழுவானேன் என்னும் கேள்வியுண்டாகும்.

கிறிஸ்துவர்கள் ஏராளமான திரவியத்தைச் செலவழித்து பிரம்மாண்டமான கோயில்களை யேன் கட்டவேண்டும்? ஏன் சிலுவையை சுத்தமாகவெண்ணி கோயிலில் வைக்கவேண்டும். அவர்கள் மட்டும் சிலுவையை வைக்கலாம். நாம் விக்கிரகத்தை வைத்துக் கொள்ளலாகாதா? இன்னும் நாம் பிள்ளையார் சுழிபோட்டால் கிறிஸ்துவர்கள் நம்மை ஏளனம் செய்கிறார்களன்றோ? அப்படிப்பட்ட கிறிஸ்துவர்கள் எழுதும் கடிதங்களில் சிலுவையைப்போட வில்லையா! கிறிஸ்துவர்கள் சிலுவையை தரித்துக்கொள்ளுகிறார்கள். நம்மவர்கள் இலிங்கத்தைக் கட்டிக்கொள்ளுகிறார்கள். உரோமன்கத்தோலிக் துறவிகள் ஜெபமாலை வைத்துக்கொண்டு ஜெபம் பண்ணுவதை நாம் பல தடவைகளிற் பார்த்திருக்கிறோம். அப்படி யிருக்க ருத்ராக்ஷமாலையும் துளசிமாலையும் நாம் அணிந்துகொண்டால் அதை அநாகரீகமென்று அவர்கள் எப்படி சொல்லலாம். உரோமன் கத்தோலிக் கிறிஸ்துவர்கள் மாதாகோவிலுக்குப் போனால் நாம் ஜெகதீசுவரியான அம்பிகையின் ஆலயத்திற்குப் போகிறோம். ஒருவேளை புரொட

ஸ்டாண்டு பாதிரிகள் விக்கிரகங்களை வைத்துக்கொள்ளாமல் மனதினலே தியானஞ்செய்கிறார்களென்றால் அவர்களும் தங்களுடைய மனதில் தேவனை யோர் ரூபமாகப் பாவித்துத் தானே தியானிக்கவேண்டும். நாம் தேவனையோர் ரூபமாய்பாவித்தது போதாதென்று எதிரில் விக்கிரகமாய் வைத்து ஷோடசோபசாரங்கள் செய்கிறோம். கிறிஸ்துவர்கள் ஜபம் பண்ணும்போது ஏன் ஆகாசத்தைப் பார்க்கிறார்கள். தேவன் ஆகாசத்திலிருக்கிறதென்றும் அதை விட்டுப் பூமியில் இறங்குகிறதில்லையென்றும் விரதம் வைத்துக்கொண்டிருக்கிறாரா? இல்லை. ஆதலின் நாம் மூச்சு விடாமல் உயிரோடிருக்க முடியுமானல் விக்கிரகத்தை வணங்காமல் கடவுளை ஸ்தோத்திரம் செய்யக்கூடும். ஈசுவரன் ஸர்வவியாபகரென்று கதறும் கிறிஸ்துவர்கள் விக்கிரகத்தில் மட்டும் அவர் வியாபிக்கவில்லை யென்று எவ்வாறு சொல்லக்கூடும்? சிநேகர்களாயுள்ள இருவரில் ஒருவர் படத்தை இன்னொருவர் பெற்றுக்கொள்வது ஸகஜம். அதற்குக்காரணம் அப்படத்தைக் காணும்போதெல்லாம் நேசனைப்பார்த்தது போலிருக்கு மென்றதனாலல்லவா? அதுபோல் நமது ஆசைக்குரிய பகவானைக் காண்பதற்காக நாம் விக்கிரகாராதனை செய்தே தீரவேண்டும். இப்படி செய்தாலன்றி தன்னைத்தானறியும் ஞானம் உண்டாகாது. மேற்கூறியவற்றால் கிறிஸ்துமதத்தை நாம் தூஷித்ததாகக் கொள்ளலாகாது. கிறிஸ்துவர்களிற் சிலர் இந்து மத சம்பிரதாயங்களைப் பழிப்பது அனுசிதமென்று மாத்திரம் குறிப்பிட்டோமேயன்றி வேறல்ல.

## கர்மயோகம்.

கர்மம் என்றால் செய்கை என்று அருத்தம். சிலவேளைகளில் இப்பதம் செய்கையைக் குறிப்பதுடன் செய்கையாலுண்டாகும் பயனையும் குறிக்கிறது. முன் ஜென்மத்தில் செய்த புண்ய பாபங்களுக்குத் தக்கபடி இச்சென்மத்தில் நாம் அனுபவிக்கும் பலாபலன்களையும் கர்மமென்றே சொல்லுகிறோம். கர்மயோகத்தில் உபயோகப்படுகிற கர்மம் என்னும் சொல் செய்கை அல்லது காரியம் என்பதை உணர்த்துகிறது. மனிதர்கள் அடையவேண்டிய முக்கியமான பொருள் ஞானமேயன்றி வேறல்ல. அநேகர் ஞானத்தை விரும்பாமல் சுகத்தை நாடுகிறார்கள். சுகத்திற்கு முடிவு உண்டு. சுகந்தான் மனுஷ்யன் அடையவேண்டிய முக்கியமான வஸ்துவென்று சிலர் நினைக்கிறார்கள். இது மதியீனம். சுகமுள்ள விடத்தில் துக்கமுண்டு. சுகத்தையடைகிறவன் துக்கத்தை அடைகிறான். பிள்ளை பிறக்கும்போது சுகமடைகிறோம். அது இறக்கும்போது துக்கமடைகிறோம். இன்றைக்கு, ருசிகரமான பக்ஷணம் சாப்பிடும்போது ஆனந்தம் கொள்ளு

கிறோம். நாளைக்கு அது கிடைக்கவில்லையே யென்று மனவருத்த மடைகிறோம். பணக்காரர்களுக்கு எப்போதும் அறுசுவையுண்டி கிடைக்கிற தென்று சிலர் சொல்லுகிறார்கள். பணக்காரனுக்கு ஏழையைப்போல் பசியுண்டாகிறதில்லை. ஏழைகளுக்கு வருஷமொருமுறை ஜுரம் வந்தால் பணக்காரர்களுக்கு ஆயிரம் தடவை ஜுரம் வருகிறது. ஒருவேளை நல்ல பசியும் சரீர ஆரோக்கியமு மிருப்பதாகவைத்துக்கொண்டாலும் ஜரை யென்பது எல்லோருக்கும் வருவதால் கடினபதார்த்தங்களான மாங்காய் தேங்காய் முதலியவைகளைத் தின்ன யோக்கியமின்றிப் பற்கள் உதிர்ந்துபோகின்றன. அன்றியும் அறுசுவையுண்டிகளை இனி உண்ண முடியாமல் இறந்துபோவோமேயென்னும் துக்கம் ஒவ்வொருவருக்கு முண்டாகிறது. ஆகலின் சுகமுண்டானல் துக்கமுண்டாகு மென்பது நிச்சயம். விடனு யிருப்பவன் இரவெல்லாம விலைமாதருடன் கூடியனுபவித்து மறுநாட் காலையில் தேகம் இளைத்து கண்குழிந்து வியாதிநிறைந்து அவதிப்படுகிறான். அவன் சுகமென்று நினைத்ததெல்லாம் கஷ்டமாக முடிகிறது. நம்முடைய புத்தியீனத்தால் நாம் சுகத்தைப் பெரிதாக நினைக்கிறோம். அறிவாளிகள் ஞானத்தையே பெரிதாக மதிக்கிறார்கள். ஆனல் சுக துக்கங்கள் நமக்கு நன்மையைப் போதிக்கும் ஆசான்க ளென்பதில் ஆக்ஷேபணையில்லை. துக்கமடையும்போது இனி துஷ்கிருத்தியத்தைச் செய்கிறதில்லை யென்று தீர்மானிக்கிறோம். உலகத்தில் நாம் படும் அடியும் இடியும் நம்முடைய மனதில் ஓர்வகையான உணர்ச்சியை யுண்டாக்குகின்றன. ஆடுமாடுகள் பூமியில் நடந்தால் அவைகளின் காற்சுவடுகள் நிலத்திற்படுவதுபோல் நமக்குண்டாகும் துக்கமும், சுகமும், கோபமும் தாபமும், அன்பும் பகையும், நம்மனதில் ஒவ்வொரு அடையாளத்தைச் செய்து பிறகு மறைந்து போகின்றன. இம்மாதிரியான அடையாளங்களெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து மனிதனுடைய குணமாக ஏற்படுகிறது. ஒரு மனுஷ்யனை நல்லவனென்றும் கெட்டவனென்றும் சொல்வது அவனுடைய குறித்த செய்கையொன்றினலல்ல. அவன் பிறந்தநாள்முதல் இதுவரையும் அவனுடைய மனதில் தோன்றின பலவகை உணர்ச்சிகளின் தொகுதியே அவனது குணத்தைக் காட்டும் கருவிகள். நாம் செய்கிற அல்லது அடைகிற நன்மை தீமைகளே நம்முடைய குணத்திற்கான ஏதுக்கள். சில சமயங்களில் சுகத்தைவிட கஷ்டமே நாம் கடைத்தேறுவதற்குத் தகுந்த ஆசாரியனக அமைகிறது.

ஞானமென்பது மனிதனுக் குள்ளேயே யிருக்கிறது. அவனுக்கு வெளியே இல்லை. ஸகல ஞானங்களும் நம்முடைய மனதிற்குள்ளிருக்கின்றன. வெளியே யிருந்து ஞானம் வருகிறதென்பது பேதைமை. அறியாமையால் அவ்வாறு சொல்லுகிறோமே யன்றி

வேறல்ல. ஓர் பெரிய பெட்டிக்குள் பலவிதமான பழங்களிருக்கின்றன. மேலாக வாழைப்பழத்தைக் கொட்டி ஓர் துணியைப்போட்டு மூடியிருக்கிறது. அதனடியில் திவ்யமான மாம்பழங்களைப் பரப்பி ஓர் துணியால் மூடியிருக்கிறது. அதற்கு மடியில் பரிமளம் வீசும் அதிருசியான பலாப்பழங்களைக் கொட்டி வஸ்திரத்தால் மூடியிருக்கிறது. அதற்கு மடியில் விலையுயர்ந்த சீமை இலந்தைப் பழங்களை நிரப்பி நாணயமான பட்டு வஸ்திரத்தால் மூடி யிருக்கிறது. அதற்குமடியில் திவ்வியமான ரத்னமிருக்கிறது. இந்த ரத்னமாகிய ஞானத்தை யடையவேண்டுமானால் மனுஷ்யன் மனமாகிய பெட்டியைத் திறந்து ஒவ்வொன்றாய்ப் பரிசோதிக்கவேண்டும். ஆதலின் ஞானத்தையடையவேண்டு மென்றால் மனதைப் பரிசுத்தமாக்கி அதிலுள்ளவற்றை அறிந்து கொள்வது அவசியம். மனுஷ்யனுடைய மனமே உலகத்திலுள்ள ஸகல புஸ்தகங்களும் நிறைந்த விருப்பிடம். அதை ஆழ்ந்து அறிவதைத் தவிர்த்து வீணாக வெளியேயுள்ள புஸ்தகங்களை மட்டும் படித்துப் பயனென் ? ஆனால் உபாத்தியாயரும் புஸ்தகமும் ஞானத்தை யடைவதற்கு ஓர்வித ஸாதக மென்பதில் தடையில்லை. மனதிற்குள்ளிருக்கும் ஞானத்தைப் பெறுவதற்கு இவ்வுலகம் நல்ல ஸந்தர்ப்பமாய் அதாவது காரணமாயிருக்கிறது. இதற்கொரு உதாரணம் கூறுகிறோம். ஒருவன் ஏழையாகவிருக்கிறான். அவனிடம் மற்றொருவன் சென்று 'அடே! உன் தகப்பனார் மிகுந்த பணக்காரரா யிருந்தார். அவருடைய பணமெல்லாம் எங்கேபோயிற்று ? உன் வீட்டுப் புறக்கடையில் புதைத்திருப்பார். நீ நன்றாக வெட்டிப்பார் என்றான். அவ்வாறே அவன் வெட்டிப்பார்த்து தனத்தையடைந்தான். அதுபோல மனுஷ்யன் தன் மனதிலுள்ள ஞானத்தை உலகமென்னும் ஓர் காரணத்தால் அறிந்து கொள்ளுகிறான். மரத்திலிருந்து இலை விழுந்தது. அது வன் கீழேவிழுந்த தென்று ஓர் அறிவாளி யோசித்து பூமிக்கு ஆக்கிரணம் (இழுத்தல்) என்னும் சக்தி உண்டென்று அறிந்துகொண்டார். மனதிலிருந்து உதித்த ஞானத்திற்கு மரத்திலிருந்து உதிர்ந்த இலை காரணமாக விருந்தது. கட்டையில் நெருப்பு மறைந்திருக்கிறது போல மனுஷ்யனுடைய மனதில் ஞானம் மறைந்திருக்கிறது. கட்டையைத் தேய்த்தால் நெருப்பு உண்டாகிறதுபோல் ஸந்தர்ப்பம் நேர்ந்தால் மனதிலுள்ள ஞானம் வெளிப்படுகிறது. நமக்குள் உண்டாகும் கோபம் தாபம், குணம், அடக்கம்,வினயம்,சந்தோஷம் ஆகிய உணர்ச்சிகளெல்லாம் நாம் இவ்வுலகத்தில் படுகிற அடிக்கும் இடிக்கும் தக்கபடி நம்முடைய மனதிலிருந்தே தோன்றுகின்றன. இந்த அடிகளெல்லாம் கர்மமே. நாம் நம்முடைய ஆயுள் முழுவதும் கர்மத்தைச்செய்து கொண்டிருக்கிறோம். நான் உன்னுடன் பேசுகிறேன். இது கர்மம், நீ கேட்டுக்கொண்டிருக்கிறாய் இது கர்மம், நாம் மூச்சுவிடுகிறது கர்மம், நாம்

நடக்கிறது கர்மம், மனதினலோ அல்லது சரீரத்தாலோ செய்கிற சகல காரியங்களும் கர்மம் தான். நாம் செய்கிற ஒவ்வொரு கர்மமும் நம்முடைய மனதில் ஓர்வித அடையாளத்தைச் செய்கிறது.

சில காரியங்கள் அனேக சிறு காரியங்களின் தொகுதி. நாம் சமுத்திரக்கரையில் நின்றால் அலைகளின் சப்தத்தைக் கேட்கிறோம். ஆகிலும் அவ்வலைகள் ஒவ்வொன்றாக ஒலிக்கும் ஓசையை நாம் கேட்க முடியுமா? இம்மாதிரியாக ஒவ்வொரு கர்மத்தின் அடையாளத்தையும் நாம் காண்பதரிது. ஆனால் அவைகளின் தொகுதியைக் காணலாம்.

ஒரு மனுஷ்யனுடைய உண்மையான குணத்தை அறிய வேண்டுமானல் அவனுடைய ஸாதாரண செயல்களைக் கவனிக்கவேண்டும்.

கர்மததினலே குணம் ஏற்படுகிற தென்பதை நாம் மறக்கலாகாது. உலகத்திலுள்ள ஸகல சக்திகளையும் மனுஷ்யன் அடைந்து உபயோகப்படுத்துகிறன். பெரிய வீடுகளைக் கட்டுகிறன். நீராவியால் கப்பல்களை ஓடடுகிறன். மின்சாரத்தை யறிந்து வண்டிகளையோட்டுகிறன். இன்னும் இதைப்போன்ற அநேக சக்திகளைத்தானுமடைந்து பிறருக்கும் கொடுக்கிறன். இப்படி செய்யும்போ தெல்லாம் அவனுடைய குணம் கொஞ்சம் கொஞ்சமாய் ஏற்பட்டுவருகிறது. உலகத்தில் நாம் பார்க்கிற சகல கட்டடங்களும் காரியங்களும் மனுஷ்யனுடைய நினைவாலே அல்லது இச்சையாலே உண்டானவையென்று அறிகிறோம். இத்தகைய இச்சை அவனுடைய குணத்தினலுண்டாயிற்று. குணம் கர்மாவினலேற்பட்டது. ஆதலின் கர்மத்திற்குத் தக்கபடி இச்சையின் தோற்றமுண்டாகிறது. உலகத்திலுண்டான மகான்களெல்லாம் அரிய காரியங்களைச் செய்து முடித்தனர். அவர்கள் ஒரு ஜென்மத்தில் செய்த கர்மத்தினல் இத்தகைய பலமான இச்சையையும் சக்தியையும் அடையவில்லை. எத்தனையோ ஜன்மங்களாக விடாமற் செய்துவந்த கர்மங்களால் அருமையான காரியங்களை முடித்தனர். இயேசுகிறிஸ்து மதாசாரியராக வேற்பட்டு அனேகரைக் கிறிஸ்துவர்களாக்கியது ஸாமான்யமன்று. அவருடைய தகப்பனுகிய தச்சனிட மிருந்து அவ்வளவு ஸாமார்த்திய முண்டாயிற்றென யாரேனும் சொல்வார்களா? ஆதலின் அவருடைய பூர்வஜன்மங்களின் கர்மபலத்தால் மதஸ்தாபனம் செய்தாரென்பது நன்றாய் விளங்குகிறது. இம்மாதிரியே புத்தருடைய கார்யமும். கேவலம் ஓர் அரசனுடைய மகனென்பதால் புத்தருக்கு அத்தனை சாமர்த்திய முண்டாகவில்லை. அவருடைய பர்வதாகாரமான மனேவிச்சை அநேக ஜென்மங்களிற் செய்த கர்மங்களாலே யுண்டாயிற்று.

ஆதலின் மேற்கூறிய அருமையான காரியங்களெல்லாம் கர்மத்தினலே யுண்டானவை. கஷ்டப்பட்டாலன்றி எவனும் ஓர் பொருளை அடையமாட்டான். இது எப்போது முள்ளவிதி. சிலவேளைகளில் இதற்கு மாருக நினைப்போம். ஆனல் கடைசியில் இதன் உண்மையை அறிந்துகொள்வோம். மனிதன் தான் பணக்காரனுக வேண்டு மென்று சகலப்பிரயத்தினங்களும் செய்து தலைகீழாக விழுகிருன். குட்டிக்கரணம்போடுகிருன். கடைசியில் அவனுக்கு ஒரு காசுகூட மீறுகிறதில்லை. நம்முடைய சரீரசுகத்திற்காக எத்தனையோ பொருள்களை ஸம்பாதிக்கிருேம். கடைசியில் எவ்வளவுமட்டில் அநுபவிக்க பாக்கியம் செய்திருக்கிருேமோ அவ்வளவுதான் அநுபவிப்போம். பெரிய வீட்டைக் கட்டுகிருன். படக்கென்று பிராணன் போகிறது. கட்டியவீட்டை அநுபவிக்க முடியாமற்போகிறதன்ருே. ஒருவன் பெரிய புஸ்தகசாலை யொன்றேற்படுத்திக் கொண்டு அதில் ஆயிரமாயிரமாகப் புஸ்தகங்களை அடுக்கி வைக்கிருன். அந்த முட்டாளுக்கு சில புஸ்தகங்களைமட்டும் தான் படிக்கும் பாக்கியமுண்டாகிறது. இப்படி பாக்கியமுண்டாவது கமர்த்தினலே யன்றி வேறல்ல. நாம் இன்னது அநுபவிக்கலா மென்பதை நம்முடைய கர்மம் நிர்ணயிக்கிறது. நாம் இருக்கும் நிலைமைக்கும் நாமே காரணம். அடுத்த ஜென்மத்தில் நாம் எப்படி ஆகவேண்டுமென்று எண்ணுகிருேமோ அப்படியாவதற்கு நம்மால் முடியும். இப்போதுள்ள நிலைமை பூர்வ ஜன்மவினையால் உண்டானதென்ருல் வரப்போகிற ஜன்மத்தின் நிலைமை இந்த ஜன்மத்தின் கர்மத்தினுலுண்டாகு மென்பதில் தடையென்ன? ஆதலின் நாம் கர்மம் செய்யக் கடமைப்பட்டிருக்கிருேம். கர்மத்தை இப்படி செய்யவேண்டு மென்று தெரிந்து கொள்ளுவானேன்? ஒவ்வொருவரும் ஒவ்வொருகாரியம் செய்கிருர்கள். அது போதாதா வென்ருல் போதாதென்றே சொல்லுவேன். உபயோக மற்றகாரியங்களைச் செய்வதால் வீண்பிரயாசை யுண்டாகிறதேயன்றி தகுந்த பலன்கிடைக்கிறதில்லை. ஸகல கர்மங்களும் மனேசக்தியை விர்த்தி செய்து அதன் மூலமாக ஆத்மாவைக் காணும்படியா யிருக்கவேண்டும்.

மனுஷ்யன் பலவிதமான கருத்துடன் கர்மம்செய்கிருன். கருத்தின்றிக் காரியமுண்டாகாது. சிலர் பிரக்யாதியடைய விரும்புகிருர்கள். சிலர் பணம் சம்பாதிக்க ஆசைப்படுகிருர்கள். சிலருக்கு அதிகாரத்தில் ஆசை. சிலருக்கு சொர்க்கம் கிடைக்கவேண்டு மென்று விருப்பமுண்டு. அதற்காக கர்மம் செய்கிருர்கள். சிலர் இறந்து போனபின் பெயர் இருக்கவேண்டி வெகு பிரயாசைப் பட்டு உழைக்கிருர்கள். இம்மாதிரி ஒவ்வொருவரும் ஒவ்வொரு நன்மையை யுத்தேசித்துக் கர்மம் செய்கிருர்கள்.

கர்மத்தைக் கர்மத்திற்காகவே செய். சிலருக்குப் பேரும் பிரக்யாதியும் அவசியமில்லை. நன்மைசெய்வது நன்மையென்று தோன்றுவதால் அவர்கள் நற்கருமத்தைச் செய்கின்றனர். பெயரை அடையவேண்டுமென்று செய்யும் பிரயத்தினங்களெல்லாம் தேறினாலும் கடைசி காலத்தில் கொஞ்சம் பெயருண்டாகிறது. சுவயநன்மையைத் தவிர்த்து கர்மம் செய்கிறவர்களுக்கு வெகு சீக்கிரமாக மகிமையுண்டாகும். அவர்களிடம் உலகமெல்லாம் பிரீதி கொள்ளும். அப்படிப்பட்டவர்களுக்கு ஆத்மஞானம் சுலபமாய்க் கிடைக்கும். சுவய நன்மையைத் தடுப்பது சாமர்த்தியம். நாலு குதிரைகள் கட்டிய வண்டியை ஒன்றின்மேல் மோதும்படி செலுத்துவது ஸாமர்த்தியமா? அல்லது மோதாதபடி குதிரைகளை இழுத்துப்பிடிப்பது சாமர்த்தியமா? கோபத்தை அடைவது புத்திசாலித்தனமா? அதையடக்குவது ஸாமர்த்தியமா? நம்முடைய சக்தியை நம்மிடத்தில் நிறுத்திக்கொள்வது நன்மையன்றோ? சுவய நன்மையைத் தவிர்த்து ஐந்து நிமிஷமாயினும் லோகோபகாரமான செய்கைகளை ஒருவன் செய்தால் அவன் செய்தற்கரிய சகல காரியங்களையும் செய்து முடிப்பான். நாம் இவ்வுலகத்தையே நிஜமென்று நம்பி பொருளை யபேக்ஷித்து அநேகரை மோசம் செய்கிறோம். சற்றுப் பொறுமையுடன் யோசித்தோமானால் இவ்வுலகம் பொய்யென்றும் உண்மையான உலகம் வேறென்றும் அதற்கு இந்தப்பொருள் அவசியமில்லை யென்றும் பிறரை மோசம் செய்யாமலிருப்பதே அவ்வுலகத்தையடைய மார்க்கமென்றும் அறிவோம். ஐயோ! மனிதர்களுக்கு அத்தனை பொறுமையும் புத்தியுமில்லாமற் போயிற்றே.

கர்மம்செய்ய நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அதன் பலனை அடைய பாத்தியப்படவில்லை. பலனைப் பாராட்டவேண்டாம். அதைக் கவனிக்கவேண்டாம். ஒருவனுக்கு உபகாரம் செய்யும்போது அவன் நமக்கு பிரதியுபகாரம் செய்வானோ வென்பதை யோசிக்கலாகாது. அப்படி யோசித்துச் செய்யும் உபகாரம் ஓர்வித வியாபாரமே யன்றி உபகாரமல்ல. ஏதேனும் பெரியகாரியத்தைச் செய்யவேண்டியவன் அதன் பிரயோஜனத்தைக் கருதலாகாது.

கர்மம் எப்படி யிருக்கவேண்டு மென்பது ஓர்கேள்வி. எப்போதும் நாம் கர்மத்தைச் செய்துகொண்டே யிருக்கவேண்டும். ஒரு நிமிஷநேரங்கூட சும்மா விருக்கலாகாது. அப்படியானால் அகர்மம் (வேலைசெய்யாது சும்மாவிருத்தல்) என்பதின் நோக்கமென்ன? எல்லாவற்றையும் துறந்து யாதொரு கர்மமுமின்றி யிருப்பது நன்றா? அல்லது எப்போதும் கர்மம் செய்துகொண்டிருப்பது நன்றா? இவ்விரண்டையும் தனித்தனியாக நோக்கினால் ஒன்றும் நன்றேயன்று. மூடனாயிருப்பவன் ஸர்வஸங்க பரித்தியாகம் செய்துவிட்டேனென்று

சொல்லிக்கொண்டு சும்மாவிருந்தால் சாகவேண்டியது தான். சமுத்திரத்திலிருந்த மீன் கரைக்கு வந்தால் உயிரைவிடுகிறது. அதுபோல் உலகத்திலுழன்று திரிந்த மூடன் அதைத்துறந்தால் துன்பமடைகிறான். இம்மாதிரியே காடுகளில் ஏகாந்தமாக வசித்த பேர்வழிகளை உலகத்திற்குக் கொண்டுவந்தால் ஒரு நிமிஷத்தில் கெட்டு அழிந்து போவார்கள். உலகத்தில் எப்பொழுதும் உழன்று திரிகிறவர்களைத் தனிமையாக ஓரிடத்தில் வசிக்கச்செய்தால் உடனே இறந்து போவார்கள். ஞானியானவன் கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் செய்கிறான். ஜனகமகாராஜன் சகல ஸம்பத்துகளுடன் ராஜ்யபாரம் செய்தாலும் அவைகளிற் கிஞ்சிற்றேனும் சிந்தைவைக்காமல் பகவானிடமே பக்திசெய்தார். மௌனயோகிகள் பார்வைக்கு சும்மா விருந்தாலும் ஒரு நிமிஷம்கூட வியர்த்தமாகாமல் ஈசுவரத்தியானம் செய்கின்றனர். இதுதான் கர்மயோகத்தின் தன்மை. இதை அடைந்தவனே கர்மத்தின் ரகஸ்யத்தை யறிந்தவனாகிறான். ஆரம்பத்தில் ஒரு கருத்தை யுத்தேசித்துக் கர்மங்களைச்செய்து பிறகு வரவர சுவயநன்மையைப் போக்கி பலத்தை விரும்பாமல் கர்மம் செய்தோமானால் கடைசியில் பகவானுடைய பரம கருணையால் ஞானத்தையடைவோம்.

---

## இல்லறம்—துறவறம்.

மனிதர்களுக்கு ஸாத்வீகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று குணங்களுண்டு. சில சமயங்களில் இடத்தைவிட்டுப் பெயராமல் உட்கார்ந்தபடியாய் யாதொருவேலையு மின்றி சோம்பலாயிருக்கிறோம். இது தாமஸகுணத்தின் தன்மை. சில வேளைகளில் நமக்கு மிகுந்த சுறுசுறுப்பும் ஊக்கமுமுண்டாகின்றன. இதுதான் ராஜஸகுணத்தின் சுபாவம். வேறு சில சமயங்களில் சோம்பலும் சுறுசுறுப்புமில்லாமல் நிதானமாய்க் காரியங்களைச் செய்கிறோம். இது தான் ஸாத்வீககுணத்தின் ஸாரம். சில மனிதர்களுக்கு மேற்கூறிய முக்குணங்களில் ஏதேனுமொன்று அதிகமா யிருக்கிறது. ஒருவனுடைய சுபாவம் சோம்பலாயிருப்பது. ஒருவனுடைய சுபாவம் சுறுசுறுப்பாயிருப்பது. மற்றொரு மனிதனிடம் சாந்தமும், நிதானமும் காரியம் அகாரியமென்னும் விபவகாரங்களால் உண்டாகின்றன இவ்வுலகத்திலுள்ள சர்வப் பிராணிகளிடமும் இம்மாதிரியான மூன்று குணங்களில் ஏதேனும் ஒன்று விசேஷமாயிருப்பதை நாம் காண்கிறோம்.

கர்மயோகத்தில் மேற்கூறிய முக்குணங்களைப் பற்றியும் பிரஸ்தாபிக்கப்படும். மேற்கூறிய குணங்கள் எத்தன்மையையுடையன.

வென்றும் அவைகளை நாம் எவ்வாறு உபயோகிக்கவேண்டிய தென்றும் தெரிந்துகொள்வது அவசியம். மனுஷ்யர்கள் தேசங்கள் தோறும் வெவ்வேறு ஆசாரங்களை அனுஷ்டிக்கிறார்கள். ஒரு தேசத்தாருக்கு நன்மையென்று தோன்றும் விஷயம் மற்றொரு தேசத்தாருக்குத் தீமையாய்க் காணப்படுகிறது.

ஆசாரியர்களெல்லாம், பொறுமையா யிருக்கவேண்டு மென்று போதிக்கிறார்கள். எவனாவது உன்னுடைய இடது கன்னத்தில் ஓரறைகொடுத்தால் நீ அவன்பேரில் கோபம் கொள்ளாமல் உன்னுடைய வலது கன்னத்திலும் அடிக்கும்படி அவனை வேண்டிக்கொள்ளென்று பொறுமையைப்பற்றி அநேக ஆசாரியர்கள் விசேஷமாய்க் கூறுகின்றனர். தீமை செய்கிறவர்களிடம் பொறுமை பாராட்டுவதே நியாயம் என்று பெரியோர் கூறுவதுண்டு. இந்த மாதிரியான அபிப்பிராயத்தை நாம் இனி அனுசரித்தோமானால் உலகத்தில் கட்டுப்பாடின்றி கெட்டுப்போகும். துஷ்டர்களெல்லாம் நம்முடைய சொத்துகளைக் கைக்கொண்டு நம்மைத் துரத்தி விடுவார்கள். இம்மாதிரி பொறுமையை நாம் ஒருநாள் அனுஷ்டித்தாலும் அனர்த்த முண்டாய்விடும். அநேகர் யாதொரு காரியமும் செய்யாமல் சுத்த சோம்பேறிகளாய் தங்களை ஸாதுக்களென்று மாத்திரம் சொல்லிக்கொண்டு திரிவது அறிவீனமே. ஒருவன் நம்மை யடிப்பதாக வைத்துக்கொள்வோம். அவன் பலவானும் நாம் பலவீனர்களாயும் இருப்பதால் அடியைப் பட்டுக்கொண்டு அவனைத் தண்டிக்க வகையின்றி சும்மாவிருக்கிறோம். யாரேனும் நம்மைச் சும்மா விருப்பானேனென்று கேட்டால் நாம் ஸாது, நமக்குப் பொறுமையே பூஷணம், அதனால் பொறுமையா யிருந்தோமென்று சொல்லிக்கொள்வது பேதைமை. ஆனால் உண்மையாக நாம் பலமுள்ளவர்களா யிருந்து அவ்விதம் சும்மாவிருந்தால் பொறுமையா யிருந்ததாகவே ஏற்படும். ஏழையாயிருப்பவன் தனக்கு தங்க நகைகளின்பேரில் ஆசையில்லையென்று சொல்லிக்கொண்டால் அவன் ஆசையை யொழித்ததாக எண்ணப்படுவானா? ஒருக்காலும் எண்ணப்படான். முன் பாரத யுத்தம் நடந்தபோது பீஷ்மர், துரோணர், கிருபர் முதலிய பெரியோர்களையும் பந்துக்களையும் யுத்தரங்கத்தில் கண்ட அர்ச்சுனன் பந்துத்தனமென்னு மாசையினால் அவர்களைக் கொல்லாமல் தேர்த்தட்டில் சும்மாவிருந்து விட்டான். அவனை ஸ்ரீ கிர்ஷ்ணமூர்த்தி கோபித்துக்கொண்டு க்ஷத்திரிய தர்மத்தை அவன் கைவிடுவது பிசகென்றும், கேவலம் சத்துருக்களைக் கண்டு ஓர்வித விசுவாஸத்தாலோ அல்லது பயத்தாலோ யுத்தம் செய்யாமல் சும்மாவிருப்பது க்ஷத்திரியர்களின் தர்மத்திற்கு விரோதமென்றும், இப்படி கர்மலோபியாவது தோஷமென்றும் கூறினார். ஆதலின் நாம் செய்ய

வேண்டிய கர்மத்தைச் செய்யாமல் தவிர்ப்பது மிகுந்த பாபமாகிறது. எவன் தன்னை வெறுத்துக் கொள்ளுகிறானோ, தன்னைப் பாபியென்று நினைக்கிறானோ அவனைப்போல் மூடனில்லை. நம்முடைய சரீரமும் கர்மமுமே நாம் மோக்ஷமடைவதற்குத் தகுந்த ஸாதனம். நாம் செய்யவேண்டிய முதற்காரியம் நம்மை வெறுத்துக்கொள்ளாததுதான். நம்மிடம் நமக்கு நம்பிக்கையும் விசுவாஸமும் இல்லாமற்போனால் நாம் கடைத்தேறுவதெப்படி? தன்னிடம் நம்பிக்கையில்லாதவன் கடவுளிடமும் நம்பிக்கை கொள்ளான். நாம் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி நமது கடமையும் நன்னடக்கையும் மாறுகின்றன வென்பதை அறிந்துகொள்ளவேண்டும். தன்னை யெதிர்த்தவனைத் தான் கொல்லும் ஸாமர்த்தியமுடையவன் சும்மா விருப்பது புண்யமாகும். தன்னை யெதிர்த்தவனைத் தன்னுடைய பலஹீனத்தாலும் அதைரியத்தாலும் தான் தகையாமலிருப்பது பாபமாகும். நாம் முக்தியடைய வேண்டுமானால் ஜன்மாந்திரம், வேதம், ஈசுவராராதனை, வர்ணாசிரம தர்மம் இவைகளில் நமக்கு விசுவாஸம் வேண்டும்.

ஜன்மாந்திரமாவது யாது? நம்முடைய ஆத்மா இப்போது வஸிக்கும் சரீரத்தை யடையுமுன் வேறு சரீரங்களை யடைந்திருந்ததும் இனி இறந்தபின் புதிய சரீரங்களை யடைவதுமே ஜன்மாந்திரம். அதாவது முற்பிறப்பு மறுபிறப்பு என்னும் வியவகாரங்கள் ஜன்மாந்திரம் எனப்படும். இந்த ஜன்மாந்திர ஸித்தாந்தத்தைக் கிறிஸ்துவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்களுக்கு முன்னிருந்த யூதர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த ஸித்தாந்தத்தை தேசாந்திரிகள் நன்றாய்ப் பரிசீலனை செய்யவில்லை. நம்மவர்கள் ஜன்மாந்திரத்திலும் தேவதாபக்தியிலும் விசுவாஸமுள்ளவர்கள். சிலர் ஜன்மாந்திரத்திற்கு விரோதமாய் அர்த்தம் செய்கிறார்கள். தகப்பனுக்குப்பிள்ளை பிறப்பது ஜன்மாந்திரமென்கிறார்கள். இது போலி ஜன்மாந்திரமேயன்றி வேறல்ல. சில ஆங்கிலேய சாஸ்திரிகள் குரங்கிலிருந்து மனுஷ்யனுண்டானானென்று கூறுகின்றனர். பல்லி, பாம்பு, உடும்பு, முதலை இவைகளெல்லாம் ஓர்வகைப் பிராணிகளென்றும், இம்மாதிரியே குரங்கு, மனுஷ்யன் ஆகிய இவர்கள் ஒருவகைப் பொருள்களென்றும் கூறுகின்றனர். இதெல்லாம் முற்றிலும் பிசகு. நம்முடைய ஆத்மா சரீரத்திற்குள்ளடங்கியிருக்கிறது. இந்த சரீரம் ஒழிந்துபோனால் அது இன்னொரு சரீரத்தை அடைகிறது. இவ்வாறு ஒவ்வொரு ஜன்மத்திலும் சரீரத்தை விடுகிறதும் பெறுகிறதுமாயிருக்கும் ஆத்மா யாதொரு சரீரத்தையும் அடையாமலிருக்கும் நிலைமையைப் பெறக்கூடும். அப்போதுதான் முக்தியென்பதுண்டாகிறது. இத்தகைய முக்தியை யடைவதற்கு ஞானம் அவசியம். ஜன்மாந்தி

ரம் உண்டென்று யார் கண்டார்களென்று கூறும் பேர்வழிகள் தங்கள் முதுகைத்தாங்கள் பார்க்கிறார்களா? அவர்கள் தங்கள் முதுகைத் தாங்கள் பார்க்காமலிருந்தும் முதுகென்று ஓர் வஸ்துவிருக்கிறதென்பதை யொப்புக்கொள்ளுகிறார்க ளல்லவா? அதுபோல் ஜன்மாந்திரம் உண்டென்று நம்பவேண்டிய தவசியமே. ஜீவனும் சரீரமும் உண்டென்று எல்லா மதஸ்தர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். நல்ல வம்சத்திற் பிறந்த ஓர் பையன் சிறுபிராயமுதல் திருடுவதில் புத்தியை செலுத்துகிறான். இவனுக்குத் திருடும்படி கற்பித்தது யார்? ஜன்மாந்திர கர்மமேயன்றி வேறல்ல. போன ஜன்மத்தில் எங்கேயாவது கன்னம் போட்டுக்கொண் டிருக்கும்போதே பாம்புகடியால் இறந்துபோயிருப்பான். அந்த கர்மவிசேஷத்தால் பிறக்கும்போதே திருட்டுத்தொழிலுடன் பிறக்கிறான். இன்னும் சிலர் அயோக்கியர்களுடைய வம்சத்திற் பிறந்தும் சிறுபிராயமுதல் நல்ல காரியங்களைச் செய்துவருகிறார்கள். இந்த குணம் அவர்களுடைய பெற்றோர்களிடமிருந்ததில்லை. ஆதலின் பூர்வ ஜன்மகர்ம விசேஷத்தால் இந்த நற்குணங்கள் தோன்றின. நல்ல சீலனாகிய பிராமணனுடைய வம்சத்திற்பிறந்தும் ஆசாரமின்றி பறையர்வீட்டில் பானம் செய்யும் பேர்வழிகள் முன்ஜன்மத்தில் பறையர்களாயிருந்தவர்களென்று ஊகிக்கலாம். ஒரு மனுஷ்யன் இறந்துபோனபின் அவனுடைய உடலை நேராகப் பார்த்துக்கொண்டே ஐயோ பாவம் இறந்துவிட்டானென்கிறார்கள். இங்கே இறந்துவிட்டானென்பது யாரைக் குறிக்கிறது. இறந்துபோனவனுடைய ஆத்மாவையன்றோ? ஆத்மா இறக்குமோ? ஒருநாளும் இறக்காது. ஆதலின் இங்கு இறந்ததென்பதின்பொருள் ஆத்மா தேகத்தைவிட்டுப் பிரிந்ததென்பதே யன்றி வேறல்ல. முன் இணைந்திருந்தாலன்றி இப்போது பிரியமுடியாது. எப்போது ஆத்மாவும் தேகமும் இணைந்தது? சிலர் மனுஷ்யன் குழந்தையாய்ப் பிறந்தவுடன் ஆத்மாவும் தேகத்தில் பிரவேசிக்கிறதென்கிறார்கள். இவர்களுக்கு இவ்வளவுதான் தெரியும். வைத்தியர்களைக்கேட்டால் அவர்கள் குழந்தை கர்ப்பத்திலுற்பத்தியாகும்போதே ஆத்மாவும் சரீரமும் உண்டாய்விட்டதென்பார்கள். எங்கிருந்து இந்த ஆத்மா வந்ததென்பது ஓர் கேள்வி. இந்தக் கேள்வியை யோசித்துப்பார்த்தால் ஜன்மாந்திரம் உண்டென்று புலப்படும். சிறிய விதையொன்றை ஓர் நிலத்திற் போடுகிறோம். அது பெரிய மரமாகிறது. அதனின்றும் பழமுண்டாகிறது. அந்தப்பழத்திலுள்ள விதைகளால் மறுபடியும் மரமுண்டாகிறது. ஆதியில் விதையிலிருந்து மரம் முளைத்ததா, அல்லது மரத்திலிருந்து விதை யுண்டாயிற்றா வென்றால் அதைக் கண்டுபிடிக்க ஒருவராலும் முடியாது. அதுபோல், எப்போது ஜீவனுற்பத்தியானதென்றால், அது உண்டானகாலத்தை யாராகிலும் சொல்லமுடியுமா? ஒருநாளும் சொல்லமுடியாது. ஆத்மா ஸகலப்

பிராணிகளிலும் அந்தரியாமியாயிருக்கிறார். சில மரங்களை அடியில் வெட்டினால் முளைக்காமற் பட்டுப்போம். சில மரங்களை நுனியில் வெட்டினால் பட்டுப்போம். பூவரசமரத்தை நுனியில் வெட்டினால் பட்டுப்போகாமல் மறுபடியும் தழைக்கும். தென்னமரத்தை நுனியில் வெட்டினால் அத்துடன் உபயோகமற்றுப்போம். இதெல்லாம் அவைகளிலுள்ள ஜீவஸ்தானங்களைச் சேதிப்பதாலுண்டாகும் விபரீதங்கள். ஆலம் விதை மிகச்சிறியது. அதிலிருந்து பெரிய விருக்ஷமுண்டாகிறதைப் பிரத்தியக்ஷமாகக் காண்கிறோம். ஆதலின் மரம் முளைப்பதற்குக் காரணமான ஜீவன் மிகவும் சிறிதாகிய அதன் விதையிலன்றோ விருக்கிறது. புளியங்கொட்டையை நடுகிறோம். அது முளைக்கிறது. அப்போது அந்தக்கொட்டை இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து நடுவிலிருந்து ஓர் முளை கிளம்புகிறது. அக்காலத்தில் அந்தக்கொட்டையின் இரண்டு பிரிவுகளையும் நாம் ஒடித்துவிட்டாலும் பாதகமில்லை. அந்த முளை பெரிதாகி மரம் வளருகிறது. ஆதலின் புளியமரத்திற்குக் காரணமான ஜீவன் புளியங்கொட்டையில் ஏதோ ஓரிடத்திலிருக்கிறதாகவன்றோ ஏற்படுகிறது. இம்மாதிரியே சகல பிராணிகளிலுமுள்ள ஜீவன் ஒரு அணுவிலும் அணுவாய் ஏதோ ஓரிடத்திலிருக்கிறதென்றும் அது தன்னினமாகிய வஸ்துக்களை ஆகர்ஷித்து சரீரவளர்ச்சியை யுண்டாக்குகிறதென்றும் அறிகிறோம். நல்ல நிலத்தில் நெல்லை விதைத்தால் கொழுகொழென்று பயிர் விர்த்தியாகிறது, கெட்ட நிலத்தில் விர்த்தியாகிறதில்லை. இதற்கென்ன காரணம்? நல்ல நிலத்தில் போடும் விதை தன்னினமாகிய வஸ்துக்கள் அதிகமிருக்கும் பூமியில் விதைக்கப்படுகிறதால் அவைகளை ஆகர்ஷித்து பயிர்களுக்குச் செழுமையைக் கொடுக்கிறது. கெட்ட நிலத்தில் விதையின் இனத்தைச்சார்ந்த வஸ்துக்களில்லை. ஆதலின் அங்கே பயிர் விர்த்தியாகிறதில்லை. விதைகளை வறுத்தால் அவைகளுக்கு முளைக்கும் குணம் போய்விடுகிறது. அதுபோல், நமது ஜீவனை தபஸ்ஸாகிய நெருப்பினால் வறுத்தால் மறுஜன்மம் உண்டாகாது. சிலர் ஜன்மாந்திரமுண்டென்றால் ஏதோ போன ஜன்மத்தில் நீர்செய்த காரியங்களில் ஏதேனுமொன்றைச் சொல்லும் என்கிறார்கள். அது எப்படி சாத்தியமாகுமென்பதைக் கேள்விகேட்கிறவர்கள் கவனிக்கிறதில்லை. அப்படிப்பட்டவர்களை "நீ இன்றையதினம் சாப்பிட்டையே எத்தனைதரம் அன்னத்தை வாயிற்போட்டுக்கொண்டாய்" என்று கேட்டால், பதில் சொல்லத் தெரியாமல் விழிக்கிறார்கள். இன்றையதினம் நடந்த சங்கதியை நாம் மறந்துபோகக்கூடிய நிலைமையிலிருக்கும்போது போன ஜன்மத்தில் செய்த காரியங்களை எவ்வாறு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளமுடியும். ஆயினும் இரண்டொரு விஷயங்களை நாம் அனுஷ்டிக்கிறோம். ஒரு பசு கன்றை யீன்றவுடன் அந்தக்கன்று பசுவின் முலையில் வாயைவைத்து பாலை யுண்ணுகிறது.

இப்படிச்செய்யும்படி அந்தக் கன்றுக்குச் சொல்லிக்கொடுத்ததார்? எதை மறந்தாலும் ஆகாரத்தை மறக்கும் வாடிக்கை எந்தப் பிராணியிடத்திலுமில்லை. நம்முடைய சிறு பிராயத்தில் யாருடைய வீட்டிலாகிலும் திவ்வியமான துவையல் செய்திருந்து அதை நாம் சாப்பிட்டிருந்தோமானால் சாகும்வரை அந்தத் துவையலின் ஞாபகம் நம்மை விட்டு ஒழிகிறதில்லை. பஞ்சேந்திரியங்களில் நாக்கும் காதும் ஜன்மாந்திரத்தில் அநுபவித்த சுகங்களை இந்த ஜன்மத்தில் மறக்கிறதில்லை. நாயின் குட்டிகள் கண்ணை மூடிக்கொண்டு பாலைக்குடிக்கின்றன. பெரியபாம்பென்றும் அது விஷமுள்ளதென்றும் தெரியாத இளங்குழந்தைப் பருவத்திலும் தாயின் முலைப்பாலைத் தெரிந்துகொள்ளுகிறோம். இளங்குழந்தைகள் சங்கீதத்தைக்கேட்டு மனமகிழ்ந்து அயர்ந்து நித்திரை செய்கின்றன. இவைகளெல்லாம் ஜன்மாந்திர அநுபோகத்தைக் குறிக்கின்றன. ஆதலின் ஆரியர்களுக்கு ஜன்மாந்திரத்தில் நம்பிக்கையுண்டு. இவ்விஷயமாக முன்னொரு சமயம் இந்துப்பிரஸங்கி யொருவருக்கும் கிறிஸ்துவபாதிரியா ரொருவருக்கும் நடந்த சம்பாஷணையை இங்கு வரைகிறோம். பாதிரியார்:—பூர்வீக இந்துக்களும் தற்கால கிறிஸ்துவர்களும் ஜன்மாந்திரமில்லை யென்கிறார்கள். ஆதலின் அவர்கள் புத்திசாலிகள். தற்காலத்திய இந்துக்களும் பூர்வீக கிறிஸ்துவர்களும் ஜன்மாந்திரமுண்டென்று நம்புகிறார்கள். ஆதலின் அவர்கள் அறிவீனர்கள், என்றார். இந்துப்பிரஸங்கி:—ஜன்மாந்திரமில்லை யென்று சொல்லுகிறவர்களை புத்திசாலிகளென்று நீங்கள் சொல்லுகிறபடியே வைத்துக்கொள்வோம். ஒருவனுடைய தாய் வியபசாரம் போனாள். மற்றொருவனுடைய பெண்சாதி அவிசாரியானாள். இவ்விருவர்களில் எவன் வெட்கமின்றி வெளியே வருவான். வியபசாரம் செய்த தாயைப்படைத்தவன் சும்மாவிருந்தால் உலகத்தார் அவனை 'அவிசாரிபிள்ளை, ஆனதால் தான் வெளியே தலையைக்காட்டுகிறதில்லை. வீட்டுக்குள்ளேயே விழுந்துகிடக்கிறான்' என்பார்கள். அவன் வெளியேவந்தால் 'அடே, கொஞ்சமேனும் மானமின்றி அவிசாரிபெற்றபிள்ளை வெளியே வருகிறான்' என்பார்கள். எவ்விதத்திலும் வியபசாரம் செய்த தாயைப்படைத்தவன்பாடு கஷ்டமாகிறது. பெண்சாதி அவிசாரியானால் உடனே அவளை நீக்கிவிட்டு வேறொருவளைக் கல்யாணம் செய்துகொள்ளலாம். அப்போது ஜனங்கள் அவனை மிகுந்த யோக்கியன் என்பார்கள். பெண்சாதி துஷ்டையானதால் அவளை நிராகரித்து வேறொரு நற்பெண்டாட்டியை விவாகம் செய்துகொண்டா னென்று கொண்டாடுவார்கள். அதுபோல், எங்கள் முன்னோர்களெல்லாம் புத்திசாலிகள் என்று நீரே ஒப்புக்கொண்டீர். ஆனதால் புத்திசாலிகளாயிருந்த பேர்வழிகளுக்குப் புத்திரர்களாய்ப்பிறந்த நாங்கள் புத்திசாலிகளாகலாம். உங்கள் முன்னோர்களை மூடர்களென்று நீரே

சொன்னீர். ஆதலின் மூடர்களுக்குப்பிறந்த நீங்கள் இனி அறிவை யடைவது எப்படி? உன்னப்பன் முட்டாள். என்னப்பன் புத்திசாலியென்று ஏற்படுகிறது. ஆதலின் எவ்விதத்திலும் நான் கௌரவமுள்ளவனென்றும், நீர் வெளியே புறப்படக்கூட யோக்யதையில்லாத அகௌரவமுள்ளவரென்றும் தெளிவாகிறதென்றார். பாதிரியார் வெட்கி விடையளிக்கத் தெரியாமல் விழித்தார். ஆதலின் ஜன்மாந்திரமில்லையென்று சொல்வது புத்திக்குறைவினாலேயன்றி வேறல்ல. ஜன்மாந்திரம் உண்டென்று நம்பினால்தான் நமக்கு முக்தி கிடைக்கும். ஜன்மாந்திர விசுவாஸமில்லாதவர்களுக்கு மோக்ஷம் கிடைக்காது.

உன்னுடைய மனதிற்கும் தேகத்திற்கும் கெடுதலை யுண்டாக்கக்கூடிய காரியங்களை நீ நீக்கவேண்டிய தவசியம். "ஒருவரையும் விரோதிக்காதே. என்ன தீங்கு நேரிட்டாலும் பொறுமையாயிரு" என்று புத்திசொல்வது யாருக்கும் எளிது. ஜனங்கள் நம்மை கவனிக்கிறார்களே யென்பதால் நாம் பொறுமையா யிருக்கக்கூடுமே யன்றி நம்முடைய அந்தக்கரணத்தில் நாம் படுகிற அவஸ்தை நமக்கன்றோ தெரியும். பணம் பாஷாணம் என்று வெளியிற் சொல்லுவாய். அப்படி சொல்லும்போதெல்லாம் பணத்தை ஸம்பாதிக்கவேண்டுமென்னும் பிரியம் உனக்கு மிகுதியாயிருக்கும். ஆனதால் முதலில் உலக சுகத்தை அனுபவித்தால் பிறகு அதில் வெறுப்பு தோன்றும். எல்லா இன்பங்களையும் அனுபவித்தால் அவைகள் சிற்றின்பங்களென்று தெளிவாகும். ஸகல ஆசைகளையும் விட்டுவிடவேண்டுமென்று உலக உற்பத்திமுதல் வெகுநாளாக அநேகர் பிரஸங்கிக்கிற வழக்கமுண்டு. ஆனால் அம்மாதிரி ஆசையைத்துறந்தவர்கள் சொற்பமே.

ஒவ்வொருவனும் அவனவனுக்கு இயன்ற அளவு ஏதேனும் ஓர் கர்மத்தைச் செய்யவேண்டும். ஒருவன் செய்கிறமாதிரியே தானும் செய்யத் துணிவது பிசகு. அவனவன் பிரத்யேகமாக ஓரோர் மார்க்கத்தை யனுசரிக்கவேண்டும். இலந்தைமரத்தின் சுபாவத்தைப் பனைமரத்தைக்கொண்டு அறிய முடியாததுபோல் ஒரு ஜாதியாரின் ஆசாரங்களை மற்றொரு ஜாதியாரின் ஆசாரத்தைக்கொண்டு பரிசீலனை செய்யத்தகாது. ஹிந்துக்களுள் பிரம்மசாரி, கிருஹஸ்தன், வானப்பிரஸ்தன், சன்னியாஸியென்று நான்குவகை ஆசிரமங்களுண்டு. அவைகளொவ்வொன்றையும் கொண்டவர்கள் அனுசரிக்கவேண்டிய பல விதிகளிருக்கின்றன. இவ்வாச்சிரமங்களில் ஒன்றைவிட மற்றொன்று உயர்ந்ததென்றெண்ணத்தகாது. ஒவ்வொன்றும் கிரமப்படி அனுஷ்டிக்கப்பட்டால் பெருமையையுடையதென்றே கூறலாம்.

கிருஹஸ்தன் எப்போதும் ஈசுவரப்பிரீதியாகவே ஸகல காரியங்களையும் செய்யவேண்டும். பிரம்மஞானத்தை யடையவேண்டுமென்

பதே அவனுடைய முக்கிய கருத்தாயிருக்கவேண்டும். அவன் எப்போதும் தனக்கேற்பட்ட கர்மங்களைச் செய்து எல்லாவற்றையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்வதவசியம்.

இந்த உலகத்தில் ஒருகாரியத்தைச்செய்து அதன் பலனை நாடாமலிருப்பது கஷ்டமன்றோ? ஒருவனுக்கு உதவிசெய்து அவனிடம் பிரத்யுபகாரத்தை இச்சியாமலிருப்பது ஆச்சரியமன்றோ? ஏதேனும் ஓர் நல்லகாரியத்தைச் செய்து அதனால் விளையும் நன்மையைக் கவனியாமலிருப்பது அஸாத்தியமன்றோ?

கிருஹஸ்தன் எப்போதும் பொருளை ஸம்பாதிக்கவேண்டும். ஆனால் பொய், சூது, புரட்டு முதலியவை செய்து பொருளைத் தேடலாகாது. பிறரிடமுள்ள சொத்துக்களைக் கொள்ளையிடலாகாது. அவன் தன்னுடைய ஜன்மம் ஈசுவரனுக்காகவும் ஏழைகளுக்காகவும் உண்டாயிற்றென்பதை ஒருபோதும் மறக்கலாகாது.

தாயும் தகப்பனும் பிரத்யக்ஷதெய்வங்களென்றறிந்து கிருஹஸ்தனாயிருப்பவன் எப்போதும் அவர்களை வணங்கித் திருப்தி செய்விக்கவேண்டும். தாய் தகப்பன் திருப்தியடைந்தால் ஈசுவரனும் திருப்தியடைகிறார். எவன் தன் பெற்றோர்களிடம் கடுஞ்சொற்களை வழங்காமலிருக்கிறானோ அவனே குணக்ஞன்.

பெற்றோர்களின் முன்னிலையிற் பரிகாஸமான வார்த்தைகளை வசனிக்கலாகாது. அவர்களிடம் கோபத்தையும் ஆத்திரத்தையும் காட்டலாகாது. தாய் தகப்பன் முன்னிலையில் புத்திரர்கள் தலை வணங்கி யிருக்கவேண்டும். அவர்களிருக்கும்போது புத்திரர்கள் மரியாதையாய் நின்றுகொண்டிருக்கவேண்டுமேயன்றி உட்காரலாகாது.

எந்த கிருஹஸ்தன் தன் மாதா, பிதா, மனைவி, மக்களுக்கு போஜனம் முதலியவை கொடுக்காமல் அவர்கள் பசியால் வருந்த தான் மட்டும் வயிற்றை நிரப்புகிறானோ அவன் பாபியாகிறான். இந்த சரீரம் உண்டானதற்குக் காரணம் பெற்றோர்களே. ஆதலின் அவர்களை இரக்ஷிப்பதற்காக புத்திரர்கள் ஸகல சிரமங்களையும் அடையவேண்டியது. எந்த கிருஹஸ்தனும் தன் பெண்சாதியைக் கோபிக்கலாகாது. நிந்திக்கக்கூடாது. தாயைப்போல தாரத்தைக்காப்பாற்றவேண்டியது விதி. கிருஹஸ்தன் எவ்விதமான ஆபத்து நேர்ந்தவிடத்தும் பெண்சாதிமேல் கோபத்தைக்காட்டலாகாது.

எந்த கிருஹஸ்தன் தன்பெண்சாதியைத்தவிர வேறு ஸ்திரீயை மனதினால் நினைக்கிறானோ (கெட்ட எண்ணத்துடன்) அவன் நரகத்திற்குப் போகிறான். இரகஸ்யமாய்க்கூட ஒருமனிதன் அன்னிய ஸ்திரீ

யைத் தொடலாகாது. அவளுடைய வஸ்திரத்தையும் ஸ்பரிசிக்கலாகாது. அவளில்லாத சமயத்திலும் அவளுடைய வஸ்திரத்தைக் கையால் தொடலாகாது.

ஸ்திரீகள் முன்னிலையில் அயோக்கியமான வார்த்தைகளை வசனிப்பதும் தன் பெருமையைப்பற்றிப் பேசிக்கொள்வதும் பிசகு. நான் இதைச் செய்தேன் அதைச் செய்தேன் என்று பெருமை பேசலாகாது.

கிருஹஸ்தன் தன் பெண்சாதியை பணம், துணி, நகை, பிரீதி, விசுவாஸம், மதுரமொழிகள் முதலியவற்றால் திருப்திசெய்யவேண்டும். அவளை யெவ்விதத்திலும் துன்பப்படுத்தலாகாது. எவன் பதிவிரதையான தன் பெண்சாதியின் பிரீதியை அடைகிறானோ அவன் புண்யத்தை யடைந்தவனாகிறான்.

குழந்தைகளின் நான்காம்வயதுவரை அவர்களை நன்றாய்ப்போஷிக்கவேண்டும். ஐந்தாம் வயது பிறந்தவுடன் வித்தியாப்பியாஸம் செய்விக்கவேண்டும். பிள்ளைக்கு 20 வயது ஆய்விட்டால் பிறகு அவனைத் தன்னுடைய மித்திரனாகப் பாவிக்கவேண்டும். இம்மாதிரியே பெண்கள் விஷயத்திலும் தகப்பன் அன்பு பாராட்டி அவர்களைப் பிறருக்குக் கல்யாணம் செய்துகொடுக்கையில் எதேஷ்டமான நகைகளும் பொருள்களும் ஸ்ரீதனமாகக் கொடுக்கவேண்டும்.

இதன்பிறகு ஸஹோதரன் ஸஹோதரிகளையும் அவர்களுடைய குழந்தைகளையும் கிருகஸ்தன் காப்பாற்றவேண்டியது முறைமை. பிறகு ஏழைகளாகிய பந்துக்கள், மித்திரர்கள், வேலையாட்கள் ஆகிய இவர்களை யிரக்ஷிக்கவேண்டும். இதன்பிறகு தன்னுடைய சொந்த வூரிலிருக்கும் பேர்வழிகளைக் காப்பாற்றலாம். ஏராளமாகப் பணமிருந்து தன் பந்துக்களுக்கு அதைச் சிறிதும் உபயோகிக்காமலிருப்பவன் பாபியாகிறான். அதிதிகளை யுபசரிக்கவேண்டியது கிருஹஸ்தனுடைய கடமை.

அதிகமான உணவும், உடுப்பு, சுவயநயம், சரீர அலங்காரம், தலைமயிரை வாரிக்கொள்ளல் ஆகிய இவ்விஷயங்களில் அதிக கவலையும் கொள்ளலாகாது. கிருஹஸ்தன் ஹிருதய சுத்தனாய் அழுக்கற்றசரீரியாய் எப்போதும் சுறுசுறுப்புள்ளவனாய் ஊக்கத்துடனிருக்கவேண்டும்.

சத்துருக்களுக்கு சத்துருவா யிருக்கவேண்டும். அவர்களைக் கட்டாயமாய் எதிர்த்து தன் கடமையைச் செய்யவேண்டும். மூலையிலுட்கார்ந்து அழுதுகொண்டு பொறுமையைப்பற்றி பிரஸங்கிக்க

லாகாது. தன்னுடைய சத்துருக்களின் முன்னிலையில் தன் சௌரியத்தைக் காட்டாதவன் கர்மப்பிரஷ்டனாகிறான். சிநேகிதர்களிடமும் பந்துக்களிடமும் சாந்தமாயிருக்கவேண்டும்.

துஷ்டர்களை வணங்காமலும் அவர்களுக்கு மரியாதை செய்யாமலுமிருப்பது கிருஹஸ்தனுடைய முக்கியமானகடமை. ஏனெனில் துஷ்டர்களை அவன் வணங்கினால் அவர்களுக்கு உதவிசெய்ததுபோலாகும். நல்லவர்களை மரியாதை செய்யாமலிருப்பது பிசகு. கண்டவர்களுடனெல்லாம் சிநேகம் செய்வது தப்பு. வெகுநாட் பழகிய பின் ஒருவனை நண்பனாகக்கொள்வது நன்மை.

கீழ் பிரஸ்தாபிக்கப்படும் மூன்று விஷயங்களைப்பற்றி கிருகஸ்தன் பேசலாகாது. எல்லோருடைய முன்னிலையில் தனக்குக் கிடைத்த பிரக்யாதியைப்பற்றி கூறுவதும் தன்பெயரைப்பற்றியாவது தன் வல்லமையைப்பற்றியாவது புகழ்ந்து பேசுவதும் கூடாது. தன்னுடைய திரவியத்தைப்பற்றியும் தன்னிடம் யாரேனும் ரகஸ்யமாய்ச் சொல்லியிருக்கும் விஷயத்தைப்பற்றியும் வெளியிடுவது தீமை.

கிருஹஸ்தனாயிருக்கிறவன் ஏதேனும் பிசகுசெய்தாலும், அல்லது காரிய ஸாதகமடையாமற்போனாலும், அவைகளைப்பற்றி வெளியே யாரிடமும் சொல்லக்கூடாது. நாம்செய்த குற்றத்தை உலகத்தாரிடம் சொல்வதில் என்ன உபயோகம்? அவைகளை மறுபடியும் திருத்தமுடியாது. ஒவ்வொருவனும் தான்செய்த பிசகுக்குத் தகுந்த பலனை யனுபவித்தே தீரவேண்டும். கிருஹஸ்தன் பிறருடைய உதவியின்றி தானே காரியங்களைத் திருத்திச் சீர்பெற நடத்துவது இயல்பு.

ஒரு மனுஷ்யன் தன்னை ஏழையென்றாவது, பணக்காரனென்றாவது சொல்லிக்கொள்ளலாகாது. தன்னிடமுள்ள திரவியத்தைப்பற்றி தானே பெருமையாகப் பிரஸ்தாபிப்பது அறிவீனம். தன் புத்தியின் படியே நடக்கவேண்டும். அந்தரங்கமான சங்கதிகளைத் தன்மனதிலேயே வைத்துக்கொள்ளவேண்டுமென்று சாஸ்திரம் முறையிடுகிறது.

கிருஹஸ்தனே எல்லோருக்கும் உதவிசெய்யக்கூடியவன். ஸம்பாதிக்கும் திறமையுள்ளவன் அவனே. ஏழைகள், குழந்தைகள், ஸ்திரீகள் ஆகிய எல்லோரும் கிருகஸ்தனாலேயே போஷிக்கப்படுகின்றனர். ஆதலின் குடும்பியாயிருப்பவன் சில காரியங்களைச் செய்தே தீரவேண்டும். அவைகளைச் செய்வதற்குத் தக்க தைரியம் அவனுக்கிருப்பது அவசியம். ஆதலின் அவன் ஏதேனும் அற்பமான ஓர் காரியம் செய்தாலும், எதாவதொன்றில் தவறிப்போனாலும், அதை வெளியிடலாகாது. எந்த வியாபாரத்திலாவது லாப நஷ்டம் வரும்போலிருந்தால் அந்தச் சங்கதியையும் பிறருக்குச் சொல்லக்கூடாது. 'தோழ

னேடும் ஏழமைபேசேல்' என்னும் வாக்கியப்படி நடக்கவேண்டும். உலகத்தில் ஸாதாரணமாக ஜயிக்கிறவர்களிடம் விசுவாஸம் பாராட்டுகிற வழக்கமேயன்றி தோல்வியடைகிறவர்களிடம் பக்ஷம் பாராட்டுகிற வாடிக்கையில்லை. மனுஷ்யன் முதலில் ஞானத்தையும், பிறகு திரவியத்தையும் ஸம்பாதிக்கவேண்டியது. இவ்வாறு அவன் செய்யாவிட்டால் பாபியாகிறான். திரவியத்தை ஸம்பாதிக்காத கிரஹஸ்தன் தன்னினத்தார்களுக்கு துரோகியே.

நமது தேசத்தில் அனேகர் தனவந்தர்களாயிராவிட்டால் இத்தனை நாகரிகமும் சத்திரங்களும் எங்கிருந்துண்டாகும்?

தர்மம்செய்யும் எண்ணத்துடன் பணத்தை ஸம்பாதிப்பது குற்றமல்ல. நல்ல உபாயங்களால் திரவியத்தை ஸம்பாதித்து ஸத்பாத்திரத்தில் செலவழிக்கிறவர்கள் நற்கதியை யடைகிறார்கள். அன்னவர்களுக்கும் குகைகளில் ஏகாந்தமாயிருந்து தவம்செய்கிறவர்களுக்கும் யாதொரு வித்தியாஸமுமில்லை. எவ்விதத்தாலாவது நல்ல பெயரை அடைவது கிரஹஸ்தனுடைய இன்றியமையாத கடமை.

கிரஹஸ்தன் சூதாடுவதையும், துஷ்ட ஸகவாஸம் செய்வதையும் தவிர்த்து பொய்சொல்லாமலும், பிறருக்கு ஹிம்ஸை செய்யாமலுமிருக்கவேண்டும்.

தன்னாலாகாத காரியத்தைச் செய்வதாய் ஆகாசப் பந்தல் போட்டு ஜனங்களை யேமாற்றுகிற வழக்கத்தை ஒழிக்கவேண்டும். ஒரு சமயத்திலாகும் காரியம் மற்றொரு சமயத்திலாகிறதில்லை.

மனுஷ்யன் எப்போதும் உண்மைபேசவேண்டும். ஜனங்கள் விரும்பக்கூடிய மிருதுவான வார்த்தைகளை வசனித்து அவர்களுக்கு நன்மை செய்யவேண்டும். தன்னுடைய தனத்தைப்பற்றிக் கர்வப்படலாகாது. பிறருடைய காரியங்களில் பிரவேசிக்கவுங் கூடாது.

குளங்கள் வெட்டுவதாலும், சாலையோரங்களில் மரங்கள் வைப்பதாலும், மனிதர்களுக்கும் இதர பிராணிகளுக்கும் தர்மசத்திரங்கள் கட்டுவதாலும், வாராவதிகள் சாலைகள் முதலிய உபயோகமுள்ள இடங்களை யுண்டாக்குவதாலும் மகாயோகிகள் அடையக்கூடிய சிறந்த பதவியை கிரஹஸ்தனு படைகிறான்.

மேற்கண்ட கிரஹஸ்தனுடைய கடமைகள் கர்மயோகத்தின் ஓர் பகுதி. கிரஹஸ்தன் யுத்தத்தி லிறந்துபோனல் வீரசொர்க்கத்தை யடைகிறான். தன்னுடைய தேசத்திற்காகவும், மதத்திற்காகவும் சிரமப்பட்டு உயிரை மாய்த்துக்கொள்ளுகிறவன் தபஸ்வித்தியையுடைய யோகிகள் அடையும் நல்ல லோகத்தை யடைகிறான். ஒருவன் செய்யவேண்டியகாரியம் இன்னொருவன் செய்யத்தகாத காரியமாயிருந்தா

னும் இரண்டு காரியங்களின் பலனும் ஒன்றெனமேற்கூறிய நியாயங்களால் விசிதமாகிறது. ஆதலின் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டும் பெரிது. அக்கரைக் கிக்கரை பச்சையென்று ஆடுகள் நினைப்பதுண்டு. இரண்டு கரைகளிலும் புல் ஏதேஷ்டமாக விருந்தும் அவைகளில் ஏதேனும் ஒன்றில் மேய்ந்து வயிற்றை நிரப்பாமல் அடிக்கடி இக்கரைக்கும் அக்கரைக்கும் ஆடுகள் போவது வழக்கம். அதுபோல் மனிதர்கள் இல்லறம் பெரிது, துறவறம் பெரிது என்ற வீண் சண்டைகள் வளர்த்தி ஒன்றையு மனுசரித்துச் சுகம்பெறுமல் நிலைகெட்டலைகிருர்கள்.

முற்காலத்தில் ஓரரசன் இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா? என்னும் கேள்வியைக்கேட்டு சந்தேகம் தீராமல் அலைந்துபட்டுக் கொண்டிருந்தான். கடைசியாக ஓர் சன்னியாஸி அவனிடம்வர அவரைநோக்கி 'சுவாமி, இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதாவென, அவர் கிரமப்படி அனுஷ்டித்தால் இரண்டும் பெரிதுதான், ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வில்லை' யென்றனர். இதை நிரூபிக்க வேண்டுமென, சன்னியாசி அவ்வாறே ஆகட்டுமென்றுர். மறுநாள் சன்னியாசி அரசனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு தேசங்களெல்லாம் சுற்றிக் கடைசியாக ஓர் நகரத்திற்கு வந்தார். அந்நகரத்தில் அன்றையதினம் பெரிய அமளியாயிருந்தது. பேரிகைகளும் மேளதாளங்களும் முழங்கின. தெருக்களில் அநேகர் திவ்யாலங்கிருதர்களாய் நின்றுகொண்டிருந்தனர். சன்னியாஸியும் அரசனும் ஓர் ஓரமாய் நின்று வேடிக்கைபார்த்தார்கள். இப்படியிருக்கும்போது அவ்வூர் அரசகுமாரி எல்லா ஜனங்களையும் பார்த்துக்கொண்டே வந்து கடைசியாக ஓர் பால்ய ஸன்னியாஸியின் கழுத்தில் மாலையைப் போட்டாள்.

வலுவில் வருகிற ஸ்ரீதேவியைக் காலால் உதைத்துத் தள்ளுவதுபோல், அந்த பால்ய சன்னியாசி மாலையை எடுத்துக் கீழே யெறிந்தார். எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். இராஜகன்னிகை அவரது பாதத்தில் விழுந்து வணங்கி, தன்னை மணந்து, தன் பிதாவின் ராஜ்யத்தைக் கைக்கொள்ளுமாறு வேண்டிக்கொண்டாள். ஸர்வாங்க சுந்தரியாய் விளங்கும் அப்பெண்ணை சன்னியாஸி பாராமல் வேறுபக்கமாய்த் தம்முடைய முகத்தைத் திருப்பிக்கொண்டார். "இதென்ன அநியாயம்! ரூபவதியான பெண்ணையும் இவ்விராஜ்யத்தையும் வேண்டாமென்று சொல்லும் துரதிர்ஷ்டனுமுண்டா" வென்று அங்கிருந்த ஜனங்களெல்லோரும் பேசிக்கொண்டார்கள். இந்த சங்கதியைக் கேட்ட அவ்வூரரசன் ஓடிவந்து, அவரது அடியை வணங்கி "சுவாமி, அடியேனது குமாரத்தியையும் ராஜ்யத்தையும் அங்கிகரிக்கவேண்டும் என்று வெகுநேரம் பிரார்த்தித்தான். சன்னியாஸி இதென்ன ஸங்

கடமாயிருக்கிறதென்று ஒட்டம்பிடித்தார். இராஜகுமாரியும் பின்
றொடர்ந்தாள். "தாங்களே எனக்கு நாதன். நான் தங்களை மன
தினால் புருஷனாக அடைந்துவிட்டேன். உங்களைவிட்டு ஒரு க்ஷண
மேனும் பிரியேன்" னென்று கூவிக்கொண்டு ராஜகன்னிகை ஓடிவரு
வதைக்கண்டு சன்னியாஸி, சற்றேனும் இரக்கங்கொள்ளாமல் இரு
ண்ட ஓர் காட்டில் நுழைந்து எங்கேயோ மறைந்துபோனார். அச்சா
துவைப் பிடிவாதத்தால் வசப்படுத்தவெண்ணிப் பின்றொடர்ந்துவந்த
பெண்ணரசி, அவர் போனவழி தெரியாமல் தியங்கிநின்றாள். அக்காட்
டினின்றும் வெளியேவர வழிதெரியாமல் ஓர் மரத்தடியில் உட்கார்
ந்து அழுதுகொண்டிருக்கையில் நமது சன்னியாஸியும் அரசனும்
அங்கு வந்தார்கள். அவ்விருவரும் அப்பெண்மணியைப் பார்த்து "நீ
பயப்படாதே, எங்களுக்கு வழிதெரியும். இருண்டுவிட்டது. இன்று
ராத்திரி இம்மரத்தடியிலிருந்துவிட்டு விடியற்காலையில்வெளியேறலா"
மென்றார்கள். அவர்கள் பட்டினியாய்க் கிடந்ததை நோக்கி மரத்தி
லுள்ள ஆணும் பெண்ணுமாகிய இரண்டு புறாக்கள் தங்கள் மூன்று
குஞ்சுகளுடன் யோசிக்கலாயின. ஆண்புறா 'அடி நாயகி, என்ன
செய்யலாம்? நம்முடைய வீட்டுக்கு மூன்று விருந்தாளிகள் வந்திரு
க்கின்றனர். காலமோ மழைகாலம். நெருப்பில்லை' யென்று மரத்
தைவிட்டு எங்கேயோ பறந்துபோய் தன் மூக்கில் ஓர் கொள்ளிக்கட்
டையைக் கொந்தி மூவர்களிருக்குமிடத்திற் கொண்டுவந்து போட்
டது. அவர்கள் அதன்மேல் விறகுகளை யடுக்கி நெருப்புண்டாக்கினார்
கள். அத்துடன் திருப்தியடையாமல் ஆண்புறா தன் மனைவியை
நோக்கி, 'என்னசெய்வோம்? இவ்வதிதிகளுக்குக் கொடுக்கத்தக்க
உணவு நம்மிடமில்லையே. நாம் அவர்களுக்கு விருந்தளிக்கவேண்டிய
தவசியம். இதோ என்னுடலைத் தருகிறேன்' என்று கரகரவெனச்
சுழன்று அவ்வக்கினியில் விழுந்தது. அதிதிகள் மூவரும் பார்த்து
அதை நெருப்பில் விழாதபடி காப்பாற்ற முயன்றார்கள்; முடியவில்லை.
பெண்புறா அதைப்பார்த்து 'இதோ இம்மூன்றுபேர்களுக்கும் என்
னாயகனது உடல் போதாது. நானும் அவர்களுக்கு உணவாகிப் புரு
ஷனது இஷ்டத்தைப் பூர்த்திசெய்கிறேன்' என்று, தானும் நெருப்
பில்விழுந்திறந்தது. தாய் தந்தையர்களின் காரியத்தைக்கண்ட குழந்
தைப்புறாக்கள் மூன்றும் தாங்களும் தங்கள் பெற்றோர்களின் கருத்
தை முடிக்கவேண்டிய தவசியமெனத் தீயிற்குதித்தன. மூன்று அதி
திகளும் இந்த பட்சிகளைத் தின்னாமல், அவைகளின் தர்மசிந்தையைக்
கண்டு ஆச்சரியமடைந்து அன்றிரவு முழுவதும் பட்டினியாயிருந்து
பொழுதுபோக்கினார்கள். அப்போது நம்முடைய சன்யாஸி அர
சனைப்பார்த்து 'அரசனே! நீ இல்லறத்தை நடத்த விரும்பினால் இப்
புறாக்களைப்போல் உன்தேகத்தை விடத் தயாராயிரு. துறவறத்தை

யனுசரிக்கவிரும்பினால் அரச குமாரியையும் இராஜ்யத்தையும் அபேக்ஷியாத பால்ய சன்னியாஸியைப் போலிரு. இப்போது இல்லறம் துறவறம் என்னும் இரண்டும் பெரிதென்பதைத் தெரிந்துகொண்டாயா? என்றார். அரசன் சந்தோஷமடைந்து ஞானமுற்றான்.

---

## விக்கிரகாராதனை.

இந்துக்களாகிய நாம் விக்கிரகாராதனை செய்கிறோமென்று இதர மதஸ்தர்கள் ஏளனம் செய்கிறார்கள். அவர்கள் விக்கிரகாராதனை இன்னதென்று அதன் தாற்பரியத்தை உள்ளபடி அறிந்திருந்தால் அவ்வாறு கூறமாட்டார்கள். அவர்கள் கூறும் விக்கிரகாராதனை பிரதிமாராதனையே யன்றி வேறல்ல. பிரதிமாராதனை யென்றாலென்ன? ஒருவனுடைய உருவத்தைப்போல் ஒரு பிரதிமையை யுண்டாக்கி அதை ஆராதிப்பது பிரதிமாராதனை. விக்கிரகாராதனை யென்பது ஓரிடத்திலோ அல்லது பொருளிலோ விசேஷித்து அடங்கியிருக்கும் சக்தியாகிய ஈசுவரஸ்வரூபத்தை யாராதிப்பது என்று அருத்தம். நம்மைப்படைத்துக் காத்துத் தன் பாதாரவிந்தத்திற் சேர்த்துக்கொள்ளும் பரமேசுவரனிடம் நாம் நம்முடைய நன்றியறிதலைக் காட்ட வேண்டிய தவசியம். அப்படிப்பட்ட குணத்திற்குத்தான் கிருதக்ஞத்வமென்று பெயர். ஒவ்வொரு மனுஷ்யனுக்கும் இக்குணமிருக்க வேண்டிய தவசியம். அப்படியானால் ரூபிகளாகிய நாம் அரூபியாயிருக்கும் பகவானிடம் எவ்வாறு நன்றியறிதலைக்காட்டக்கூடும்? அதற்காக ஓர் சிலையைச்செய்து அதைச் சுத்தமான கோயிலில் ஸ்தாபித்து கும்பாபிஷேக முதலியவற்றால் அச்சிலையில் பகவானுடைய சக்தியையேற்றி ஈசுவரன் எங்கும் நிறைந்தவரென்பது உண்மையானாலும் அவருடைய பூர்ண சக்தியையும் அதனிடம் விளங்கும்படி மகா மந்திரங்களாலும் யந்திரஸ்தாபனங்களாலும் உண்டாக்கி, அப்படிப்பட்ட பரிசுத்தமான விக்கிரகத்தில் விளங்கும் ஈசுவரனுக்கு நம்முடைய தேகத்தைத் தத்தம்பண்ணுகிறோம். இரண்டு கைகளையும் அவருக்கு அபிஷேகாதிகள் செய்வதில் உபயோகிக்கிறோம். அவருக்குப் பூஜைசெய்யவேண்டி புஷ்பமெடுத்து வருவதற்காக வெளியே செல்லுகிறோம். அந்த பகவானுடைய திருவடியினழகைக் கண்டு கண்களானந்திக்கின்றன. நம்முடைய மனம் அவரிடம் செல்லுகிறது. அவருடைய திவ்ய கதைகளையும் குணங்களையும் கேட்பதிலேயே காதை யுபயோகிக்கிறோம். இவ்வாறாக நம்முடைய தேகத்தையும் மனதையும் சில நாழிகைபரியந்தமாவது ஈசுவரனிடம் வைத்து எப்போதுமே அவ்வாறு தியானம்செய்யும் பழக்கத்தை

யுண்டாக்கிக்கொள்ளுகிறோம். நமது முன்னோர்களாகிய மகரிஷிகள் மகாபுத்திசாலிகளாதலின் அவர்கள் நாமெல்லாம் கடைத்தேற வேண்டி விக்கிரகாராதனையை யேற்படுத்தினார்கள். விக்கிரகாராதனை யென்பது கோயிலில் கல்லினாலும் உலோகத்தினாலும் செய்யப்படும் விக்கிரகங்களைமட்டும் குறிக்கிறதென்பது அறிவீனம். களிமண்ணைப்பிடித்து ஸ்வாமியென்று பூஜை செய்வதும் விக்கிரகாராதனை. மஞ்சளை விக்கினேசுவரராகப் பிடித்துப் பூஜிப்பதும் விக்கிரகாராதனை. சிவாலயத்திலுள்ள சிவலிங்கத்திற்கு மூக்கு கண்கள் இருக்கின்றனவா? இல்லையே. அதுவும் விக்கிரகாராதனை. ஸாளக்கிராமங்களுக்குக் கண்களும் மூக்கும் இருக்கின்றனவா? இல்லை. அதுவும் விக்கிரகாராதனை. வில்வதளத்தைப் பூஜிக்கிறோம். அதுவும் விக்கிரகாராதனை. குருவைப் பூஜிக்கிறோம். அதுவும் விக்கிரகாராதனை. பரமசிவன், கோயிலிலுள்ள இலிங்கத்திலும், வில்வதளத்திலும், ருத்திராக்ஷத்திலும் குருவினிடமும் விளங்குகிறார். சிவபூஜா துரந்தரனாகிய அருச்சுனன் தனக்குக் கீதோபதேசம் செய்த கண்ணனைப்பூஜித்து ஸந்தேகம்கொண்டு கைலாயத்திற் சென்றபோது தான் அர்ச்சனை செய்த புஷ்பங்களெல்லாம் பரமசிவன்மேல் விழுந்திருப்பதைக்கண்டு ஆச்சரியமடைந்தான். ஸர்வேசுவரன் ஸர்வ வியாபகர் என்னும் கருத்தை எல்லோருக்கும் மெய்ப்பிக்குமாறே நமது முன்னோர்கள் லிங்கம், ஸாளக்கிராமம், வில்வதளம், துளசிமாலை, குரு முதலிய எல்லோரையும் பூஜிக்கும்படி கூறுகிறார்கள். அந்யமதஸ்தர்கள் "உங்கள் சுவாமி செம்பிலும் கல்லிலுமாயிருக்கிறார்?" என்று அறியாமையால் உளறுகின்றனர். நாம் ஒருகல்லை இரண்டாயுடைத்து ஒன்றை விக்கிரகமாக்கி வெகு பக்தியுடன் பூஜிக்கிறோம். இன்னொன்றை வாசற்படிக்குக் கல்லாக உபயோகப்படுத்தி தினந்தோறும் மிதிக்கிறோம். எந்திரஸ்தாபனம், மகாமந்திரம், கும்பாபிஷேகம் முதலியவற்றால் விக்கிரகத்திற்குப் பிராணப்ரதிஷ்டை செய்து கடவுளுடைய பரிபூர்ண சக்தியை அங்கே நிலைநிறுத்துகிறோமென்பதை அந்யர்கள் அறியவில்லை.

இது நிற்க, மனுஷ்யன் எப்போதும் கர்மங்களைச் செய்யவேண்டுமென்றும், ஒவ்வொருகர்மமும் சுபாவத்தில் நன்மை தீமை ஆகிய இரண்டும் இணைந்ததாயிருக்கிறதென்றும், அடிக்கடி நாம் கீதையிற் படிக்கிறோம். நாம்செய்யும் எந்தவேலையிலும் நன்மை தீமைகள் கலந்தேயிருக்கின்றன. ஏதாவதொரு நன்மைசெய்தால் அதில் யாரேனுமொருவனுக்குத் தீமையுண்டாகிறதென்பது நிச்சயம். ஒவ்வொரு வேலையிலும் இவ்வாறாக நன்மை தீமைகள் கலந்திருந்தும் நாம் எப்போதும் கர்மத்தைச் செய்துகொண்டிருக்கவேண்டுமென்னும்விதியுமேற்பட்டிருக்கிறது. இதற்கென்ன செய்யலாம்? எந்த கர்மத்தைச்

செய்தாலும் அதனால் புண்யம் பாபம் ஆகிய இரண்டையும் செய்தவ
ராகிறோம். இதற்காக கீதையிற் சொல்லியிருக்கும் உபாயம் யாதெ
ணில், ஒரு கர்மத்தைச் செய்யும்போது நாம் அதன் பலனை விரும்பா
மல் பகவத் பிரீதியாகச் செய்யும் பக்ஷத்தில் நமக்கு அதனால்
யாதொரு பாதகமு முண்டாகாதென்பதே.

கர்மத்தை எப்போதும் செய்யவும் வேண்டும். அதன் பலனை
அடையவுங் கூடாது. இதுதான் கீதையிற் கூறியவிஷயம். நம்மு
டைய மனம் ஓர் ஏரிபோலிருக்கிறது. அதில் நமக்குண்டாகும் புண்ய
பாபசிந்தைகள் அவ்வேரியில் அடித்தடங்கும் அலைகள்போ லிருக்
ன்றன. அவ்வலைகள் பார்வைக்கு அடங்கிவிட்டதாகத் தோன்று
கின்றனவே யன்றி உண்மையில் அப்படியில்லை. அவ்வலைகள் ம
படியும் கிளம்பக்கூடும். அதுபோல், மனமாகிய ஏரியில் உண்டாகு
அலைகளாகிய உணர்ச்சிகளும் எண்ணங்களும் மறைந்துபோனது
போற் காணப்பட்டாலும் நிஜமாகவே அவைகள் மறைந்துபோ
வில்லை. அவைகளின் அடையாளங்கள் மனதிற் குடிகொண்டிருக்கி
றன. இத்தகைய வடையாளங்களைத்தான் ஸம்ஸ்காரங்க ளெ
கிறோம். நாம் செய்கிற ஒவ்வொரு காரியமும், நம்முடைய தேக
தின் ஒவ்வொரு அசைவும், நாம் எண்ணுகிற ஒவ்வொரு எண்ணமும்
மனதில் செய்திருக்கும் அடையாளங்கள். அதன்மேலே தெரியாவி
டாலும் உள்ளேயேயிருந்து சகலகாரியங்களையும் செய்யக்கூடிய நி
மையிலிருக்கின்றன. நாம் இப்போதிருக்கும் ஒவ்வொரு நிலை
யும் முன்னேற்பட்ட மேற்கூறிய அடையாளங்களால் நிர்ணயிக்க
படுகிறது. இந்தக்ஷணத்தில் நானிருக்கும் நிலைமை இதுவரையு
நான்செய்த கர்மங்களாலே என்மனதிலுண்டாக்கப்பட்ட அடைய
ளங்களினால் நேர்ந்ததேயன்றி வேறல்ல. இதுதான் குணம் என்பதி
தாற்பரியம். நல்ல உணர்ச்சிகளின் அடையாளங்கள் மிகுந்திரு
தால் நற்குணமெனப்படுகிறது. கெட்ட அடையாளங்களாயிருந்தா
குணமும் கெடுதலாகிறது. ஒருமனுஷ்யன் எப்போதும் கெட்
வார்த்தைகளைப் பேசுகிறதும், கெட்ட நினைவுகளை நினைக்கிறது
கெட்ட செயல்களைச் செய்கிறதுமாயிருந்தால் அவனுடைய மன
கெட்ட அடையாளங்களாலேயே நிறைகின்றன. அவ்வடையாள
கள் நமக்குத் தெரியாமலே நம்முடைய எண்ணத்தையும் காரிய
தையும் துன்மார்க்கத்திலேயே பிரவர்த்திக்கச்செய்கின்றன. உண்ண
யாகவே, இந்த கெட்ட அடையாளங்கள் எப்போதும் வேலை செ
கின்றன. அவ்வேலைகளின் பலன் தீமையே யன்றி வேறில்லை. ஆ
லின் அத்தகைய மனிதன் துஷ்டனே. அவன் நல்லவனாக முடியா
நம்முடைய கையில் அகப்பட்ட யந்திரம் நம்முடைய இஷ்டம்போ

சுற்றுகிறது. யந்திரத்திற்கு ஸ்வாதீனமில்லை. அதுபோல் நம்மை நல்லவர்களாகவும், துஷ்டர்களாகவும் செய்வது நாம் முன்செய்த கர்மங்களே யாதலின் நாம் அவைகளுக்கடங்கிய யந்திரம்போலிருக்கிறோம். இம்மாதிரியே நற்செய்கைகளும், நல்லெண்ணமும் அடிக்கடி உண்டானால் நாமும் நல்லவர்களாகிறோம். மேற்கூறிய நற்கருமங்கள் அளவுக்குமிஞ்சி அதிகமானால் நாம் பிரயத்தினப்பட்டாலும் கெடுதல் செய்யமுடியாது. அப்படிப்பட்டவன் இந்திரியங்களை ஜெயித்தவனாய் உண்மைப்பொருளைக் கண்டுபிடிக்க அருகனாகிறான். இதைவிட மேலான நிலைமை யொன்றுண்டு. அதுதான் முக்திபெற வேண்டிய ஆசை. இந்து யோகிகளுக்கெல்லாம் முக்தி யடையவேண்டு மென்பதுதான் முடிவானகருத்து. கர்மத்தினாலும் முக்தி யடையலாம். யோகத்தாலும் ஞானமடைந்து மோக்ஷம் பெறலாம். புத்தன் ஞானத்தால் அடைந்த முக்தியையும், இயேசு தியானத்தால் அடைந்த பதவியையும், ஒவ்வொரு மனுஷ்யனும் கர்மத்தால் அடையலாம். முக்தி யென்பது இருவினைகளுமற்று நிற்பது. பொன்சங்கிலியும் இரும்புசங்கிலியைப்போல் ஓர் சங்கிலிதான். என்னுடைய விரலில் முள் தைத்திருக்கிறது. அதைப்பிடுங்கவேண்டி இன்னொரு முள்ளை உபயோகிக்கிறேன். அந்த முள்ளை யெடுத்தபிறகு இரண்டு முட்களையு மெறிந்துவிடுகிறேன். இரண்டாவது முள் எனக்கு அவசியமில்லை. ஏனெனில் இரண்டுமுட்களும் முட்களே. அதுபோல் தீவினைகளை நல்வினைகளால் அகற்றவேண்டும். ஏற்கனவே மனதிலுள்ள கெட்ட நினைவுகளை நல்ல நினைவுகளால் நீக்கவேண்டும். எல்லா கெட்ட நினைவுகளும் வேரோடு தொலையும் வரையில் நல்ல நினைவுகளை மனதில் நிரப்பவேண்டும். அதன்பிறகு நற்கருமங்களும் நீங்கவேண்டியது தான். எப்படியெனில் முன் நமக்கு சம்பந்தமாய்ச் செய்த நற்கருமங்களைப் பின் நமக்கு சம்பந்தமற்றதாய்ச் செய்யவேண்டும். கர்மத்தைச்செய். ஆனால்தன் அடையாளம் உன்மனதிற் படாமலிருக்கட்டும். அலைகள் வரட்டும் போகட்டும். உன்னுடைய சரீரத்தால் சகலகாரியங்களும் செய்யப்படட்டும். ஆனால் அவைகள் உன் மனதில் யாதொரு பலமான அடையாளங்களையும் செய்யவேண்டாம். இந்த நிலைமையை எவ்வாறு அடையலாம்? நம்மைச் சம்பந்தப்படுத்துகிற காரியங்களின் அடையாளங்கள் நம்முடைய மனதை விட்டகலாமல் நிலைநிற்கின்றன.

இன்றையதினம் நான் நூறுபேர்களை வழியில் சந்திக்கிறேன். அவர்களில் எனக்கு அதிகபிரியமுள்ள ஒருவரையும் பார்க்கிறேன். நான் வீட்டுக்கு வந்தவுடன் எல்லோருடைய முகங்களையும் நினைவுக்குக் கொண்டுவர முயன்றும் என்சிநேகிதனுடைய முகமே என்

முன்னிற்கிறது. மற்ற முகங்கள் மறைந்துபோகின்றன. சரீர தத்
துவ சாஸ்திரப்படி நான் பார்த்த எல்லாமுகங்களும், என் கண்ணிற்
பட்டு அவ்வுணர்ச்சிகள் மூளைக்குக் கொண்டுபோகப்பட்டன. ஆயி
னும் மற்ற முகங்களைவிட என் நண்பனுடைய முகமே என்மனதில்
அழுத்தமான அடையாளத்தைச் செய்துவிட்டது. ஆகையால் கர்
மத்தைச் செய்யும்போது அதன் பலனை அனுபவிக்க இச்சியாதே.
எந்த கர்மத்தையும் ஈசுவரப் பிரீதியாகச்செய். எந்த விஷயமும்
உன்மனதிற்படவேண்டாம். கை காரியஞ் செய்யட்டும். உன்மனம்
சும்மாவிருக்கட்டும். இந்தப் பூமியில் நீ ஒரு அன்னியன் தேசாந்திரி
யல்லது பரதேசியைப்போலிருந்து கர்மத்தைச்செய். எப்போதும்
கர்மானுஷ்டானனாயிரு. ஆனால் இந்த பூமியிலுள்ள வஸ்துக்களில் பிரீதி
வைக்காதே. பந்தம் கெடுதல். பயங்கரமானது. இந்த உலகம் நாம்
வஸிக்கவேண்டிய இடமன்று. நாம் போகும் மார்க்கங்களில் எத்
தனையோ தங்கு மிடங்களிருக்கின்றன. அப்படிப்பட்ட இடங்களில்
இந்தப்பூமியும் ஒன்று. ஸாங்கியர் சொல்லுகிறார். "உலகம் ஆத்மா
வுக்கே யன்றி ஆத்மா உலகத்துக்கல்ல" என்பதாக. உலகமிருப்பதே
ஆத்ம விசாரணைக்காக. அதற்கென்றே படைக்கப்பட்டிருக்கிறது.
இதைத்தவிர உலக முண்டானதற்கு வேறு காரணமில்லை. இதை
நாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் இவ்வுலகத்தில் ஆசைவை
க்க மாட்டோம். (நீ எஜமானனைப்போல் வேலைசெய்யவேண்டுமே
யன்றி சேவகனைப்போல் வேலைசெய்யலாகாது.) 100-ல் 99-பேர்
கள் அடிமைகள்போல் வேலைசெய்து அவதிப்படுகின்றனர். அவர்க
ளுடைய வேலைகளெல்லாம் சுவய நன்மைக்கான வேலைகள். (முக்தி
யடையவேண்டுமென்னு மெண்ணத்துடன் வேலைசெய்.) (விசுவாசத்
தோடு கர்மத்தைச்செய்.) பிரியம் என்பது கஷ்டமானபதம். பந்த
மிருக்கும்வரை பிரியம் இராது. ஓர் அடிமையை விலைக்குவாங்கி
அவனை வேலைசெய்யும்படி கட்டளையிட்டால் அவன் கொள்ளும் பிரி
யம் உண்மையான பிரியமாயிருக்குமா? அதுபோல், உலகத்திலுள்ள
சுகங்களைப் பெறுவதற்காக நாம் செய்யும் கர்மங்கள் பிரியத்தோடு
கூடிச்செய்யும் காரியங்களாகமாட்டா. உலகத்திற்கு நம்மை அடி-
மைகளாகச் செய்துகொண்டால் நம்முடைய கர்மம் பிரியமுடன்
விளங்குகிறதென்னலாமா? அப்படி நாம் செய்யும் கர்மம் உண்
மையானகர்மமல்ல. நமக்காகச் செய்யும் காரியங்களுக்கும் நம்மு
டைய பந்துக்களுக்காகச் செய்யும் காரியங்களுக்கும் எத்தனை வித்
யாஸமோ, அதுபோல் உலக ஆசையை முன்னிட்டுச்செய்யும் காரியத்
திற்கும் ஈசுவரப்பிரீதியாகச்செய்யும் காரியத்திற்கும் வித்யாஸமுண்டு.
சுவய நன்மையை நாடிச்செய்யும் கர்மம் அடிமைகளின் தொழிலுக்
இடாகும். எந்தவேலையைச் செய்தால் உண்மையான ஆநந்தமுண்

டாகுமோ அதுவே நல்லவேலை. நாம் சுயநலத்தை நாடிச்செய்யும் கர்மங்கள் யாவும் துன்பத்தை விளைக்கின்றன. ஆதலின் அவைகள் நல்ல கர்மங்களல்ல. ஒரு மனுஷன் தன் பெண்சாதியிடம் பிரியமாயிருப்பதாய் நினைத்துக்கொள். அவன் அவளைத் தன்னிடமே யிருக்கச் சொல்லுகிறான். அவள் எங்கேயாவது வெளியே சென்றால் சந்தேகங்கொள்ளுகிறான். தன்னருகில் அவள் உட்காரவேண்டுமென்பது அவனுடைய இஷ்டம். தான் நிற்குமிடத்தில் தன் பெண்சாதி நிற்கவேண்டும். தான் எதைச்சாப்பிடச்சொல்லுகிறானோ அதை அவள் சாப்பிடவேண்டும். இம்மாதிரி இருப்பதால் அவள் அவனுக்கு அடிமையாகவும் அவன் அவளுக்கு அடிமையாகவும் இருக்கிறார்கள். இது பிரியமாகுமா? இது அடிமைத்தனமே யன்றி உண்மையான விசுவாசமல்ல. இது கஷ்டத்தை விளைப்பதால் உண்மையான இன்பமன்று. புருஷன் சொன்னபடி தன் பெண்சாதிசெய்யாவிட்டால் அவனுக்கு மனவருத்தமுண்டாகிறதன்றோ? ஈசுவரபக்தியில் இவ்விதகஷ்டமில்லை. ஈசுவரனிடம் நாம் வைக்கும் விசுவாஸத்தால் நமக்கு ஆநந்தமேயுண்டாகிறது. உலகவின்பத்திலோ துக்கம் நிறைந்திருக்கிறது. ஆதலின் அது உண்மையான இன்பமன்று. உன்னுடைய மனைவி, பெண்சாதி, பிள்ளை, பந்துக்கள், சிநேகிதர்கள், இன்னுமுள்ள எல்லோரிடமும் நீ வைக்கும் பிரீதி உனக்குத் துன்பமுண்டாக்காத ஸ்திதியிலிருந்தால், அப்போதுதான் எந்தக் கர்மத்தையும் நீ ஈசுவரார்ப்பணம் செய்ததாக நினைக்கப்படுவாய். அப்போதுதான் உனக்கு உலக ஆசை யொழிந்ததென்னலாம். கிருகஸ்தனாயிருந்தும் எல்லாவற்றையும் துறந்தவனென்று உன்னை ஞானிகள் மதிப்பார்கள்.

கிருஷ்ணபகவான் சொல்லுகிறார்:—“ அர்ஜுனா! என்னைப்பார். நான் ஒரு நிமிஷம் வேலைசெய்யாமல் ஓய்ந்து நின்றால், இந்த உலக முழுவதும் நசித்துப்போம். ஆனாலும் இவ்வுலகத்தினால் நான் பெறவேண்டிய நன்மை யொன்றுமில்லை. நான் ஏகமாயிருக்கும் பரப்பிரம்மம். எனக்குக் கர்மம் அனாவசியம். ஆனாலும் நான் ஏன் வேலை செய்கிறேன்? உலகத்தில் எனக்குண்டாயிருக்கும் விசுவாஸமே காரணம்.” கடவுள் உலகத்தில் சம்பந்தப்படாமலிருப்பதற்குக் காரணம் அவர் அதனிடம் உண்மையானப் பிரியம் கொண்டிருப்பதுதான். போலி விசுவாஸமென்பது உலகத்தார் ஒருவரையொருவர் சிநேகிப்பது. இருவர்களும் ஒருவரையொருவர் நேசித்து நெருங்கியும் ஒன்றுசேராவிட்டால் துக்கமுண்டாகிறது. இதுதான் போலி விசுவாஸத்தின் தன்மை. உண்மையான சிநேகிதர்கள் ஆயிரமைல் தூரத்திலிருந்தாலும் ஒருவரையொருவர் மறவாமலிருக்கலாம். அவர்களுடைய விசுவாஸம் ஒருபோதும் கெடாது. அப்படிப்பட்ட விசுவாஸத்தால் துக்கமென்பது ஒருகாலத்திலுமுண்டாகாது.

இப்பாதிரி பந்தமில்லாமல் கர்மங்களைச் செய்வதுதான் புத்தி சாலிகளின் கடமை. இப்படிப்பட்ட நிலைமையை அடைந்தவுடனே நமக்கு முக்தியென்பது வெகுசீக்கிரத்தில் கிட்டிவிடும். நீ உன் பிள்ளைக்குச் செய்யும் உதவிக்குக் கூலி கேட்கிறையா? இல்லை. அவர்களுக்கு சகல நன்மைகளையும் செய்ய நீ கடமைப்பட்டிருக்கிறாய். நீ அவர்களுக்காக வேலைசெய்யவேண்டியது உன் பொருப்பாக நினைக்கிறாய். அதுபோல் இதரர்களுக்காகச் செய்யும் காரியத்தையும் எண்ணிக்கொள். அவர்களிடம் யாதொரு பிரத்யுபகாரத்தையும் அடைய விரும்பாதே. உன்னுடைய பொருளை சுவர்க்கபலனை யுத்தேசித்து நீ தானம் செய்வதுபோல் உன் கர்மங்களையும் லோகோபகாரார்த்தமாய்ச் செய்தாயானால் பந்தத்தினின்று விடுபடுவாய். நாம் செய்யும் உபகாரத்திற்கு பிரதி பலனை விரும்புவதால் உலகபந்தம் உண்டாகிறது. எவன் பொதுநலத்தையுத்தேசித்துக் கர்மங்களைச் செய்கிறானே அவன் தாமரையிலைக்கு ஸமானன். தாமரையிலை தண்ணீரிலிருந்தும் அதனால் நனையாமலிருப்பதுபோல் ஈசுவரார்ப்பணமாய்க் கர்மங்களைச் செய்யும் கர்மயோகி உலகத்தில் வஸித்தும் அதில் ஒட்டாமலிருக்கிறான். அவனுக்குப் பந்தமில்லை. ஆதலின் மேற்கூறிய காரணங்களால் கிரஹஸ்தனுடைய நிலைமை சன்யாஸியின் நிலைமையைவிட எளிதன்றென அறிந்துகொள்ளுகிறோம்.

---

## கடமை.

கர்மயோகத்தில் கர்மம் என்னவென்று அறிந்துகொள்வதுடன் நம்முடைய கடமை இன்னதென்பதையும் தெரிந்துகொள்ள வேண்டும். நான் ஏதேனும் ஒரு காரியத்தை முடிக்கவிரும்பினால் அதைப்பற்றி நான்செய்யவேண்டிய கடமை யின்னதென்பதை அறிந்துகொள்ளவேண்டும். அதன்பிறகுதான் அந்தக்காரியத்தை நான் நன்றாய்ச்செய்யக்கூடும். ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொருவர் ஒவ்வொன்றைத் தங்கள் கடமையாக நினைக்கிறார்கள். முகம்மதியன் கொரானிலுள்ளபடி செய்வதுதான் தன் கடமை யென்கிறான். இந்து தன் வேதத்திலுள்ளபடி அநுஸரிப்பதே தன் கடமையென்கிறான். கிறிஸ்துவர்கள் தங்கள் வேத புஸ்தகத்தில் சொல்லியிருக்கிறபடி செய்வதே தங்கள் கடமையென்கிறார்கள். முகம்மதியன் பன்றி யென்னும வார்த்தையையே காதால் கேட்கிறதில்லை. கிறிஸ்துவர்கள் (வெள்ளைக்கார கிறிஸ்துவர்கள்) பன்றி மாமிசத்தைப் பகிரங்கமாய்ப் புசிக்கின்றனர். இந்து எந்த மாமிசமும் தின்பது கூடாதென்கிறான். இவ்வாறு கடமையென்பது இன்னதென்று தெரியாததால், சிலர் 'நம்முடைய மனச்சாக்ஷிக்கு விரோதமான காரியங்களைச் செய்

யாமல் தவிர்ப்பதும் அதற்கு இணக்கமான காரியங்களைத் தவிர்க்காமல் செய்வதும் கடமை, யென்கிறார்கள். **"பிறனுக்கு நன்மை செய்வதைப்போன்ற புண்யமும், தீமை செய்வதைப்போன்ற பாபமுமில்லை"** யென்ற வாக்கியம் வெகு மேன்மைபொருந்தியது. கடமை இன்னதென்பதைக் குறிப்பிடுவதற்கு இதைவிட சிறந்தவாக்கியம் வேறொன்றில்லை.

பகவத்கீதையில் பிறப்புக்கும் நிலைமைக்கும் தக்கபடி கடமையிருக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் நாம் பிறந்த தேசத்திற்கும், ஜாதிக்கும், அனுசரிக்கும் மதத்திற்கும் தக்கபடி ஒருவருக்கும் ஹிம்ஸையின்றி கருமங்களைச் செய்வதே நமது கடமையாகும். ஒரேமாதிரியான ஆசாரம் எங்கும் இல்லையென்பதை நாம்மறக்கலாகாது. இதை மறப்பதாற்றான் நாம் ஒருவரோடொருவர் சண்டைபோடுகிறோம். ஆதலின் கடமை யென்பதை அடியில் வருமாறு வரையறுக்கலாம். எதைச்செய்தால் ஆத்மஞான முண்டாகுமோ அதுவே நமது கடமை. எதைச்செய்தால் நரகப்பிராப்தியோ அது நம் கடமையல்ல. ஒரு சமயம் கடமையாய்த்தோன்றும் ஓர் காரியம் மற்றொரு சமயத்தில் பாபமாகிறது. ஒருவனைக் கொலைசெய்வது பாபமென்றஞ்சு மொருவன் போர்வீரனாய் யுத்தரங்கத்திற் சென்றால் இருபதுபேர்களை ஒரே தடவையில் வெட்டித்தள்ளுகிறான். இதனால் கொலை, முதலில் பாபமாகவும் பிறகு கடமையாகவும் காணப்படுகிறதன்றோ? சுவயநலத்தைப் பாராட்டாமற் செய்யும் தர்மமே சிறந்ததென்பதை அடியில்வரும் கதையால் நன்றாக விளக்கிக்காட்டுகிறேன். "குருக்ஷேத்திரத்தில் யுத்தம் முடிந்தபின் பஞ்சபாண்டவர்கள் பெரிய யாகமொன்று நடத்தி அநேகருக்குத் தானதர்மம் செய்தனர். எல்லோரும் 'இத்தனை பிரபலமான யாகத்தை நாங்கள் பார்த்ததில்லை' யென்று பிரம்மானந்த மடைந்தார்கள். இப்படியிருக்கையில் ஓர் கீரிப்பிள்ளை அவ்யாகசாலைக்குள் வந்து எல்லோருடைய எச்சிலிலும் புரண்டது. அதற்கு ஏற்கெனவே ஒருபாதி பொன்னிறமாயிருந்தது. மற்றொரு பாதியையும் பொன்னிறமாக்க வெண்ணி அதுபுரண்டு பார்த்து முடியாமல் அங்குள்ளவர்களை நோக்கி 'இது யாகமன்று. நீங்களெல்லாம் வீணைப் புகழுகிறீர்கள்' என்றது. அவர்களெல்லாம் 'நீ சொல்வது ஆச்சரியம், எத்தனையோ ஏழைகள் அன்னவஸ்திரங்கள் கிடைக்கப்பெற்று அகமகிழ்ந்தனர். வெகுபேர் தரித்திரத்தை யொழித்து தனவந்தர்களாயினர். இதுவரையும் இவ்வுலகத்தில் இத்தகைய யாகம் நடந்ததில்லை' யென்றார்கள். அதற்கு கீரிப்பிள்ளை சொல்லலுற்றது. "முற்காலத்தில் ஒரு கிராமத்தில் ஏழைப்பிராமணன் ஒருவனிருந்தான். அவனுக்கு பெண்சாதி,

பிள்ளை, காட்டுப்பெண் ஆகிய மூவர்களுண்டு. இவர்களெல்லோரும் ஒவ்வொருநாளும் உபாதானம் வாங்கி உஜ்ஜீவித்து வந்தார்கள். அப்போது மூன்று வருஷப்பஞ்சம் உண்டாகிக் கடைசியாக 5 நாள் வரையும் அவர்களுக்கு ஆகாரம் கிடைக்கவில்லை. அகோரமான பசியால் துன்புற்றனர். எங்கிருந்தோ கிஞ்சிற்று கோதுமை கிடைத்தது. அதைச் சமயல்செய்து நாலுபங்காக்கி உண்ணத்தொடங்கினார்கள். இதற்குள்ளாக ஓர் அதிதி அவ்விடம் வந்து தாம் பசியால் வருந்துவதாய்க் கூற, எல்லோரும் தங்களுடைய ஆகாரத்தை யொன்றாகச் சேர்த்து அவருக்குக் கொடுத்துவிட்டார்கள். அதிதி திருப்தியடைந்து, அவர்களை ஆசீர்வதித்துப்போனார். அன்றிரவே அந்நால்வர்களும் பசியாலிறந்துபோனார்கள். அவர்கள் தானம் செய்த கோதுமையில் இரண்டு மூன்று நிலத்தில் விழுந்துகிடந்தன. அதன்மேற் புரண்டேன். ஒரு பக்கம் தங்கநிறமாயிற்று. அதுமுதல், எத்தனையோ யாகங்களிற் புரண்டுபார்த்தும் உபயோகமில்லாமற் போயிற்று. இந்த யாகத்திலும் விப்பிரர்கள் சாப்பிட்ட இலைகளிற் புரண்டேன். என் மற்றொருபக்கம் பொன்னாகவில்லை. அதனாலேதான் இந்த யாகம் சிறந்ததில்லை யென்றேன்" என்றது. இத்தகைய தருமம் இவ்விந்தியாவில் இப்போதில்லை தருமவான்களின் தொகை வெகு குறைவு. ஒரு ஆங்கிலேய புஸ்தகத்தில் யாரோ ஒரு சிறுபையன் கூலிவேலைசெய்து அதனாற் கிடைக்கும் பணத்தைத் தன் தாயாரிடம் கொடுத்து அவளை ஸம்ரக்ஷித்துவந்தானென்றிருக்கிறது. அந்தப் பையனைப்பற்றி அப்புஸ்தகத்தில் 4-பக்கம் புகழ்ந்துகொண்டாடியிருக்கிறது. இது சாமான்யந்தானே. இம்மாதிரி கடமையும் நற்சிந்தையும் இந்து பையன்களுக்கு ஸர்வஸாதாரணம். தற்காலம், மேல்நாட்டாரின் சம்பிரதாயங்களை யனுசரிப்பதால் அவனவன் தானே சம்பாதித்துத் தன்வயிற்றை நிரப்பிக்கொள்ள வேண்டுமென்னும் எண்ணம் வரவர நமக்குள் பரவுகிறது. நம்முடைய நாகரிகத்திற்கும் ஐரோப்பியர்களின் நாகரிகத்திற்கும் வித்யாஸங்களுண்டு, நாம் நம்முடைய பெற்றோர், பிள்ளை, சுற்றத்தார், அதிதிகள் முதலிய எல்லோரையும் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர்கள் தத்தம் வயிற்றுக்குவேண்டிய உணவைத் தாங்களே ஸம்பாதிக்கவேண்டும். இவ்விரண்டில் எது தருமம்? உலகத்தில் மிருகங்கள் குட்டிகளை யீன்று சிலகாலம்வரை அவைகளை யிரக்ஷித்துப்பிறகு விட்டுவிடுகின்றன. இன்னும் சில மிருகங்கள் ஈன்ற குட்டிகளையே தின்றுவிடுகின்றன. உதாரணமாக, நாய் நாலு குட்டிகளை யீன்றால் இரண்டொரு குட்டிகளைத் தின்றுவிடுகிறது. இவ்வாறு கருணையற்ற சுபாவம் மனிதர்களுக்குள் பரவினால் பிறகு அவர்களுக்கும் மிருகங்களுக்கும் என்னபேதம்? சில மனிதர்கள் தாங்கள் ஸம்பாதிக்கும் பொருளைத் தாங்களே

அனுபவிக்கிறார்கள். இது பிசகு. தாங்கள் ஸம்பாதிக்கும் பொருளைப் பிறருக்கு விநியோகப்படுத்துவதன்றோ பெருமை? நாம் பிறரைப் போஷிப்பதற்காகவும், நம்மாலியன்ற அளவு உலகத்திற்கு உபகாரம் செய்வதற்காகவும் ஜனித்திருக்கிறோம். நம்முடைய ஆயுளைப் பொது நன்மையான காரியங்களிலேயே செலவழிக்கவேண்டும். தினந்தோறும் எத்தனைகொலைகள் செய்கிறோம். எத்தனை ஜீவன்கள் நம்மால் மடிந்துபோகின்றன? ஒருமனிதனைக் கொலைசெய்தால் இராஜாங்கத்தார் அவனை விசாரித்துத் தூக்கிற்போட்டு விடுகிறார்கள். ஒரு ஆட்டை அல்லது மாட்டைக் கொன்றால் அவனைத் தூக்கிற்போடுகிறதில்லை. சொற்பமாகத் தண்டிக்கிறார்கள். அதுவும் இடத்தை யனுசரித்துத் தண்டனை விதிக்கப்படுகிறது. ஜீவன் மனுஷ்யனிடம் இருப்பதுபோல்தான் மாட்டினிடமும் இருக்கிறது. ஆதலின் மாட்டைக்கொல்வதும் கொலையே. மேற்கூறிய கொலைப்பாவத்தைச்செய்கிற மனுஷ்யனைக்கண்டால் நாம் எவ்வளவு அருவருப்பு கொள்ளுகிறோம். நாம் தினந்தோறும் எத்தனையோ ஜீவன்களை வதைக்கிறோமே; அதைச் சற்று கவனித்துப்பார்ப்போம். நாம் தரையில் நடக்கும்போது ஆயிரமாயிரமான எறும்புகள் நம்முடைய காலில் அகப்பட்டு நசுங்கி மாண்டு போகின்றன. உட்கொள்ளும் ஜலத்தில் கோடானுகோடி பூச்சிகளுண்டு. அவைகள் நம்முடைய கண்ணுக்கு நன்றாய்த்தெரியாது. பூதக் கண்ணாடியைக்கொண்டு நீரைப்பார்த்தோமானால் அதில் நிறைந்துள்ள ஏராளமான பூச்சிகளைக்காணலாம். இதெல்லா மிருக்கட்டும். வாழை, தென்னைமுதலிய மரங்களில் ஜீவனில்லையா?. அவைகளையெல்லாம்நாம் உபயோகிக்கிறோம். இதுவும் கொலைப்பாவந்தான். ஆனால் என்னதான் செய்வது? எவ்வாறு நம்முடைய உயிரை காப்பாற்றுவதெனில், பிறருடைய பிரயோஜனத்திற்காக நம்முடைய உயிரைக் காப்பாற்றவேண்டி நாம் மேற்கண்ட மரம், புல், பூண்டு முதலியவைகளைப் பெயர்ப்பதும் எறும்பு, பூச்சி முதலியவைகளைக் கொல்வதும் பாபமாகாது. அன்னியர்களைக் காப்பாற்றுவதற்காக, நாம் மாமிசம் புசிக்கவேண்டிய அவசியமில்லை. ஆதலின் பெரியபாபமாகிய மாம்ஸ பக்ஷணத்தை நிவர்த்திக்கவேண்டும். உயிரைக்காப்பாற்ற வேறுவகை யில்லையே யென்னும் இன்றியமையாத தோஷத்தால் காய், கறி பதார்த்தங்களைப் புசிக்கலாமேயன்றி, மற்றப்படி புசிப்பது தோஷமாகும். நமதுமுன்னோர்கள் வரவர சாகாதிகளைக் குறைத்துக்கொண்டே வந்து கடைசியாக பர்ணாசனம், ஜலாசனம், வாய்வாசனம் முதலியவைகளைச்செய்து முடிவில் யாதொன்றையும் உட்கொள்ளாமல் யோகாப்பியாஸபலத்தால் உயிர் தரித்திருந்தார்களன்றோ?. சாகாதிகளைப் பக்ஷிப்பதிலும் எந்த பாகத்தை யுட்கொண்டால் முதலுக்கே மோசமின்றி யிருக்குமோ, அப்படிப்பட்ட பாகத்தையே புசிக்கவேண்டும். மாமரத்திலுள்ள மாங்கா

வைப்பறிப்பது அவ்வளவு பாபமாகாது. ஏனெனில், அதனுமேல் மரத்திற்கே அபாயம் நேரிடுகிறதில்லையன்றோ? அன்றியும் மாங்காயை நாம் பறிக்காவிட்டாலும் அது தானே பழுமாகிக்கீழே விழுந்து விடுகிறது. ஆதலின் நம்முடைய காலத்தை உலகத்திலுள்ள பிராணிகளுக்காக உபயோகப்படுத்தும் பொருட்டு மேற்கூறிய சாகாதிகளைச் சாப்பிட்டு மிகுந்த கருணையுடன் ஸகலகர்மங்களையும் ஈசுவரப் பிரீதியாகச் செய்யவேண்டும். இதுவே ஒவ்வொரு மனுஷ்யனும் செய்யவேண்டியகடமையாகும். பிராணன் போகுந்தறுவாயிலும் பிறருக்கு தருமஞ்செய்யவேண்டும், தானஞ்செய்யும்போது எவ்விதமான கேள்விகளையும்கேட்கலாகாது. நாம்செய்யும் தானத்தைப் பெருமையாகச்சொல்லிக் கொள்ளாமலும், எல்லாவற்றையும் ஈசுவரார்ப்பணமாகவுஞ்செய்து அதன் பலனைக்கருதாமலிருக்க வேண்டியதே கர்மயோகத்தின் சாரம். கடமை என்றும் இன்பமாயிருப்பதரிது. விசுவாஸத்துடன் செய்யும் காரியமே சிறப்பாக முடிகிறது. விசுவாஸத்துடன் செய்யப்படாதகாரியம் சங்கடமாகவே முடிகிறது. பெற்றோர்கள் பிள்ளைகளுக்குச் செய்வதுபோலும், புருஷன் பெண்சாதிக்குச் செய்வதுபோலும், நாம் நம்முடைய ஸகல காரியங்களையும் உலகத்திலுள்ள ஸகல ஜனங்களுக்கும் உபயோகப்படுமாறு விசுவாஸத்துடன் செய்யவேண்டும். ஓர் காரியத்தை நன்றாய்ச்செய்வதற்கு அதில் விசுவாஸம் வைப்பதவசியம். விசுவாஸமென்பது சுவயாதீனத்தால் வரவேண்டிய விஷயம். நமக்குண்டாகும் கோபம், பொறாமை முதலிய கெட்ட உணர்ச்சிகளுக்கு நாம் அடிமைகளாயிருக்கும்வரை நமக்கு சுவயாதீனமே கிடையாது. நமக்குத் தினந்தோறும் நேரிடும் சகல துன்பங்களையும் லக்ஷியம் செய்யாமல் பொறுமையுடனிருப்பதே மேற்கூறிய துர்க்குணங்களை ஜெயிக்கும்கருவியாகும். எப்படிப்பட்ட முரட்டு சுபாவத்தையும் புண்யமும் சுத்தமும் கொன்று விடும். உலகத்தில் ஸ்திரீகளால் அநேக புருஷர்களும், புருஷர்களால் அநேக ஸ்திரீகளும் கெட்டுப்போகின்றனர். இதனால் சில புருஷர்கள் அலாதியாக ஓர் மடம் கட்டிக்கொண்டு ஸ்திரீகளின் முகத்தில் விழிக்காமல் காலம் கழிக்கின்றனர். சில ஸ்திரீகள் கன்னிகாமடத்தில் வஸித்துக்கொண்டுபுருஷர்களின்முகத்தைப்பாராமலே ஆயுளைக் கழிக்கின்றனர். இப்படிச்செய்வதைவிட வேறொரு சுலபமான உபாயமுண்டு. அதாவது: ஒவ்வொரு ஸ்திரீயும் இதர புருஷர்களைப்பார்க்கும்போதெல்லாம் தன் வயிற்றிற் பிறந்தபிள்ளையென்றுமதித்துவந்தால் கெட்டுப்போகமாட்டாள். அம்மாதிரியே ஒவ்வொரு மனுஷ்யனும் இதர ஸ்திரீகளைத் தன் தாயைப்போலெண்ணிக்கொள்ளவேண்டும். நாம் காணுகிற ஸ்திரீகளையெல்லாம் பரதேவதை யென்றுநினைத்துக் கொண்டால் கெட்டுப்போவோமா?

உலகத்தில் தாயினுடைய நிலைமை ஸர்வோத்க்ருஷ்டமானது. அந்த நிலைமையை ஒவ்வொருவரும் நன்றாய்த் தெரிந்துகொண்டால் எந்தக் கர்மத்தையும் ஈசுவரார்ப்பணம் செய்வது எளிதாகும். தாயின் பிரியத்திற்கு மேற்பட்ட பிரியம், கடவுள் பிரியம் ஒன்று தான். மற்றப் பிரியங்களெல்லாம் தாயின் பிரியத்திற்குக் கீழ்ப்பட்டவைகளே யன்றி வேறல்ல. தாய், முதலில் தன் குழந்தைகளைச் சம்ரக்ஷித்துப் பிறகுதான் உண்ணப்போகிறாள். அப்படிச் செய்யாமல் பெற்றோர்கள் தங்களுடைய வயிற்றை நிரப்பிக்கொண்டு பிள்ளைகளைப் போஷிக்காதிருந்தால் அவர்களுக்கும் பக்ஷிகளுக்கும் என்னபேதம்? பக்ஷிஜாதிகள் குஞ்சுகளை விட்டுப்பறந்துபோகும் சுபாவத்தைக்கொண்டிருக்கின்றன. அதுபோல், இளம்பிராயத்தில் பெற்றோர்களால்ஆதரிக்கப்படாத குழந்தைகள் முதிர்ந்த வயதானவுடன் அவர்களைப் போஷிக்காமல் கைவிடுகிறார்கள். எந்த மனுஷ்யன் இவ்வுலகத்திலுள்ள ஸ்திரீகளை யெல்லாம் பராசக்தியென்று நினைக்கிறானோ அந்த மனுஷ்யனே புண்யவான். எந்தஸ்திரீ புருஷர்களை யெல்லாம் பரமேசுவரனாக பாவிக்கிறாளோ அவளே புண்ணியவதி. அவளே பாக்கியசாலி. கர்மமானது கௌரவமா யிருந்தாலும் கீழ்த்தரமாயிருந்தாலும் பாதகமில்லை. ஒவ்வொருவனும் தன்னிலைமைக்கு ஏற்ற நற்கருமத்தைத் திருப்தியாகச்செய்வது அவசியம். அப்படிச்செய்தால் வரவர அக்கர்மங்களின் பலனை யுத்தேசிக்காது செய்யும் நற்பழக்கம் உண்டாய்விடும். அந்த நற்பழக்கமுண்டானால் மோக்ஷம் கிடைக்குமென்பதில் தடையில்லை. காலுக்கு உபயோகமான நல்ல பாதரக்ஷையைச் செய்யும் தாழ்ந்த ஜாதியானாகிய சக்கிலியன், உயர்ந்த குலத்திற் பிறந்து உளறி வழியும் உபாத்தியாயனைக்காட்டிலும் உத்தமன்.

முற்காலத்தில் இளம்பிராயமுள்ள ஒரு சன்னியாசி வனத்தில் தவஞ்செய்துகொண்டிருந்தார். 12 வருஷம் சிரமப்பட்டு தவஞ்செய்தபின் அவர் தலையில் உலர்ந்த இலைகள் விழுந்தன. இதற்கென்ன காரணமென்று ஆகாசத்தை நோக்கினார். இலைகளை யுதிர்த்தகொக்கு பறந்து கொண்டிருந்தது. சில நேரத்திற் கெல்லாம் ஒரு ஜ்வாலை கிளம்பி அந்தக் கொக்கை எரித்து விட்டது. ஸந்யாஸி சந்தோஷமடைந்தார். இவ்வளவு சக்தி நமக்குண்டாயிற்றே யென்று மனமகிழ்ந்தார். ஒருவிதமான கர்வம் அவருடைய மனதைக் கவர்ந்துகொண்டது. சில நாளைக்குப் பிறகு இந்த பால்ய சந்யாஸி ஒரு கிராமத்தில் வீடுகள் தோறும் பிக்ஷையெடுத்து வருகையில் ஒருவீட்டில் அம்மா! பிக்ஷைபோடு, என்று கேட்டார். அப்போது. அப்பா! கொஞ்சம் பொறு, காத்திரு என்ற சப்தம் உள்ளே யிருந்து புறப்பட்டது. சந்யாசி தன் மனதில் நினைத்துக்கொள்ளுகிறார். "அடடா, இந்த

துஷ்டை நம்முடைய மகத்துவத்தை அறிந்து கொள்ளவில்லையே. நம்மைக் காக்கவைக்கு மிவள் அநியாயமாக இறந்து போய்விடுவாளே யென்று எண்ணிக்கொண்டார். உடனே உள்ளே யிருந்த பதிவிரதை "அடே! பையா, இங்கு கொக்குமில்லை காகமுமில்லை" யென்றாள். சந்யாசிக்கு மிகுந்த ஆச்சரியமுண்டாயிற்று. சில நேரத்திற்கெல்லாம் அப்பதிவிரதா சிரோன்மணி பிக்ஷையை யெடுத்துக்கொண்டு வெளியேவந்தாள். அப்போது சந்யாசி அவளை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து 'அம்மா! நான் நினைத்தது தங்களுக்கு எப்படிதெரிந்தது' என்றான். அவள் "அடே பையா! உன்னுடைய யோகத்தை நான் அறிய மாட்டேன். எனக்கு யோகாப்பியாஸம்தெரியாது நான் ஸாதாரணமாய் இல்வாழ்க்கை புரியும் ஸ்திரீ. என்னுடைய பர்த்தாதேக அசௌக்கியமாயிருக்கிறார். அவருக்கு அமுதுபடைத்துக்கொண்டிருந்தேன். அது என்கடமை. இன்னும், ஆயுள்முழுவதும் நான் செய்யவேண்டிய கர்மத்தைமட்டும் யாதொரு பிசகின்றிச்செய்து வருவேன். நான்கல்யாணமாகாத கன்னிகையாயிருந்தபோதும் என்னுடைய கடமையைச் செய்தேன். இந்த யோகத்தைத்தான் நான் செய்துகொண்டிருக்கிறேன். இம்மாதிரி செய்து வந்ததால் எனக்கு ஞானமுண்டாயிற்று. நான் அது முதல் உலகிலுள்ள ஸகலவிடங்களிலும் நடக்கும் விசேஷங்களை இங்கிருந்தபடியே அறிந்து கொள்ளுகிறேன்" என்றாள். (இதனாலே கர்மயோகத்தின் மகிமை நன்றாய்ப் புலப்படுகிறது.) இதன் பிறகு ஸந்யாஸி 'அம்மா! கர்மயோகத்தைப்பற்றி இன்னும் எனக்கு அதிகவிவரமாய்ச்சொல்லவேண்டும்' என, அவள் அப்பா! மிதிலாநகரில் இறைச்சி வியாபாரியாகிய ஒரு சண்டாளனிருக்கிறான். அவனிடம் சென்று கர்மயோகத்தின் மகிமையை அறிந்துகொள் என்றாள்.

ஸந்யாசி "இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது? சண்டாளனுக்கு என்னதெரியும். மிகவும் கிழ்த்தரமான பாபச்செய்கைகளைச் செய்யும் அவனிடம் நான் செல்வதெப்படி? யென்று நினைத்துப் பிறகு பதிவிரதையின் வார்த்தை பொய்யாகா தென்றுன்னி, அவ்வாறே சென்று ஓர் பெரிய கசாப்புக்கடையைக் கிட்டினார். அங்கே ஒரு சண்டாளன் மாமிசத்தைக் கத்தியால் துண்டித்து விற்றுக்கொண்டிருந்தான். சிவ,சிவ,இந்தச் சண்டாளனா! நமக்குக் கர்மயோகத்தைப் பற்றி உபதேசிக்கத் தக்கவன். இவன் பிசாசாயிருக்கிறான். இவனைப் பார்த்தாலே பயங்கரமாயிருக்கிறது. சற்றேனும் கருணையில்லாத இவனிடம் நாம் எதைக் கற்றுக்கொள்ளப் போகிறோ மென்று எண்ணிக் கொண்டார். இதற்குள்ளாக அந்தச் சண்டாளன் அவரைப்பார்த்து 'சுவாமி! தங்களை அந்தப்பதிவிரதை யனுப்பினளா? சற்று பொறுங்

கள். என்னுடைய வேலையை முடித்துக்கொண்டு உடனேவருகிறேன், என்றான். ஸந்யாஸிக்குண்டான ஆச்சரியத்தை யாரால் அளவிட்டுச் சொல்ல முடியும்? "இவன் என்ன சொல்லப் போகிறான்" என்று அவர் நினைத்தார். சண்டாளன் மாம்சங்களை யெல்லாம் விற்றுப் பணமாக்கியபின் ஸந்யாஸியை அழைத்துக்கொண்டு வீட்டுக்குச் சென்று, அவரை வெளியே நிறுத்தி, தான் உள்ளே போனான். அங்கே அவன் தன்னுடைய தாய் தந்தையர்களின் பாதத்தைக் கழுவி, அவர்களுக்கு உண்டி உதவி, சமஸ்த உபசாரங்களையும் செய்து பிறகு வெளியே வந்து ஜீவனைப் பற்றியும் ஆத்மாவைப் பற்றியும் உபந்யாஸம் செய்தான். அவைகளை யெல்லாங் கேட்டு 'ஸந்யாஸி ஆச்சரியமடைந்து, "ஐயா! இவ்வளவு ஞானத்தை யடைந்த நீர் ஏன் சண்டாளனாயிருக்கிறீர்" என, சண்டாளன் கூறுகிறான் "ஐயா, எந்தக்கர்மமும் இழிவன்று; என்னுடைய பிறப்பு நிலைமைக்குத் தக்கபடி எனக்கு கர்மமேற்பட்டது. என்னுடைய சிறு பிராய முதல் நான் இத்தொழிலைச் செய்துவருகிறேன். ஆனால் எனக்கு ஒன்றிலும் சம்பந்தமில்லை. என் தாய் தந்தையர்களைக் காப்பாற்று நிமித்தம இந்தக் கர்மத்தை யநுஷ்டிக்கிறேனே யன்றி வேறில்லை. ஆயினும் இக்காரியங்களில் என் மனதைச் சம்பந்தப்படுத்தாமல் நான் செய்துகொண்டிருப்பதால் திவ்யஞானம் தோன்றியது" என்றான்.

கர்மத்தைப்பற்றி அதைச் சரியாகச் செய்து முடிக்கும் உபாயத்தை ஒருயோகி கூறுகிறார். "ஒரு கர்மத்தைச் செய்ய வேண்டிய உபாயமும் அதனால் அடையக்கருதும் பிரயோஜனமும் ஒன்றாயிருந்தால் அக்கர்மம் சிறந்ததாகும்." நீ காரியத்தைச் செய்யும்போது அதைச்செய்வதிலேயே திருஷ்டிகொள்ளவேணும். அதன் பலனில் நோக்கம் வைக்கலாகாது. கர்மத்தைச் செய்வதே ஈசுவரத்தியானம் என்று நினைத்துக்கொள். மேற்கூறிய கதையில் சண்டாளனும், பதிவிரதையும் தங்கள் காரியத்தை ஸந்தோஷமாய்ச் செய்தார்கள். ஞானத்தை யடைந்தார்கள். ஒவ்வொரு கடமையும் பரிசுத்தமானது. கடமையை ஊக்கத்துடன் செய்வதுதான் விசேஷம். அதுதான் ஞானத்தையடையத்தக்க சௌகரியமான ஸாதனம்.

நாம் எந்த தேசத்தில் எந்தஜாதியில் என்ன நிலைமையிற் பிறந்தோமோ, அதற்கேற்றபடி நாம் செய்யவேண்டிய கடமையும் ஏற்படுகிறது. எவன் வேலையைத்தன்னுடைய பிரயோஜனத்திற்காகச்செய்கிறானோ அவன் துக்கமடைகிறான். ஐயோ! இந்தத்தொழிலைச்செய்ய வேண்டியது நமது தலைவிதியென்று நினைப்பவன் பதம்பெற மாட்

டான். தனக்கென்றும், தன்னை சம்பந்தப்படுத்திக்கொண்டும், வேலை செய்யாதவன் திவ்ய ஞானியாகிறான். அவன் செய்யும் காரியம் எத்தனை கீழ்த்தரமானாலும் பாதகமில்லை. நாமெல்லாம் நம்மைப்பற்றி அதிக கவுரவமாய் நினைத்துக்கொள்ளுகிறோம். நான் சிறியனாயிருந்தபோது என்னையே சக்கரவர்த்தியாக எண்ணிக் கொள்வதுண்டு. அதுபோலவே, நீயும் உன்னைப்பற்றி உயர்வாக எண்ணிக்கொண்டிருப்பாய் என்பது நிச்சயம். இதெல்லாம் சொற்பனமேயன்றி வேறில்லை. நம்மாலாகக்கூடிய காரியங்களை முதலில் திருப்திகரமாகச் செய்வது நன்மை. பிறகு படிப்படியாக அருமையான காரியங்களைச் செய்யத்தொடங்கலாம். போட்டிபோடுவதால் பொறாமையுண்டாகிறது. அதனால் மனவிரக்கம் என்பது மறைந்து போகிறது. முறுமுறுக்கிறவனுக்கு எந்தவேலையும் கஷ்டந்தான். எதுவும் அவனுக்குத் திருப்தியாயிராது, அவனுடைய வாழ்நாள் முழுவதும் துக்ககரமாகவே தொலைந்துபோம். நாம் நமக்கு என்னென்ன வேலைகள் கிடைக்கின்றனவோ அவைகளைத் திருப்தியாகச் செய்து முடிவில் ஞானத்தை யடையவேண்டும்.

ஒவ்வொரு மதத்திலும் (1) தத்துவ சாஸ்திரம் (2) புராணம் (3) கர்மம் என்ற மூன்று விஷயங்களுண்டு. மதத்தின் ஸாரமே தத்துவமெனப்படுகிறது. இந்த தத்துவத்தை பொய்யான கதைகளாலோ அல்லது மெய்யான கதைகளாலோ அல்லது பொய்யும் மெய்யும் கலந்த கதைகளாலோ விளக்கிக் காட்டுவது புராணமெனப்படும். கர்மமென்பது, தத்துவத்தைத் தனியாக யாதொரு உதவியுமின்றி அறியமுடியாதாகையால், சரீரத்தாலும் மனதினாலும் உண்மைப்பொருளை யடைவதற்காகச் செய்யும் காரியமாகிறது. இக்கருமத்தைச் செய்யாமல் தத்துவத்தையறிய முயல்பவன் மூடனாவான். குழந்தைப் பருவத்தில் தவழ்ந்து விளையாடி பிறகு சுவரைப்பிடித்து தத்தித்தத்தி நடந்து பழக்கமானபின் நன்றாக நடக்கக்கூடும். அப்படியின்றி ஆரம்பத்திலேயே நடக்கமுயன்றால் காலொடிந்து போகும். அதுபோல் கர்மத்தைவிட்டு ஞானத்தை உடனே அடைய விரும்புகிறவன் மூடனாகிறான்.

கோயிலில் ஈசுவரனைக்குறிக்கும் அடையாளமாக விக்கிரகத்தை வைக்கிறோம். நாம் ஒரு எண்ணம் கொள்ளுகிறோம். அதை என்ன அடையாளங்களால் பிறர் அறிந்து கொள்ளக்கூடும்? நாம் பேசும் வார்த்தைகளா லன்றோ? ஆதலின் வார்த்தைகளே நம்முடைய எண்ணத்தின் அடையாளங்கள். உலகம் கடவுளின் அடையாளம். ஈசுவரனைக் குறிக்கும் விக்கிரகம் முதலிய அடையாளங்களை ஒவ்வொரு மதத்திலும் சில மேதாவிகள் சேர்ந்து உண்

டாக்கினார்களென்றெண்ணவேண்டாம். ஆழ்ந்துயோசித்தால், மனுஷ்யன் தோன்றுவதற்கு முன்னமே இவ்வுலகத்தில் கடவுளைக் குறிக்கும் அடையாளங்கள் உண்டாய்விட்டன. உதாரணமாக கிறிஸ்துவர்களின் அடையாளமாகிய சிலுவை, அவர்கள் ஜநிக்கிறதற்கு முன், அவர்களுடைய வேதம் எழுதப்படுவதற்குமுன், உண்டாயிற்று. ஸ்வஸ்திகம் என்னும் குறி எல்லா மதத்திலும் உண்டு. ஸ்வஸ்திகமாவது, 卍 ஓர் காலத்தில் பௌத்தர்கள் இந்த அடையாளங்களைக் கொண்டுவந்தார்களென்னும் எண்ணமிருந்தது. ஆனால் பௌத்த மதம் என்னும் சப்தம் உண்டாகுமுன்னே வெகுகாலமாக இந்த அடையாளம் வழங்கிவந்தது. பாபிலோன், எகிப்து முதலிய நாடுகளில் ஸ்வஸ்திகம் என்னும் அடையாளம் வழங்கிவந்தது. இது எதைக்காட்டுகிறது? இந்த அடையாளங்களெல்லாம் திடீரென்று உண்டாயிரா. அவைகட்கு ஏதோ ஒரு அர்த்தமிருக்கவேண்டும்.

பாஷைகளிலுள்ள பதங்கள் யாரால் உண்டாயின? பதமுண்டானபோதே அர்த்தமுண்டா யிருக்கவேண்டும். எல்லா மனிதர்களும் சபைகூடி மரம் என்றபதத்தை அதனாற் சுட்டப்படும் பொருளுக்கு வைத்தார்களா? அல்லது அம்மாதிரி ஒவ்வொரு பதத்தையும் ஏற்படுத்துவது ஸாத்தியமா? இல்லை. நாமமும் ரூபமும் எல்லோராலும் ஒரேகாலத்தில் உண்டாயிருக்குமென்பது எவ்வளவு அஸங்கதமோ அதுபோல் மேற்கூறிய குறிகள் இன்னகாலத்தில் இன்னரால் உண்டாயிற்றென்று நினைப்பது அறிவீனம். நாம் செய்யும் கர்மங்களில் மந்திரங்களும் தந்திரங்களுமுண்டு. இவ்விருவகையான அடையாளங்களும் நம்முடைய மத நோக்கங்களைக் குறிக்கின்றன. கோயில்களும், விக்கிரகங்களும், சிராத்தமுதலிய கர்மங்களும் பயனற்றதெனச் சொல்வது எளிது. ஆனால் அப்படி சொல்வது மூடத்தனமேயன்றி வேறில்லை. விக்கிராராதனை விஷயமாய் நம்முடைய முன்னோர்கள் கொண்ட கருத்தைச் சற்று ஆராய்ந்துபார்ப்போம். ஒரு திருடன் ஒரு தனவான்வீட்டுக் குழந்தையைத் திருடி ஒருவருமில்லாத படுக்கைக்குக் கொண்டுபோய் அதன்மேலுள்ள நகைகளைக் கழற்றி அதைக் கொலைசெய்ய நினைக்கிறான். அப்போது திடீரென்று ஓர் வெடிசப்தம் உண்டாகிறது. இந்த சப்தந்தான் ஸ்ரீ வரதராஜஸ்வாமியின் புறப்பாட்டுக்காகப் போட்டவெடி. உடனே கொலைகாரப்பாதகனாகிய அந்தத்திருடன் ஒரு நிமிஷநேரமாவது ஈசுவரனை நினைக்கிறான். அவரிருக்கும் திக்கைநோக்கிக் கும்பிடு போடுகிறான். இந்த துராத்மாவாகிய கொலைகாரனுக்குச் சிறிதுநேரமாவது ஈசுவரனைப்பற்றிய நினைவை யுண்டாக்கியது ஸ்ரீ வரதராஜஸ்வாமியின் உற்

சவமன்று ? ஒரு குழந்தை கறந்துவைத்த பாலைத் தொடவருகிறது. அவ்வருமையான குழந்தையை தாய் தள்ளி அடீ குழந்தாய், அந்தப் பாலைத்தொடாதே. அது தேவபூஜைக்கு வேண்டும் என்கிறாள். உடனே குழந்தை மறுவார்த்தை பேசாமல் தேவபூஜைக்கு என்று கேட்டவுடன் ஒருவிதமான பக்தியோடு விலகிப்போகிறது. இதைவிட நற்பழக்கம் வேறுண்டா ? வாடிக்கையாகப் பால் கொண்டுவரும் இடையனை 'அப்பா, இன்றைதினம் ஸ்வாமியின் அபிஷேகத்திற்காக ஒருபடி பால் வேண்டும்' என்று சொன்னால், அவன் ஸ்நாநம்செய்து சுத்தனாகவிருந்து பசுவைக் குளிப்பாட்டி மிகுந்த பயபக்தியுடன் பாத்திரத்தை நன்றாகத் துலக்கி பாலைக்கறந்து ஜலம் கலக்காமல் வெகு சிரத்தையுடன் கொண்டுவருகிறான். இந்த இடையனுக்கு ஈசுவரன் விஷயத்தில் இத்தனை விசுவாஸத்தை யுண்டாக்கியது ஈசுவராராதனையன்றோ ? இன்னும் நம்மவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு நாராயணன், மகாதேவன், கிருஷ்ணன், ராமன் என்று பகவானுடைய திவ்ய நாமங்களை வைக்கிறார்கள். அவர்களின் தாற்பரியம் யாது? உலக விஷயமாய்த் தங்கள் பிள்ளைகளைக் கூப்பிடும்போதுகூட ஈசுவரஸ்மரணை செய்ததாயிருக்கட்டுமென்பதன்றோ ? சைவர்கள் திவ்யமான விபூதியை நெற்றியில் தரிக்கிறார்கள். அவனைப் பார்த்தவுடன் "ஓகோ ஓர் சிவஸாம்பன் வருகிறான்" என்று எல்லோரும் நினைக்கிறார்கள். அவரவர்கள் ஏதோ லௌகிக விஷயமாக எவ்வளவு கவலையுடன் எத்தனை அவசரமாகப் பாதையில் போய்க்கொண்டிருந்தாலும் சைவனுடைய நெற்றியிலுள்ள விபூதியைப் பார்த்தவுடன் ஒரு நிமிஷநேரமாவது சிவ என்னும் திவ்ய நாமத்தை தியானிக்கிறார்கள். இப்படி அவர்களை ஈசுவரத்யானம் செய்யும்படி நினைப்பூட்டுவது விபூதியே. ஆதலின் விபூதியைத் தரிக்காதவன் மத துரோகியாகிறான். சுலபமாய் வெகு பேர்களுக்கு செய்யக்கூடிய உதவியைக் கெடுத்தவனாகிறான். இம்மாதிரியே திருமண்காப்பை நெற்றியில் தரிக்காத வைஷ்ணவனும் பாதகனே. அவனும் துரோகியே. இந்துக்களில் லலாடசூன்யர்கள் மகாபாபிகளாகிறார்களென்பதில் தடையில்லை. ஒரு இந்துவினுடைய வீட்டில் நுழைகிறோம். வாசற்படியில் நாமம், சங்கு, சக்கரம் வரைந்திருக்கின்றன. அவைகளைக் கண்டவுடன் ஸ்ரீமந் நாராயணனுடைய நினைவு நமக்குண்டாகிறது. ஆகாசத்தைப் பார்க்கிறோம். கருடன் பறக்கிறது. உடனே கருடன் விஷ்ணுவின் வாகனமென்பதால் அவரை தியானிக்கிறோம். அப்போது நமக்கு ஈசுவரத்யானம் கிடைக்கிறது. பிரயாணம் போகும்போது கோபுரம் தெரிகிறது. அதைக் கண்டவுடன் ஹரஹரவென்று கன்னத்திற் போட்டுக்கொள்ளுகிறோம். இதையெல்லாம் யோசித்தால் நம்முடைய முன்னோர்களாகிய மகரிஷிகள் எப்படியா

வது தங்கள் ஸந்ததியார்களுக்கு ஈசுவரபக்தி யுண்டாகட்டுமென்ற நற்கருத்துடன் இவைகளை யேற்படுத்தியதாக விளங்குகிறது. இன்னும் காவேரியைக்காணுகிறோம். உடனே பரதேவதையென்று நினைத்து பக்தி செய்கிறோம். அதன் கரையிலுள்ள அரசமரத்தைப் பார்க்கிறோம். மூலத்தில் பிரம்மாவின் ரூபமும், மத்தியத்தில் விஷ்ணுவின் ரூபமும், அக்கிரத்தில் சிவ ரூபமும், இருக்கிறதென்று நினைத்து அதைப் பிரதக்ஷிணம்செய்து நமஸ்கரிக்கிறோம். இன்னும் இம்மாதிரியான உதாரணங்கள் அநேகம் காட்டலாம்.

மேற்கூறிய உதாரணங்களால் இந்துக்களாகிய நாம் எப்போதும் ஈசுவரபக்தி செய்கிறவர்களென்றும் நம்முடைய தேவன் கோயிலில் மட்டுமல்ல எல்லாவிடங்களிலும் எப்போதும் நிறைந்துள்ளவரென்றும், எதைக்கண்டாலும் நாம் ஈசுவரனைப் பாவிக்கிறோமென்பதும் ஸ்பஷ்டமாகிறது. ஆதலின் அந்யமதஸ்தர்கள் செம்பிலும், கல்லிலும் உங்கள் சாமியிருக்கிறார் என்று உளறும் உளறல் நம்முடைய முன்னோர்களின் நோக்கங்களை யறியாத மூடத்தனத்தால் சொல்லுகிற விஷயமென்பதை யோர்ந்து அவர்களுடைய அறியாமைக்காக இரக்கப்படவேண்டும். நாம் செய்யவேண்டிய ஒவ்வொரு கர்மத்தையும் நாம் கிரமமாகச் செய்துவந்தால் ஞானத்தை அடைவோம். நாம் பேசுகிற ஒவ்வொருவார்த்தைக்கும், செய்கிற ஒவ்வொரு செய்கைக்கும் பலனுண்டு. சிலர் மந்திரமாவது தந்திரமாவது எல்லாம் வைதீகர்கள் காசுபறிக்கும் விதம் என்கிறார்கள். இவர்கள் உலோபகுணத்தாலும் அறிவின்மையாலும் ஜன்மாந்திரபாப விசேஷத்தாலும் இம்மாதிரி அயோக்யமாய் வசனிக்கிறார்களேயன்றி வேறல்ல. ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஒவ்வொரு தந்திரத்திற்கும் அர்த்தமும் பலனுமுண்டு. அர்த்தம் தெரியாமல் ஸந்தியாவந்தனமுதலிய கர்மங்களைச் செய்வதில் யாது பயன், என்று கேட்கும் புத்திசாலிகள் குழந்தைப் பருவத்தில் பாலின் உபயோகத்தைத் தெரியாமல் ஏன் அதை உட்கொண்டார்கள். இன்னும், இளங்குழந்தையா யிருக்கும்போது கண்ணை மூடிக்கொண்டு தாயின் முலைப்பாலை யேன் உண்டார்கள்? அப்போதே பாலின் பிரயோஜனத்தைத் தெரிந்துகொண்ட பிறகுதான் அதை யுட்கொள்வோமென்று சொல்லியிருந்தால் இப்போது வைதிகர்களிடம் அர்த்தத்தைத் தரத்தக்க இக்கேள்விகளைக் கேட்டிரார்களன்றோ! அப்போதே பசியால் வருந்தி யிறந்து ஒழிந்துபோயிருப்பார்கள். ஒருவேளை குழந்தைப் பருவத்தில் பேசும் சக்தியில்லையென்று விடைகொடுப்பார்களாகில் பேசும் சக்தியும் பேசத்தகுந்த பருத்தவாயுமுள்ள இக்காலத்தில்கூட ஜுரத்தால் அவதிப்படும்போது வைத்யன் கொடுக்கும் மருந்தின் குணத்தை யறியாமல் மழுக்கென்

று விழுங்குகிறார்களே. ஏன் அந்த மருந்தினுடைய பிரயோஜனத்தை ஆராய்ந்தறிந்து அதில் சேர்க்கப்பட்ட வஸ்துக்களென்னவென்று கேட்டறிந்தபின்உட்கொள்ளலாகாது? வைத்தியன் ஜுரத்துக்காகக்கொடுக்கும் மருந்து கழுதை மூத்திரமானாலும் தடையில்லாமல் வாங்கி உட்கொள்ளுகிறார்கள். அதுபோல், நம்முடைய மனதிலுள்ள மலமாகிய ஜுரத்தை நீக்கவேண்டி மகரிஷிகள் ஏற்படுத்திய மந்திர தந்திரங்களடர்ந்த கர்மங்களைச் செய்வதற்கென்ன ஆக்ஷேபம்? நெருப்பு என்று தெரியாமல் கையைவைத்தாலும் சுடுகிற சுபாவம் போகாததுபோல், கர்மத்தின் அர்த்தத்தை நாம் அறியாவிட்டாலும் அவைகளின் பலன் நமக்கு நிச்சயமாய்க் கிடைக்குமென்பதிற்சந்தேகமில்லை. சுவாமி எங்கேயிருக்கிறார்? அவரைக்காட்டு. புண்யம் எங்கேயிருக்கிறது? அதைக்காட்டு, என்று சிலர் அசந்தர்ப்பமான கெள்விகள் கேட்கிறதுண்டு. இன்னும் சிலர் பிரம்மத்தை அறிவதென்றால் என்ன? அதையறிவதாலுண்டாகும் ஆநந்த மெப்படியிருக்கும்? என்று கேள்விகள் கேட்பதுண்டு. அவைகட்கு சமாதானமாக ஒரு யோகி அடியில் வருமாறு மறுமொழி கூறுகிறார்:—"ஒரு ஊரில் இரண்டு சகோதரிகளிருந்தார்கள். ஒருத்திக்கு வயது 17. கல்யாணமாகி புருஷன் வீட்டில் வஸிக்கிறாள். இன்னொருத்திக்கு வயது 6. அவளுக்குக் கல்யாணமாகவில்லை. அவள் அக்காளைப்பார்த்து, அடி அக்கா! நீ உன் புருஷனுடன் தினந்தோறும் படுத்துக்கொள்ளுகிறையே, அதில் உனக்கு என்ன சுகம் என்றாள். அவளுக்கு என்ன பதில் சொல்வது? காமநூலையெல்லாம் பிரசங்கித்தாலும் 6 வயது பெண் சுகத்தையறியமுடியாது. ஆகலின் தமக்கை ஒரு யுக்திசெய்தாள். அடி தங்காய், பொறுத்திரு; இப்போ சொன்னால் உனக்குத் தெரியாது. இன்னும் சில வருஷங்கள் சென்றால் உனக்குக் கல்யாணமாகும். உன்புருஷனுடன் நீ படுத்துக்கொள்ளும்படி நேரிடும். அப்போது என்னுடைய உதவியின்றி நீயாகவே அந்த ஆநந்தத்தையறிந்துகொள்வாய் என்றாள். அதுபோல், கர்மங்களின் பலனையும், பிரம்மாநந்தமென்ப தின்னதென்பதையும் அவைகளைச்செய்து அனுபவித்தாலன்றோ தெரியும். கர்மங்களைச் செய்யாததற்கு முன்னே அவைகளைப்பற்றி ஸம்சயிக்கிறவன் புத்தியில்லாதவனே. நமக்கு ஸாதாரணமாய் உபயோகமில்லாததுபோல் தோன்றும் ஓர் அற்பவிஷயத்தை ஆராய்ந்துபார்ப்போம். நான் உனக்கு 5 அடிதூரத்திலிருந்து உன்னைத் தொடாமல் ஒருவார்த்தை சொல்லுகிறேன். உன்னைத் தொடவில்லை யென்று நீ நினைத்துக்கொண்டிருக்கிறாய். நீ சாஸ்திர ஆராய்ச்சியுள்ளவனா யிருந்தால் அவ்வாறு நினைக்கமாட்டாய். நான் ஒருவார்த்தையை உச்சரித்த மாத்திரத்தில் அந்த சப்தம் வெளியேயிருக்கும் காற்றில் மோதுகிறது. உடனே அக்காற்று அந்த சப்த

த்தை உன் காதில் கொண்டுபோகிறது. காதிலுள்ள நரம்புகள் மூளைக்குக்கொண்டுபோய் அதன் வழியாய் உன் மனதில் ஒரு அடையாளத்தைச் செய்கிறது. இவ்வடையாளத்தைச் செய்தால் உன்னை நான் தொட்டதாய் முடிகிறதன்றோ? இவ்வாறு நான் உன்னைத்தொடாமற் செய்துகொள்ள உன்னால் முடியுமா? நீ என்னோடு சம்பாஷிக்கவேண்டியது அவசியமானால் முடியாது தான். இதுதான் அமாவாசை தினங்களிலும் சிராத்தாதி கர்மங்கள் செய்யும் காலங்களிலும் பரிசுத்தர்களாயிருக்கவேண்டி பிராமணர்கள் இதர ஜாதியாருடன் சம்பாஷிக்காததற்குத் தக்க காரணம். வார்த்தையின் மகிமையைப் பாருங்கள்; ஒருவன் மற்றொருவனை முட்டாளென்கிறான். உடனே அவனுக்குக் கோபமுண்டாகி சொன்னவனைக் குத்தவருகிறான். சாந்தமான நல்ல நிலைமையிலிருக்கும் ஒரு மனுஷ்யனை முட்டாள் என்னும் சிறிய பதம் அந்நிலைமையைக்கெடுத்து, கோபமூட்டி, தன்னை மறக்கடித்து, துஷ்கிருத்யத்தைச் செய்யும்படி தூண்டுமானால் வேதத்திலுள்ள மகாமந்திரங்களினால் உபயோகமில்லையென்று சொல்வது முதற்றரமான மூடத்தனமன்றோ? ஒரு ஸ்திரீ அழுதுகொண்டிருக்கிறாள். அவளை இன்னொரு ஸ்திரீ அம்மா அழாதே என்று பரிவுடன் உபசரித்து தேறுதல் சொல்லுகிறாள். உடனே அந்த ஸ்திரீ அழுகையை நிறுத்திக் கொஞ்சம் கொஞ்சமாய் முகமலர்ச்சியைக் கொள்ளுகிறாள். இப்போது வார்த்தைகளின் மகிமையை அறிகிறாயன்றோ? இப்படிப்பட்ட பதங்களின் சக்தியை யறிவதும் கர்மயோகிகளின் கடமையே.

நாம் பிறருக்குச் செய்யவேண்டிய கடமையாவது அவர்களுக்கு உதவிசெய்வதென்றருத்தம். நாம் உலகத்திற்கு உபகாரம் செய்வதென்பது உண்மையானாலும் அதனால் நமக்கே நன்மையுண்டாகிறது. நாம் அவர்களுக்குச் செய்யும் கடமை நமக்குச் செய்யும் கடமையாகிறது. நாம் உலகத்திற்கு உபகாரம் செய்யவேண்டுமென்று விதியிருந்தாலும் உலகமானது நம்முடைய உதவிக்காகக் காத்திருக்கவில்லை. உலகத்தில் துன்பப்படுகிறவர்களை ரக்ஷிப்பது நமது கடமையானாலும் அப்படிசெய்வதிலும் நம்முடைய கடமையைத்தான் செய்கிறோமேயன்றி வேறல்ல. இந்த உலகம் நல்லதுமல்ல, கெட்டதுமல்ல. நம்முடைய நன்னடக்கையை இங்கு விர்த்திசெய்கிறோம். ஒவ்வொரு மனுஷ்யனும் தன்னுடைய நன்மைக்காக ஒரு உலகத்தையுண்டாக்கிக்கொள்ளுகிறான். சிறுவர்கள் உலகத்தை நன்மையாகவும் கிழவர்கள் அதைத் தீமையாகவும் நினைக்கிறார்கள். இருதிறத்தாரும் மூடர்களே. இந்த உலகவாழ்க்கை நன்மையுமல்ல, தீமையுமல்ல. அவனவனுடைய அறிவுக்குத்தக்கபடி இது நன்மைபோலும் தீமைபோலும் காணப்படுகிறது. மிகுந்த அனுபோகசாலியானவன் இவ்வுல

கத்தை நல்லதென்றும் சொல்லான். கெட்டதென்றும் சொல்லான். நெருப்பை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். குளிர்காலத்தில் அதன் பக்கத்தி லுட்கார்ந்துகொண்டால் வெகு ஆனந்தமாயிருக்கிறது. அப்போது அதை நல்லதென்கிறோம். அந்த நெருப்பு நம்முடைய விரலைச் சுட்டுவிட்டால், அப்பா நெருப்பு கெட்டதென்கிறோம். அது சுபாவத்தில் நல்லதுமல்ல, கெடுதலுமல்ல. அம்மாதிரியே இவ்வுலகமும். நம்முடைய உதவியின்றி இவ்வுலகம் வாழக்கூடும்.

ஆயினும் நாம் நன்மைசெய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். நன்மை செய்வதால் பிறருக்கு உபகாரமுண்டென்பதைத் தெரிந்துகொண்ட நாம் அதைச் செய்தே தீரவேண்டும். கையில் காலணாவை வைத்துக்கொண்டு பெரிய மேடையில் நின்று, அடே! பிச்சைக்காரா இதோ காலணா கொடுக்கிறேன், பெற்றுக்கொள், என்று கர்வத்துடன் சொல்லுவது கூடாது. நாம் நன்மை செய்யவும் நற்குணத்தை விர்த்திபண்ணவும் அனுகூலமாக, ஏழை பிறந்திருக்கிறானே யென்று அவனிடம் நன்றி பாராட்டவேண்டும். அவனை வந்திக்கவேண்டும். நீ பிச்சைக்காரனுக்கு ஏதோ நன்மை செய்ததாய் எண்ணுகிறாய். வெளியே அவ்வாறு தோன்றுகிறதே யன்றி, உண்மையில் அப்படியில்லை. நீ தானம் கொடுப்பதால் உன்னை ஈசுவரன் ஆசீர்வதிக்கிறார். அதனால் உனக்கு நன்மையுண்டாகிறது. ஏதோ சத்திரங்களும், சாவடிகளும், சாலைகளும் ஏராளமான திரவியம் செலவழித்து உண்டாக்கியதாயும், அநேக ஜனங்களுக்கு நன்மையைச் செய்துவிட்டதாயும் நினைக்கிறாய். ஒரு இடிவிழுந்தால் நீ கட்டிய சத்திரங்களும் போட்ட சாலைகளும் பைசலாய்விடுமே. அப்புறம் நீ ஜனங்களுக்குச் செய்த நன்மை எங்கே யிருக்கும். ஒரு பெருங்காற்று அடித்தால் நீ கட்டிய கட்டடங்கள் பறந்துபோம். ஆகலின் நாம் ஏதோ உலகத்திற்கு உபகாரம் செய்துவிட்டதாய் நினைக்கும் எண்ணத்தைத் தவிர்க்கக்கடவோம். உலகம், நீ தருமம் செய்யப்போகிறாயென்று காத்துக்கொண்டிருக்கவில்லை. நாம் எப்போதும் நன்மையைச் செய்வதால், நமக்கு நலத்தைத் தேடிக்கொள்ளுகிறோமே யன்றி வேறில்லை. நாம் ஒருவனுக்கு நன்மை செய்ததாய் நினைப்பது தப்பு. அதனால் நமக்கு துக்கமுண்டாகிறது. ஒருவனுக்கு நன்மை செய்கிறதாய் நினைத்து அவன் நன்றியற்றவனாயிருக்கிறானே யென்றெண்ணுவது விசனத்தைத் தருகிறதன்றோ. ஆகலின் உலகத்திற்குச் செய்யும் நன்மை உண்மையில் நமக்குச் செய்ததாகவே நினைக்கவேண்டும். நாம் செய்யும் உபகாரத்திற்காகப் பிறர் பிரதியுபகாரம் செய்யவேண்டுமென்று எண்ணுவது பிசகு. நாம் உபசரிக்கும் அதிதிகளைத் தெய்வமாய்ப் பாவிப்பதவசியம். அவர்களன்றோ

நம்முடைய நற்பயிற்சிக்குக் காரணமானார்களென்றுமன்றி அவர்களிடம் நன்றி பாராட்டவேண்டும். நம்மைச் சம்பந்தப்படுத்தாது நாம் எல்லாவற்றையும் ஈசுவரார்ப்பணமாகப் பலனை விரும்பாமற் செய்வது நன்மை. அதனால் நமக்கு துக்கம் என்பதே உண்டாகாமல் மனம் நல்ல நிலைமையிலிருக்கும். இவ்வுலகத்தில் எக்காலத்திலும் நன்மை தீமைகள் கலந்தே யிருக்கின்றன. ஆதலின், நன்மையை அடையும் போது உலகத்தைப் போற்றுகிறதும், தீமையை அடையும்போது அதைத் தூற்றுகிறதும் கூடாது.

ஒரு காலத்தில் ஓர் கிராமவாஸி தனக்கு ஐசுவரியமுண்டாக வேண்டுமென்றும், அதற்காக ஒரு பிசாசை வசியப்படுத்தவேண்டுமென்றும் எண்ணி, ஒரு ஸாதுவிடம் சென்று அவரை நமஸ்கரித்து, சுவாமி, ஒரு பிசாசை எனக்கு வசியம்செய்து கொடுக்க வேண்டும் என, அவர் போடா முட்டாளே, என்று சொல்லி அவனைத் துரத்திவிட்டார். அவன் மறுபடியும் வந்து அவரை வேண்டிக்கொண்டதால் ஒரு மந்திரத்தை யுபதேசித்து அதை 108 தரம் உச்சரித்தால் பிசாசு பிரத்யக்ஷமாகுமென்றார். அவ்வாறே அவன் உச்சரித்தவுடன் ஓர் பெரிய பிசாசு தோன்றியது. அது உடனே அவனை நோக்கி, எனக்கு எப்போதும் நீ வேலை கொடுக்காமற்போனால் உன்னைக் கொன்றுவிடுவேன் என்றது. கிராமவாஸி அதை நோக்கி 'இதோ இந்தக் காட்டை யழித்துவிடு' என்றான். அவ்வாறே அக்காட்டை ஒரு நொடியில் அழித்துவிட்டது. அதன் பிறகு 'இந்த இடத்தில் பெரிய வீடு ஒன்று கட்டி அதில் சகல சாமான்களையும் நிரப்பு' என்றான். உடனே அப்பிசாசு அம்மாதிரி வீட்டைக்கட்டி அதில் சாமான்களை நிரப்பிவிட்டது. அதன் பிறகு என்னவேலை யென்று கேட்க, கிராமவாஸி ஒன்றும் வேலையிடத் தெரியாமல் விழித்தான். அப்போது பிசாசுக்குக் கோபமுண்டாகி இதோ நீ வேலையிடாவிட்டால் உன்னை விழுங்கிவிடுவேன் என்று வாயைத்திறந்தது. குடியானவன் பயமடைந்து ஓட்டம் பிடித்தான். பிசாசும் தொடர்ந்து அவன் முன் வந்து நின்றது. கடைசியாக அதனுடைய உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸாதுவிடம்போய் முறையிட்டான். அவர் 'அடே, முட்டாள், அப்போதே சொன்னேன். நீ என் வார்த்தையை லக்ஷியம் செய்யவில்லை. நல்லது, அதோ விருக்கும் நாயின் வாலை வெட்டிக்கொண்டு வா; அதைப் பிசாசினிடம் கொடுத்து வளைவில்லாமல் நேராக விருக்கும்படி செய்யச்சொல்' என்றார். அம்மாதிரியே செய்யும்படி குடியானவன் பிசாசுக்குக் கட்டளையிட்டான். அது மிகுந்த சிரமப்பட்டு வாலை நீட்டிப் பார்த்தது. உடனே அந்த வால் மறுபடியும் வளைந்துபோயிற்று. இம்மாதிரி வெகுகாலம் வரையும் நாயின் வாலை குணக்கெடுக்க

மூபன்றும் பயன்படாமல் அது பழைபபடி வளைந்து போவதைக்கண்டு விசனமடைந்து குடியானவனிடம் வந்து, உன்னை நான் கொல்லாமல் விடுகிறேன். என்னை நீ விட்டுவிடென்று கெஞ்சி, தான் செய்த பிரயோஜனமற்ற காரியத்தை விட்டுவிட்டது. அதுபோல், இவ்வுலகத்தில் மதவெறிகொண்டவர்கள் தாங்கள் மதத்திற்காகப் பாடுபடுவதாயும், இதர மதஸ்தர்களைத் திருத்துவதாயும் எண்ணிக்கொண்டு பிறரை நிந்திக்கிறதும், சமயம் வாய்க்கும்போது பிராணத்தியாகம் செய்துகொள்ளுகிறதுமாயிருக்கிறார்கள். இவர்களுடைய வெறியால் ஒரு காரியமும் நடவாது. இவர்கள் தங்களுக்கும் இதரர்களுக்கும் தீமையைச்செய்கிறார்கள். இப்படிப்பட்ட மதவெறியை நாயின் வாலைக் குணக்கெடுக்க முயல்வதற்கு ஒப்பிடலாம். உலகம் நம்மால் திருந்துமென்று நாம் நினைப்பது தவறு. இதுவரையும் செய்த பிரஸங்கங்களில் கவனத்தில் வைக்கவேண்டிய முக்கிய அம்சங்களாவன. (1) நாமெல்லாம் உலகத்திற்குழைக்கக் கடன்பட்டவர்கள். உலகம் நமக்கு யாதொன்றும் செய்யக் கடமைப்படவில்லை. இந்த உலகத்தில் நம்முடைய கடமையை நாம் செய்யும்படி ஈசுவரன் கிருபை செய்தாரே யென்பதாய் மகிழ்ச்சி கொள்ள வேண்டும். உலகத்திற்கு நாம் உபகாரம் செய்யும்போது நமக்கு நன்மையைச் செய்துகொள்ளுகிறோமென்பதை மறக்கலாகாது. (2) இந்த ஜகத்தில் கடவுளுண்டு. நீயாவது நானாவது இந்த உலகத்தைத் தாங்குகிறோமென்றெண்ணலாகாது. ஈசுவரன் எப்போதும் இதிலிருந்துகொண்டு ஸகல ஜனங்களையும் இரக்ஷிக்கிறார். அவர் அழிவில்லாதவர். எப்போதும் சுறுசுறுப்பும் ஜாக்கிரதையுமுள்ளவர். இந்த உலகமெல்லாம் தூங்கும்போதும் அவர் தூங்கமாட்டார். உலகத்திலுண்டாகும் சகலவித தோற்றங்களும் மாறுதல்களும் அவருடைய காரியங்களே. (3) நாம் ஒருவரையும் வெறுக்கக் கூடாது. இந்த உலகத்தில் எப்போதும் நன்மையும் தீமையும் கலந்தபடியாயிருக்கும். தீனர்களிடம் இரக்கம் பாராட்டுவது நமது கடமை. கெடுதலைச் செய்கிறவனிடமும் நாம் பக்ஷம் பாராட்ட வேண்டும். இந்த உலகந்தான் நம்முடைய நன்னடக்கையாகிய பயிற்சியைச் செய்வதற்கான இடம் (4) நாம் மதவெறி பிடித்து துஷ்கிருத்யங்களைச் செய்யலாகாது. மதவெறி பிடித்தவர்களிடம் அபிமானமென்பதில்லாமற் போகும். அவர்களுக்குக் கருணையுண்டாகாது. மதவெறி பிடித்த சிலர் "நாம் பாவிகளை வெறுக்கவில்லை." அவர்களிடமுள்ள பாவத்தை வெறுக்கிறோமென்பார்கள். பாவியையும் பாபத்தையும் வேறாகப் பிரிக்கும் பேர்வழிகள் இவ்வுலகத்திலிருப்பதரிது. அப்படிப் பிரிப்பது சாத்தியமன்று. மதவெறியை விட்டொழித்து சாந்தமாக நமது கடமையைச்செய்து முக்தியடைய வேண்டும்.

## நன்மை - தீமை.

நன்மையான காரியங்களைச்செய்கிறவன் மேன்மேலும் நன்மையானகாரியங்களையே செய்ய முயலுகிறான். தீத்தொழிலைப் புரிகிறவன் மேன்மேலும் தீத்தொழிலையே செய்ய எத்தனிக்கிறான். இதற்கென்ன காரணம்? நாம்செய்யும் ஒவ்வொரு காரியமும் நம்மிடம் வந்து சேருகிறது போல், நாம் செய்யும் காரியங்கள் பிறரிடம் செல்லவும், அவர்கள் செய்யும் காரியம் நம்மிடம் வரவும் கூடும். நான் ஒரு காரியத்தைச் செய்யும்போது என் மனதில் அசைவுண்டாகிறது. இதே நிலைமையிலுள்ள எல்லா மனதுகளும் இந்த அசைவால் தாங்களும் அசையக்கூடும். ஆதலின் நாம் நன்மையைச் செய்வதால் நமக்கேயன்றி பிறருக்கும் உபகாரத்தைச் செய்தவர்களாகிறோம். தீமையைச் செய்வதால் நமக்கும் பிறருக்கும் தீமையை விளைக்கிறோம். நாம் செய்யும் கெட்ட செய்கை 100-வருஷம் கழித்து நமது ஸந்ததியார்களைப் பாதிப்பதுமுண்டு. இரும்பைக் காந்தமிழுப்பதுபோல் நம்முடைய மனம்போன்ற நிலைமையையுடைய வேறொருவர் மனம், நாம் செய்யும் காரியங்களையும் எண்ணுகிற எண்ணங்களையும் ஆகர்ஷிக்கிறது.

கர்மயோகத்திற் சொல்லியிருக்கிறபடி ஒவ்வொரு காரியமும் அதன் பலனை யடைந்த பிறகுதான் ஒழியக்கூடும். நல்ல காரியம் செய்தால் நன்மை யுண்டாகும். கெட்டகாரியம் செய்தால் கெடுதலுண்டாகியே தீரும். நாம் பாபம் செய்தால் அதன் பலனை அனுபவித்தே தீரவேண்டும். அதைத் தடுக்க யாராலும் ஆகாது. காரணமுண்டானல் காரியமுண்டாகுமன்றோ? நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் நன்மை தீமை கலந்திருக்கின்றன. முற்றிலும் நன்மையான காரியமில்லை. இதற்கொரு உதாரணம் சொல்லுகிறேன். நான் உங்களுடன் பேசிக்கொண்டிருக்கும் போது உங்களுக்கு ஏதோ நன்மை செய்கிறதாக எண்ணுகிறேன். இதே சமயத்தில் ஆகாசத்திலுள்ள அற்பமான சிறு பூச்சிகள் என்னிடமிருந்து வரும் உஷ்ணவாயுவால் தகிக்கப்படுகின்றன. ஆதலின், உங்களுக்கு நன்மையைச் செய்யும்போதே ஆகாசத்தில் கண்ணுக்குத் தெரியாமற் பறந்துகொண்டிருக்கும் சிறுபூச்சிகளை வதைசெய்கிறேன். ஆதலின், முற்றிலும் நன்மையான காரியம் ஒன்றுமில்லை. நல்ல செய்கை செய்யும்போது அதன் நடுவில் கெட்டசெய்கை யொன்றைக் காண்பதும், தீயசெய்கை செய்யும்போது அதன் நடுவில் நற்செய்கை யொன்றைப் பார்ப்பதும் கர்மயோகியின் லக்ஷணம்.

இதனல், நாம் பிறருக்குத் தீமை செய்துகொண்டே யிருக்கிறோமென்றேற்படுகிறது. நாம் உட்கொள்ளும் ஒவ்வொரு பிடி அன்

னமும் இன்னொருவரிடம் அபகரிப்பதுதான். இன்னொருவன் சாப்பிடக்கொண்டுபோகும் அன்னத்தைத்தான் நாம் பிடுங்கி வாயிற்போட்டுக்கொள்ளுகிறோம். ஆகலின், எவ்விதமான கருமம் செய்தாலும் அதனால் யாரேனும் சிலருக்கு ஹிம்ஸை யுண்டாகாமலிராது. நீ எவ்வளவு வருஷங்கள் உழைத்தாலும், நன்மையான காரியங்களையே செய்து வந்தாலும், அப்போதும் யாராகிலும் சிலருக்கு துன்பத்தைச் செய்வதும் அதனால் உன்னை பாபம் அடைவதும் நிச்சயமே.

ஆனதால் கர்மம் செய்வதின் தாற்பரியமென்ன? எல்லாக்கர்மங்களையும் பலனைக்கோராமல் ஈசுவரார்ப்பணமாகச் செய்தாலன்றி கர்மத்தால் முக்திபடையமாட்டோம். ஞானம், பக்தி, கர்மம் ஆகிய எல்லாவற்றின் முடிவும் ஒன்றுதான். நான் என்னும் விவகாரமற்றுப் போய் எல்லாம் நீ யென்று சொல்வதுதான் கர்மயோகத்தின் குணம்.

இவ்வுலகத்தில் மூன்று வகையான மனுஷ்யர்களுண்டு. (1) தங்களுடைய பிராணனைக் கொடுத்தாவது பிறருக்கு உபகாரஞ்செய்யும் தெய்வத்தன்மையுள்ள ஸாதுக்கள். இம்மாதிரி ஸாதுக்கள் 100 பேர்களிருந்தால் எல்லோரும் கடைத்தேறலாம். (2) தங்களுக்கு ஹிம்ஸையில்லாமலிருந்தால் பிறருக்கு நன்மை செய்யக் கூடியவர்கள். (3) தங்களுக்கு நன்மை செய்துகொண்டு பிறருக்குத் தீமைவிளைக்கிறவர்கள். இந்த மூன்றுபேர்களைத் தவிர நாலாவது வகுப்பாருமுண்டு. அவர்கள் தங்களுக்கு நன்மையுண்டாகா விட்டாலும் பிறருக்குத் தீமை செய்ய ஆசைப்படுகிறவர்கள். அவர்களுக்கு யாதொரு பிரயோஜனமும் இல்லாவிட்டாலும் பிறருக்குக் 'கெடுதல் செய்வதே அவர்களுடைய சுபாவம்.

நான், என்னுடையது, என்னும் வியவகாரங்கள் பிரவ்ருத்தியெனப்படுகிறது. ஸாதாரணமாய் ஜனங்களெல்லோருக்கும் பிரவ்ருத்தி மார்க்கமே படிந்துவருகிறது இந்த மார்க்கம் தொலையத் தொடங்கினால் நிவ்ருத்தி யுண்டாகிறது. இந்த நிவ்ருத்திதான் எல்லா மதங்கட்கும் ஆதாரம். இதுவே நன்மைக்கு வித்தாகும். ஸகல கர்மங்களிலும் நன்மையும் தீமையும் கலந்திருப்பதால் நாம் கர்மத்தை எப்படிச் செய்கிறது? எவ்வாறு முக்தியடைகிறது? இந்த கேள்விக்கு ஜெயினர்கள் மரணமடைவதே முக்தி யென்கிறார்கள். பகவத்கீதையில் இதற்குச்சமாதானம் அடியில் வருமாறு வரைந்திருக்கிறது "நீ உலகத்தினின்றும் வேறாயிருப்பதாய் எண்ணிக்கொண்டு, அதில் செய்யும் காரியங்களை உனக்காக அல்லாமலும் பலனையுத்தேசிக்காமலும் செய்தால் உனக்கு அளவற்ற நன்மையுண்டாகும், மோக்ஷம்கிடைக்கும்." இந்த சிலாக்கியமான வாக்கியத்தின்படி நாம் நடக்கவேண்டும்.

நீ உனக்கென்று நல்ல கர்மத்தைச் செய்தால் அதன் நல்லபலன் உன்னை வந்தடையும். நீ உனக்கென்று கெட்ட காரியங்களைச்செய்தால் அதன்கெட்டபலன் உன்னைச்சேரும் நீ உனக்காகவல்லாமல் ஈசுவரப்பிரீதியாய் நன்மை தீமைகளைச் செய்தால் அவைகளின் புண்ய பாபங்கள் உன்னைச் சாரமாட்டா. ஆதலின் கர்மயோகத்தில் "உலகத்தைத் துறக்காதே உலகத்திலேயே வாஸம் செய். உன்னாற் கூடியமட்டும் அதிலிருந்து அநுபோகமெய்து." உன்னுடைய சுகத்துக்கென்றால் ஒரு காரியமும் செய்யாதே. சுகமடைவதை நீபிரதானமாக நினைக்காதே. நான் என்னும் அகங்காரத்தைக் கொல்லு; பிறகு உலகத்தை அநுபவி. மூடர்களான தாய்தந்தையர்கள் பிள்ளைகளுக்கு அடியில்வருமாறு உபதேசிக்கின்றனர்:—'கடவுள் உனக்காக இவ்வுலகத்தில் சூரிய சந்திரர்களைப் படைத்தார்" என்பதாக கடவுளுக்கு வேறுவேலையில்லாமல் இவர்களின் பிள்ளைகளுக்காக இவ்வுலகத்தைப்படைத்ததாய் எண்ணிக்கொண்டார்கள் போலும். இன்னும் சில அறிவினர்கள் "இந்த உலகம் மனுஷனுக்காகப் படைக்கப்பட்டது. இந்த ஆடுமாடுகளெல்லாம் மனிதர்களுக்கு ஆகாரமாகட்டு மென்று கடவுள் சிருஷ்டித்திருக்கிறார்" என்று கூறுகிறார்கள். அப்படியானால் புலிகளெல்லாம் கடவுளை நோக்கி "சுவாமி தாங்கள் எங்களுக்கு ஆகாரமாக மனிதர்களைப் படைத்தீர்கள். அந்தப்பாவிகள் எங்கள் ஸமீபமாக வந்து ஆகாரமாகி தங்களுடைய கட்டளையை நிறைவேற்றவில்லை. ஆதலின் தாங்கள் அவர்களைத் தண்டிக்கவேண்டாமா ?' என்று ஜாம் செய்யக்கூடும். உலகம் நமக்காக சிருஷ்டிக்கப்பட்டதானால் நாமும் உலகத்திற்காகப் படைக்கப்பட்டிருக்கிறோம். நம்முடைய சுகத்திற்காக இவ்வுலகம் உண்டாக்கப்பட்டிருக்கிறதென்று கூறுவது அறிவீனம். இந்த உலகம் நமக்காக உண்டானதல்ல. ஒவ்வொரு வருஷமும் கோடானுகோடி மனுஷ்யர்கள் இதைவிட்டொழிந்துபோகின்றனர். உலகம் அவர்களுக்காக வியஸனப்படுகிறதில்லை. ஆதலின் உன் கர்மத்தைச்சரியாக நீ செய்வதற்கு முதலில் உன்னை அதில் சம்பந்தப்படுத்தாமல் நீக்கிக்கொள்ளவேண்டும். என்னுடைய ஆசாரியன் "உன் குழந்தைகளுக்கு உன்னையோர் தாதிபோல் நினைத்துக்கொள்" என்று அடிக்கடி சொல்வதுண்டு. உன் குழந்தைகளை இரக்ஷிப்பதற்காக நீ ஏற்படுத்திய தாதி, வேலையிலிருக்கும்வரை உன் குழந்தையைத் தன் குழந்தைபோலெண்ணி உச்சிமோந்து சீராட்டிப்பாராட்டி வளர்க்கிறாள். அவளை நீ வேலையைவிட்டுத் தள்ளிய க்ஷணமே அவளுக்கு உன் குழந்தைமேலிருந்த ஆசை முற்றிலும் அற்றுப்போகிறது. அம்மாதிரியாகவே உன் பிள்ளை, பெண்சாதி முதலிய எல்லோரிடமும் உனக்குப் பற்றிருக்கவேண்டும். அதைவிட அதிக ஆசை வைத்தல் சஞ்சலத்திற்கிடம்.

முன்காலத்தில் வியாஸர் என்னும் மகரிஷியிருந்தார். அவருடைய முன்னோர்களெல்லாம் முக்தர்களாக முயன்றும் சாத்தியப்படவில்லை. அவரும் பூர்ணமான முக்தியைப் பெறவில்லை. ஆனால் அவருடைய புத்திரராகிய சுகர் என்பவர் பிரம்ம ஞானத்தை யடைந்தார். அந்த சுகர் சிறுவயதாயிருக்கும்போது அவரை ஞானயோகத்தைக் கற்றுவரும்படி ஜனகராஜனிடம் அனுப்பினார். ஜனகனுக்கு விதேகனென்று பெயர். அந்த ஜனகன் ராஜாவாயிருந்தாலும் தன்னை ஸ்தூலமாக நினைக்காமல் ஆத்மாவாகவே நினைப்பான். அவருடைய ஞானத்தைப் புகழாதவர்களில்லை. சுகர் வருகிறார் என்பதை ஜனகராஜன் அறிந்தும் அவரை வாவென்று உள்ளே யழைக்காமலும் உபசரியாமலும் சும்மாவிருந்துவிட்டான். சுகர் 3 நாளாக் கோட்டைவாசலண்டை காத்திருந்தார். ஒருவரும் வரவில்லை. நாலாவது நாள் அரசனுடைய மந்திரி பிரதானிகள் ஒரு அழகிய பல்லக்கைக் கொண்டுவந்து சுகரை அதில் எழுந்தருளச்செய்து அரண்மனைக்குள் அழைத்துப்போய் 7 நாள் பரியந்தம் திவ்யபோஜனம் செய்வித்தார்கள். 8-வது நாள் ஜனகராஜனிடம் சுகரை அழைத்துச்செல்ல அவர் முகத்தில் விசனம், சந்தோஷம் என்னும் குறிகளின்றி ஒரே தன்மையாய்க் கம்பீரமாக விருந்தார். அச்சபையிலுள்ள ஆடல்பாடல்களையும் அழகிய மாதர்களையும் சுகர் சிறிதேனும் கவனிக்கவில்லை. உடனே ஜனகராஜன் ஒரு பாத்திரம் நிறையப் பாலையூற்றி அதைச் சுகர் கையிற்கொடுத்து இதைச் சிறிதேனும் சிந்தாமல் இந்தச் சபையை ஏழுதரம் வலமாகச் சுற்றென்றான். அப்போது சபையில் ரம்பையைப்போன்ற மாதர்கள் கேளிகை, நர்த்தனம் முதலியவை செய்தார்கள். ஒவ்வொரு வஸ்துவும் கண்ணைக் கவரத்தக்கதாயிருந்தது. சங்கீத ஓசை முழங்கிற்று. இன்னும் இன்பத்தை யூட்டக்கூடிய அநேக விதமான விளையாட்டுகளெல்லாம் நடந்தன. சுகர் ஒன்றையும் கவனியாமல் பால்நிரம்பிய பாத்திரத்தைக் கையிலேந்தி சபையை ஏழுதரம் சுற்றி ஜனகராஜனிடம் வந்தார். அவன் சுகரை நமஸ்கரித்து சுவாமி, தாங்கள் திவ்யஞானி. என்னிடம் கற்றுக்கொள்ளவேண்டியதொன்றுமில்லை'யென்றனுப்பிவிட்டான். இம்மாதிரியாக நல்விஷயத்தில் கவனம் வைக்கிறவனைப் பாபங்கள் யாதுசெய்யும்? எவனுக்கு எந்தப்பொருளிலும் இச்சைவைக்காத நிர்மல மனதுண்டோ அவனே இவ்வுலகத்தில் வசிக்கத் தகுந்தவன்.

---

# முக்தி.

பலனைத்தரும் செய்கையும் எண்ணமும் கர்மமெனப்படுகிறது. முன்செய்த வினையின் பயன் கர்மமே. ஏனெனில், இப்பயனை யனுபவிப்பதால் இன்னொரு பயனுண்டாகிறது. ஆதலின் கர்மமென்பது காரண காரியங்களிரண்டையும் குறிக்கிறது. இத்தகைய கர்மம் சகல பிராணிகளிடத்தும் உண்டு. இதைத்தவிர்க்க ஒருவராலும் ஆகாது. ஒன்றுக்குப்பின் மற்றொன்று உண்டாவது நிச்சயமாயின் முதலிற் கூறியதைக் காரணமென்றும், பின்னாற் கூறியதைக் காரியமென்றும் சொல்லுகிறோம். மேற்கூறியவற்றை நியாய சாஸ்திரிகள் வியாப்தி என்கிறார்கள். ஒன்றிலிருந்து மற்றொன்று உண்டாவதற்கு நம்முடைய மனமே காரணமென்று அவர்கள் கூறுகின்றனர். நம்முடைய சித்தத்தில் ஒரு எண்ணம் தோன்றும்போது அதைப்போன்ற தன்மையுள்ள மற்ற எண்ணங்களுமுதிக்கின்றன. தகப்பனென்னும் ஓர் எண்ணம் நம்முடைய மனதில் தோன்றினால் பிள்ளையென்ற எண்ணமும் கூடவே தோன்றுகிறது. இதற்குத்தான் ஸம்ஸ்கிருதத்தில் வியாப்தி என்கிறோம். காரியகாரணங்களென்பன நம்முடையமனதில் தோன்றுகிற விஷயங்களேயன்றி வெளியேயுள்ளனவல்ல. எப்போதும் கிரமமாக அதாவது ஒன்றன்பின் ஒன்றாக உண்டாகும் தோற்றங்கள் நம்முடைய மனதால் கிரகிப்பதற்கு சுலபமானவைகளா யிருக்கின்றன.

மனுஷ்யன் இறந்துபோகிறான். பகலுமிரவும் மாறிமாறி வருகின்றன என்னும் இவைபோன்ற விஷயங்கள் எப்போதும் நிச்சயமானவை. அதாவது, மேற்கூறிய விஷயங்கள் இவ்வுலகத்தில் எப்போதும் உண்டாகத்தக்கவை. இவ்வுலகமென்பது தேசகால நிமித்தங்களினால் நாம் அறியக்கூடிய சிறிது பாகத்தை மட்டுமே குறிக்கிறது. ஆதலின் இந்த பாகத்தையே நாம் உலக மென்பதால் இதற்கு அப்புறமுள்ள மற்றப்பாகங்களில் காரிய காரணங்களென்னும் வியவகாரம் இல்லையென்று ஏற்படுகிறது. ஏனெனில், காரியகாரணங்களென்பன நம்முடைய மனதைச் சார்ந்த விஷயமாதலால் அதற்கெட்டாத உலகத்தின் மற்றப்பாகங்களில் இருக்க முடியாது. நம்முடைய மனதிற்கும் ஐந்து புலன்கட்கும் அப்பாலுள்ள உலகத்தில் வியாப்தி என்பதில்லை. நாம ரூபமில்லாத வஸ்துவை எவ்விதமான சட்டமும் பாதிக்கமாட்டாது. தேசகால நிமித்தமென்பன உள்ளவரையில் மோக்ஷமென்னும் வியவகாரம் உண்டாகமாட்டாது. இந்த உலகமானது யாராலுண்டானதென்றும் எதன்பேரிலிருக்கிறதென்றும் எங்கு செல்லுகிறதென்றும் அநேகர் கேட்பதுண்டு. உலகம் தேசகால நிமித்தங்களுக்கு அதீதமாயுள்ள பிரம்மத்தினிடமிருந்து உண்

டாயிற்றென்றும் பந்தத்தின் மேலிருக்கிறதென்றும் மறுபடியும் பிரம்மத்தினிடமே லயிக்கிறதென்றும் சாஸ்திரம் கூறுகிறது. மனுஷ்யன் தானே பிரம்மமென்பதை மறந்து இவ்வுலகத்திலுள்ள அற்ப விஷயங்களான சந்தோஷம், துக்கம், பொறாமை முதலிய குணங்களை ஸ்வீகரித்து இவ்வுலக சுகத்தையே பெரிதாக நினைக்கிறான். அடிக்கடி பிறவியை அடைவதான ஆசையைக் கொள்ளுகிறான்.

மோக்ஷமடைய வேண்டுமானால் இவ்வுலகத்தைத் துறப்பது அவசியம். ஏனெனில் தேசகால நிமித்தங்கட் குட்பட்ட இவ்வுலகத்தில் மோக்ஷமில்லை. நம்முடைய ஐம்பொறிகளும், மனதும் செல்லக்கூடிய எந்த விடத்திலும் மோக்ஷமில்லை. ஜன்மத்தில் நமக்கு ஆசையற்றாலன்றி மோக்ஷம் கிடைப்பதரிது. ஆதலின் பந்தத்தினின்று விடுபடவேண்டுமானால் இவ்வுலகத்தைத் துறக்கவேண்டிய அவசியம்.

ஆனால் இவ்வுலகத்தைத் துறப்பது எளிதன்று. மிகச்சிலரே அவ்வாறு துறக்கக்கூடும். நம்முடைய சாஸ்திரத்திற் கூறியபடி உலகத்தைத் துறப்பதற்கு இரண்டு வழிகளிருக்கின்றன. ஒன்று, "நேதி நேதி" (இதுவல்ல இதுவல்ல) என்பது. மற்றொன்று "இதி இதி" என்பது. முதல்வழியை யனுசரிப்பது அசாத்தியம். எல்லோராலு மாகாது. ஒரே நிலைமையிலிருக்கக்கூடிய வைரம் போன்ற மனத்தினர்களாகிய மகான்களுக்கே நேதிமார்க்கம் பயன்படும். அவர்களுக்குச் சரீரமும் மனதும் கீழ்ப்படிந்து நடக்கும். ஆனால் அத்தகைய மகான்கள் மிகச்சிலரேயிருக்கின்றனர். மற்றவர்களெல்லாம் இதிமார்க்கத்தையே அனுசரிக்கிறார்கள். முள்ளை முள்ளாலேயே பிடுங்குவதுபோல் உலகபந்தங்களை அப்பந்தங்களைக் கொண்டே அறுக்கின்றனர். இதுவும் துறப்பதுதான். ஆனால் இம்மார்க்கத்தில் முக்தியடைவதற்கு வெகுகாலம் செல்லும். முதல்மார்க்கம் ஞானமார்க்கமென்றும் பின்னாற்கூறியது கர்மமார்க்கமென்றும் விளங்கும்.

கர்மயோகமென்பது என்ன? கர்மத்தின் ரஹஸ்யத்தை யறிவதுதான் கர்மயோகம். உலகத்திலுள்ள எல்லோரும் கர்மம் செய்கிறார்கள். எதற்காக? மோக்ஷமடைவதற்காக. தெரிந்தோ அல்லது தெரியாமலோ ஈ, எறும்புமுதல் மனுஷ்யன் வரையிலுமுள்ள ஸமஸ்த பிராணிகளும் மோக்ஷமடைவதற்காக கர்மங்களைச் செய்கின்றன. ஒவ்வொரு வஸ்துவும் பிரிந்துபோகப் பிரயத்தனப் படுகிறது. சூரியன் சந்திரன் முதலிய எல்லாம் பந்தத்தனின்றும் விடுபடவேண்டி பிரயத்தினம் செய்கின்றன. கர்மத்தை எவ்வாறு

செய்யவேண்டிய தென்பதை கர்மயோகத்தைப் படிப்பதால் அறிந்து கொள்ளுகிறோம். இவ்வுலகத்தில் நாம் சில நாள்தான் ஜீவிக்க முடியுமென்றும், இங்குள்ள இன்ப துன்பங்களை யனுபவித்தே தீர வேண்டுமென்றும், இவ்வுலகத்திற்கப்புறமே மோக்ஷமுளதென்றும், அம்மோக்ஷத்தை யடைவதற்காக நம்மை சம்பந்தப்படுத்தாமல் ஈசுவரார்ப்பணமாக சர்வ கர்மங்களையும் செய்யவேண்டியதென்றும் கர்மயோகி அறிந்துகொள்ளுகிறான். பந்தத்தினாலன்றி கர்மத்தினால் துக்கமுண்டாகிறதில்லை யென்பது கர்மயோகியின் அபிப்பிராயம். நாம் செய்யும் கர்மத்தை நமக்கு சம்பந்தப்படுத்திக்கொண்டால் அதனா லுண்டாகும் சுகதுக்கங்களாகிய பலன்கள் நம்மைச்சாரும். அன்னியருடைய படம் எரிவதைக்காணும் நாம் அவ்வளவாக விசனப்படுகிறதில்லை. நம்முடைய படமே எரிந்துபோனால் நமக்குண்டாகும் விசனத்திற்கு அளவிராது. ஏன்? இரண்டும் அகிழுப படங்கள் தானே. ஒன்று எரிந்துபோனால் சிறிது விசனமும், மற்றொன்று எரிந்துபோனால் அதிக விசனமும் கொள்ளுவானேன்? ஏனெனில், ஒரு படத்தைப் பிறனுடையதாகவும் மற்றொன்றை நம்முடையதாகவும் பாவித்ததே காரணம். எதாவது ஒரு வஸ்துவை என்னுடையதென்றால் உடனே எனக்கு துக்கம் வருவது நிச்சயந்தான். என் சரீரம், என்குழந்தை, என் வீடு என்று சொல்லாதே. சரீரம் உன்னுடையதுமல்ல, என்னுடையதுமல்ல. பிறருக்குஞ் சொந்தமல்ல. ஈசுவராக்ஞையால் அவைகள் வருகின்றன, போகின்றன. நாம் சாக்ஷியேயன்றி வேறல்ல. பந்தமின்மையே யோகங்களுக்கெல்லாம் அஸ்திவாரம். வீடுகளையும் நேர்த்தியான வஸ்திரங்களையும் நல்ல உணவுகளையும் நீக்கி அடவிக்குச் சென்றவன் ஆசையை யொழித்தவனாகான். அவனுடைய சரீரத்தில் அவனுக்கு ஆசையிருக்கலாம். அதைப்போஷிப்பதற்காக அவன் பாடுபடுவான். ஆதலின் பந்த மின்மையென்பது மனதைப் பற்றியேயன்றி சரீரத்தைப்பற்றியல்ல. சிம்மாசனத்தி லுட்கார்ந்திருக்கும் ஓர் மனிதன் பந்தமில்லாமலிருக்கலாம். கிழிந்த துணிகளை உடுத்திக் கொண்டுவரும் மனுஷ்யன் பந்தத்தோடிருக்கலாம். நம்மையும் நாம் செய்யும் சகலகாரியங்களையும் ஈசுவரனுக்கு ஒப்பிப்பது சிலாக்கியம். ஒரு பக்தர் கூறுகிறார்:-"நான் திரவியத்தைத் தேடத்தொடங்கினேன். ஜெகதீசா! நீயே எனக்குத் திரவியமானாய். என்னை உனக்கே அற்பணம் செய்கிறேன். என் ஆசைக்குரிய ஒருவரை தேடச்சென்றேன். நீயே என் ஆசைக்குப் பாத்திரனாக ஏற்பட்டாய். உனக்கே என்னைத் தத்தம் செய்கிறேன். உன்னைத் தவிர எனக்கு வேறெந்தப் பொருளும் வேண்டியதில்லை." இம்மாதிரியே நாம் தினந்தோறும் ஈசுவரனைக் குறித்து ஜபம் செய்ய வேண்டும்.

கர்மயோகத்தை நன்றாக அனுஷ்டித்த ஒருவருண்டு. அவர்தான் கௌதமசாக்கியமுனி என்னும் புத்தர். அவர் "நான் ஈசுவரனைப் பற்றிச் சிந்திக்கவில்லை. ஆத்மாவின் தன்மையைக் குறித்து யோசிக்கவில்லை. 'நன்மையைச் செய்- நல்லவனாயிரு' என்னும் கொள்கையையே நான் அனுசரிக்கிறேன், இக்கொள்கையை 'யனுசரிக்கிறவர்கள் மோக்ஷமடைவார்கள்'' என்று கூறியிருக்கிறார். பணத்திற்காகவும், பிரக்யாதிக்காகவும் வேறு எதற்காகவு மின்றி தங்களைச் சம்பந்தப்படுத்திக்கொள்ளாமல் ஈசுவரார்ப்பணமாகவே சகல கர்மங்களையும் செய்கிற மகானுபாவர்களே கர்மயோகிகள்.

---

## பக்தி.

"மனம்போலிருக்கும் மங்கிலியம்" என்கிறார்கள். இதைச் சற்று ஊகித்துப்பார்ப்போம். ஒருவன்செய்கிற செய்கைகளுக்கெல்லாம் அவனது மனமே காரணமாயிருக்கிறது. ஒருவனை நல்லவன் என்கிறோம். ஏன்? அவன் மனது நல்லது. ஆனதால் அவன் நல்லவன். ஒருவனைக் கெட்டவனென்று சொல்வதேன். அவன் மனம் கெடுதலாயிருப்பதினால். ஒருவன் ஞானவான், ஏனெனின், அவன் மனது ஞானத்தை நாடுகிறது. ஒருவன் புண்ணியவான், அதற்குக் காரணம் அவன் மனம் புண்ணியத்தை நாடுகிறதுதான். ஒருவன் பாபியாவதற்குக் காரணம் அவன் மனம் பாபத்தை நாடுகிறதே. ஆதலின் எல்லாவற்றிற்கும் மனது காரணமாயிருக்கிறது. ஆதலால் எவனுடைய மனம் பகவானிடம் பதிந்திருக்கிறதோ அவனே பாக்கியவான். அவனே பக்தன். அவனுக்கு வேறுவிதமான யோகாப்பியாசங்கள் வேண்டியதில்லை. இதனால் நாமறிவது யாதெனில், பகவானைத் தியானிப்பதால் சகல காரியங்களையும் சாதித்துக்கொள்ளலாமென்பதே.

"மறந்துவிட்டாலும் நெருப்பு சுடுமன்றோ?" இது பொய்யல்லவே. அதுபோல் ஒருமனிதன் தெரிந்தோ, தெரியாமலோ, பிரக்ஞையுடனோ, அல்லது பிரக்ஞையில்லாமலோ, எப்படியாவது சுவாமியின் நாமத்தைச்சொன்னால் அவனுக்கு அந்தப்பலன் கட்டாயமாய்ச் சித்திக்கும். எப்படியெனில், ஒருவன் தானே ஆற்றுக்குப்போய் ஸ்நாநம் செய்தாலும், அல்லது, அவனைப் பலவந்தப்படுத்தி யாராவது குண்டுக்கட்டாய்த் தூக்கி நதியில் கொண்டுபோய்ப் போட்டாலும் அவனுக்கு ஸ்நாந பலன் கிட்டுகிறதன்றோ? (அதாவது அவனுக்கு ஸ்நாநம் செய்கிறதினால் இதர மதஸ்தர்களின் அபிப்பிராயப்படி தேகமாவது சுத்தமாகிறதன்றோ.) அதுபோல்,

பகவானது மகிமையை அறியாதவனாயினும் அவரது நாமத்தைச் சொல்லுகிறவனிடம் அவருக்கு வெகுப்பிரீதி யுண்டாய் விடுகிறது. ஆதலின் அர்த்தம் தெரியாமல் சந்தியாவந்தன முதலிய கர்மங்கள் செய்தாலும் அவைகளின் பலன் கட்டாயமாய்க் கிடைக்கும். எந்த கர்மானுஷ்டானத்தையும் அர்த்தம் தெரியவில்லையேயென்று கைவிடலாகாது.

"நம்பாதவனுக்கு நஷ்டமுண்டாகும்." இவ்விடத்தில் நம்பிக்கையென்பது ஈசுவரனிடத்துள்ள நம்பிக்கையை மட்டுமே குறிக்கிறது. பகவான் காப்பாற்றுவாரென்ற நம்பிக்கையுடனிருந்தால் அவர் நம்மை இரக்ஷிப்பது நிச்சயந்தான். இதற்கோருதாரணம் கொடுக்கிறோம்:— அக்கரையிலுள்ள ஓர் ஆசாரியனுக்கு இக்கரையிலுள்ள ஓர் இடைச்சி தினந்தோறும் பால்கொடுத்து வந்தாள். அப்படியிருக்கையில் ஒருநாள் சற்று நாழிகை கழித்து வந்தாள். அந்த குரு கோபங்கொண்டு "நீ என், இவ்விதம் அடிக்கடி தாமதித்து வருகிறாய்?" என்றார். அதற்கு அவள், "சுவாமீ நான் என்னசெய்வேன். என்வீட்டைவிட்டு விடியற்காலையிற் புறப்பட்டு விடுகிறேன். என்பேரில் குற்றமில்லை. ஆற்றில் படகுக்காரன் நாழிகைகழித்து வருகிறான். அவனைப் படகு விடச்சொன்னால் சற்றுநேரம் பொறு. ஜனங்கள் வரட்டும் என்கிறான். அதனாலே தாமதப்படுகிறது" என்றாள். அதற்கு அவர், அடி பைத்தியக்காரி, எல்லோரும் கடவுளுடைய நாமத்தைச் சொல்லி பிறவிக்கடலை வெகு எளிதாய்த் தாண்டுகிறார்களே; நீ அவருடைய நாமத்தைச் சொல்லி இந்தச்சிறு கால்வாயைத்தாண்ட முடியாதா? வென்றார். அதைச் சூதுவாது தெரியாத அப்பெண்மணி சரியென்று ஒப்புக்கொண்டு போய்விட்டாள். அன்றுமுதல் குறித்த காலப்படி கிரமந் தவறாமல் சாமியாருக்குப் பால்கொடுத்துவந்தாள்! அதன்பிறகு ஒருநாள் அவர் அவளை நோக்கி, " அடி பெண்பாவாய், நீ இப்போது சில நாளாகத் தாமதமின்றி வருகிறையே. எப்படி வருகிறாய். இப்போதுமாத்திரம் படகுக்காரன் சரியாய் வந்துகொண்டிருக்கிறானா" வென்றார். அதற்கு, அவள், "குருமகராஜ், நான் படகில் வருகிறதில்லை. தாங்கள் சொல்லியபடி சுவாமிநாமத்தைச் சொல்லிக் கொண்டு ஆற்றைக் கடந்து வருகிறேன். எனக்குத் தங்களால் படகுசெலவு மீதியாயிற்று" என்றாள். அதைக்கேட்டு அவர் சந்தேகங்கொண்டு 'நல்லது, இப்போது நீ என்னை யழைத்துக்கொண்டு ஆற்றைத் தாண்டிப்போ என்றார். அதற்கு அம்மாது அப்படியே ஆகட்டுமென்று அவரைக் கூட்டிக்கொண்டு ஆற்றண்டை சென்று சுவாமிநாமத்தைச்சொல்லி தண்ணீரின்மேல் தாராளமாய் நடந்து சென்றாள். பகவானது அனுக்கிரகத்தால் அவளது பாதம் ஜலத்திலமிழ்ந்துபோகாமலிருந்தது. அவள் சற்று தூரம் சென்று பின்னால் பார்க்

கையில் குரு தண்ணீர் நிலைகொள்ளாமல் தத்தளிக்கிறதைக்கண்டு 'சுவாமீ! ஏன் தாங்கள் சுவாமி நாமத்தைச் சொல்லிக்கொண்டே இடுப்பு வேஷ்டியை ஒரு கையால் தூக்கிக்கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கு சுவாமி காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையிருந்தால் நீரில் நனைந்துவிடும் என்று வேஷ்டியைத் தூக்குவீர்களா? உங்களுக்கு அவரிடம் நம்பிக்கையில்லைபோலும். அதனாலேதான் நீங்கள் இவ்வாற்றைக் கடக்கமுடியவில்லை' என்றாள். குரு வெட்கித் தலைகுனிந்தார். அதுபோல், ஈசுவரனைத் தியானம் செய்வதால் அவர் காப்பாற்றுவார் என்னும் நம்பிக்கை ஒவ்வொருவருக்கு மிருக்கவேண்டும்.

ஒருநாள் நடுராத்திரியில் ஓர் திருடன் ஒரு அரசனது அரண்மனைக்குட்சென்று பதுங்கியிருக்கையில் அவ்வரசன் தன் மனைவியுடன் மகளின் கல்யாணத்தைப்பற்றிப் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்தான். ராஜா தன் மகளை அவ்வூர் ஆற்றங்கரையில் வசிக்கும் சாதுக்களில் (ரிஷிகளில்) ஒருவருக்கு விவாகம் செய்விப்பதாகக் கூறினான். அதைக்கேட்ட திருடன் ஆநந்தங்கொண்டு "அடே! என்ன அதிர்ஷ்டம் பண்ணினோம். நாளைய தினம் நாம் ராஜகுமாரத்திக்குப் புருஷனாகப்போகிறோம். அதற்குத் தடையில்லை. நாளைய காலமே நாமும் சாதுக்களுக்குரிய உடுப்பைத்தரித்து அவர்களுடன் உட்கார்ந்துகொண்டு கண்ணைமூடித் தவம் செய்வதுபோலிருப்போம். அந்தப்பெண் நமக்கு வாய்க்கட்டும்" என்று தனக்குள்ளாகவே யோசித்து அரண்மனையைவிட்டு அகன்றுபோனான். மறுநாட்காலையில் மன்னனது வேலையாட்கள் ஆற்றங்கரைக்குவந்து அங்கிருக்கும் சாதுக்கள் ஒவ்வொருவரையும் அரசனது மகளை மணம்புரியும்படி வருந்திக்கேட்டும் ஒருவராவது இணங்கவில்லை. கடைசியாக இந்தக் கபட சாதுவிடம் வரவே அவர் அவர்கள் சொன்னவார்த்தையை மறுக்காமல் மவுனமாயிருந்தார்.

"மவுனம் ஸர்வார்த்த ஸாதகம்" என்று அவரிருந்ததை வேலையாட்கள் கண்டு, பேசாதிருத்தலே சம்மதித்ததற்கு அடையாளமெனச் சந்தோஷித்து அரசனிடம் ஓட்டமாய்ப்போய்ச் சங்கதி தெரிவித்தார்கள். உடனே வெகு ஆவலுடன் அரசன் ஆற்றங்கரைக்குவந்து இளைஞராகிய சாதுவைக்கண்டு இன்பங்கொண்டு அவருடைய பாதாரவிந்தத்தில் விழுந்து தன் பெண்ணை மணம்புரியும்படி கேட்டுக்கொண்டான். அப்போது அத்திருடன்பாடுவெகு கொண்டாட்டமாயிருந்தது. ஆனால் ஈசுவரகிருபையால் உடனே அவனுக்கோர் நினைவு உண்டாயிற்று. நாம் சிலநாழிகை சாதுபோல வேஷம் போட்டதற்கே இவ்வூரரசன் நம்முடைய காலில்விழுந்து நம்மைக் கெஞ்சும்படியான பாக்கியத்தைப் பகவான் நமக்குப் பாலித்தாரன்றோ. உண்மையாகவே

சாதுவாகி சர்வேசுவரனைத் தியானித்துக்கொண்டிருந்தால் நம்முடையபாக்கியம் எப்படிப்பட்டதாயிருக்குமோ? இந்திராதி தேவர்களெல்லாம் நம்மை வணங்குவார்களன்றோ? ஆதலால் இப்போது நமக்குக் கிடைக்கக்கூடிய அற்பவின்பத்தை நாம் கவனியாமல் பேரின்பத்தை யடையவேண்டி இந்தக்ஷணமுதல் சகலவிதமான துராசைகளையும், அகங்காரங்களையும் விட்டுவிட்டு உண்மையான சாதுவாக வேண்டுமென்று மனதிலுறுதிகொண்டான். ஆதலின், அவன் அரசன் மகளை மணம்புரியவில்லை. அன்றுமுதல் மகா தபஸ்வியாகி பேரின்பத்தையடைந்தான். இதனால் வெளிவேஷமென்று நினையாமல் ஒவ்வொருவரும் தத்தம் மதத்துக்குரிய சின்னங்களை யணியவேண்டுமென்றேற்படுகிறது.

பக்தர்களில் பலவகையுண்டு. தனத்தை யபேக்ஷிக்கும் வியாபாரிகள் அதை அடையவேண்டி ஈசுவரனைத் தியானிக்கிறார்கள். லாபம் கிடைத்தபிறகு பகவானை நினைக்கிறதில்லை. ஆபத்தையடைந்தவர்கள் அதனின்றும் விடுபடவேண்டிய பகவானை பிரார்த்திக்கிறார்கள். ஆபத்து நீங்கிவிட்டால் சுவாமியை மறந்துவிடுகிறார்கள். நோயாளிகள் நோய் தீரவேண்டி கடவுளைப் பிரார்த்திக்கிறதும் அது தீர்ந்தவுடன் நிரீசுவரவாதம் செய்கிறதும் வழக்கம். இப்படிப்பட்ட பக்தர்களிடமும் பகவானுக்குப் பிரீதிதான். உலகத்திலிருக்கும் பக்தர்களில் பலர் விசேஷமாய் மேற்கூறிய வகுப்பைச் சார்ந்தவர்களே.

ஸ்வயகாரியப்புலிகளாகிய மேற்கூறியவர்களுக்கும் என்றைக்கும், மாறுதபக்தி நிறைந்த பரமயோகிகட்கும் என்னபேதம்? இதைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பகவத்கீதையிற் கூறுகிறார். "திரவிய அபேக்ஷயாலும் ஆபத்தை நிவாரணம் பண்ணும்பொருட்டும் என்னை ஆசிரயிக்கிறவர்கள் எனக்கு பக்தர்கள். உலக முழுவதும் என் ரூபத்தையே காணுகிற பரமயோகி எனக்குப் பக்தனன்று. நானும் அவனும் ஒன்றுதான். அவனே நான். நானே அவன்" என்றார். பகவானை சதா தியானிக்கும் பக்தனே இத்தகைய மகிமையை அடைகிறான்.

ஒரு மண்பாத்திரத்தில் நிறைய ஜலத்தை யூற்றி ஓர் அலமாரியில் வைத்தால் சில நாழிகைக்கெல்லாம் அவ்வளவு ஜலமும் சுண்டிப்போகும். அப்பாத்திரத்தை ஜலத்திற்குள் அமிழ்த்தினால் அது உலர்ந்துபோகாமல் எப்போதும் ஜலம் நிறைந்திருக்கும். அதுபோல் நம்முடைய ஹிருதயத்தில்ஈசுவரனைவைத்துச் சிறிதுநேரம் தியானித்துப் பிறகு வேறுகாரியங்களிற் பிரவேசித்தால் அந்த ஹிருதயம் ஸ்வாமியின் கிருபையின்றி வரண்டு போகிறது. அப்படியின்றி ஹிருதயத்தில் எப்போதும் ஈசுவரனையிருத்தி தியானம்செய்தால் அவர் அங்கே

பரிபூர்ணமாக இருந்து கிருபை செய்வார். இது தான் உண்மையான பக்தர்களின் இலக்ஷணம்.

“ஹோமா” என்று ஓர் வகையான பறவைகளுண்டு. அவைகள் ஆகாசத்தில் நெடுந்தூரம் சென்று விடுவதால் அங்கிருந்து கீழே யிறங்க இஷ்டப்படுகிறதில்லை. ஒரு வேளை அப்பக்ஷிகள் ஆகாசத்திலேயே முட்டையிட்டாலும் அம்முட்டைகளைப்பற்றி கவனிக்கிறது மில்லை. அம்முட்டைகள் பூமியின் சக்தியால் கீழே விழுந்துகொண்டிருக்கையில் ஆகாசத்திலேயே உஷ்ணமான காற்றடித்து உடைந்து குஞ்சுகள் வெளிப்படுகின்றன. இவைகளும் நிலத்தில் விழுகிறோமென்றுணர்ந்து ஆகாசத்திலேயே பறந்து நெடுந்தூரம் சென்று தங்கள் தாய்ப்பக்ஷிகளிருக்குமிடத்தை அடைந்து விடுகின்றன. அதுபோல் சுகதேவர், நாரதர், சங்கராசாரியர் முதலிய மகான்களெல்லாம் இளம் பிராயத்திலேயே பிரம்ம ஞானத்தைப் படைந்து முக்தர்களானார்கள்.

சில குளங்களில் வருவாய்களுண்டு. அவைகளின் முகத்துவாரம் புலியின் வாயைப் போலிருக்கும். ஸாமான்ய ஜனங்கள் புலியே இந்த ஜலத்தை வாயால் கொட்டுகிறதென்று நினைப்பார்கள். புத்திசாலிகள் வருவாய்களிலிருந்து ஜலம் வருகிறதென்றறிவார்கள். அதுபோல் சகல தர்மங்களும், வேதாந்த உபதேசங்களும் குருமுகமாய் வருகிறதென்று ஸாமான்யர்கள் நினைக்கிறார்கள். விவேகிகள் அவைகளெல்லாம் ஸாக்ஷாத் பகவானிடமிருந்தே வருகிறதாய் அறிந்துகொள்ளுகின்றனர்.

## விவேகாநந்தசுவாமிகள் சிகாகோவில் செய்த முதற்பிரஸங்கம்.

சிகாகோ என்பது அமெரிக்காவிலுள்ள ஓர் பெரிய பட்டணம். இதில் சில வருஷங்களுக்கு முன் உலகிலுள்ள சகல மதஸ்தர்களும் ஒன்று சேர்ந்து ஓர் பெரிய சபைகூடி அதில் தத்தம் மதத்தின் கொள்கைகளைப்பற்றிப் பிரஸ்தாபித்தனர். அக்காலத்தில் நமது ஹிந்து மதத்தின் கொள்கைகளை எல்லோருக்கும் எளிதில் அறிவிக்கவேண்டி விவேகாநந்தசுவாமிகள் என்னும் மகான் அங்கேசென்றிருந்தனர். அவர்கள் அந்தமகாசபையில் முதல் முதலாகச்செய்த உபன்யாஸத்தை அடியில் வரைந்திருக்கிறோம்.

“அமெரிக்காவிலுள்ள என் ஸகோதரிகளே! ஸகோதரர்களே! நீங்களெல்லோரும் எங்களைப் பரிவுடன் ஏற்று உபசரித்ததற்காக உங்களைப் பிரதிவந்தனம் செய்யுமாறு நான் எழுந்திருக்குங்கால் என்

மனதிலுண்டான மட்டற்ற மகிழ்ச்சியை யார்தான் அளவிட்டு முடியும்? இவ்வுலகத்திலுள்ள பரிசுத்தவான்களாகிய மகரிஷிகளுக்குப் பிரதிநிதியாக என்னைப் பாவித்துக்கொண்டு உங்களுக்கு வந்தனம் செய்கிறேன். சகல மதங்கட்கும் தாய்மதம் எதுவோ அதன் பிரதிநிதியாகவிருந்து உங்களை வந்திக்கின்றேன். பலவிதமான வகுப்பினரும், பற்பல மதஸ்தருமான கோடானுகோடி இந்து மகா ஜனங்களின் பிரதிநிதியாகவிருந்து உங்களுக்கு வணக்கம் செய்கின்றேன்.

வெகு தூரதேசத்திலிருந்து வந்திருக்கும் இங்குள்ள கனவான்களிற் சிலர், ஸர்வஸமய ஸமரஸமான பிரசங்கங்களைச் செய்வார்களென்றும், அவர்களுக்குப் புறமத தூஷணைசெய்யும் துர்வழக்கமும், இதர மதஸ்தர்களை இம்சிக்கும் துர்ச்செய்கையுமில்லை யென்றும் கூறிய இவ்விடத்திய பிரஸங்கிகளுக்கு என் மனப்பூர்வமான வந்தனத்தை ஸமர்ப்பிக்கிறேன். சகல மதஸ்தர்களையும் ஆதரித்து, எல்லோருக்கும் ஞானத்தையூட்டக்கூடிய தாய்மதத்தைச் சேர்ந்தவனென்னும் கர்வம் எனக்கு உண்டு. நாங்கள் எல்லா மதங்களையும் உண்மையென்று ஒப்புக்கொள்ளுகிறோம். எங்களுடைய மதக்கிரந்தங்கள் எழுதப்பட்டுள்ள உன்னதமான ஸம்ஸ்கிருத பாஷையில் 'விலக்கு' என்னும் பதமே கிடையாது. உலகத்தில் பற்பல தேசங்களிலிருந்தும் துரத்தப்பட்டு ஓடிவந்த நானாவித மதஸ்தர்களை ஸம்ரக்ஷித்துப் பலவிதமான தேசத்தார்களை உபசரித்து ஆதரித்துவரும் இந்துக்களில் நானொருவன் என்பதை நினைக்கநினைக்க என் மனம் பூரிக்கிறது. உரோமர்களால் கோவில் இடிபட்டு தேசப்பிரஷ்டர்களான இஸ்ரேல்களை ஏற்றுக்கொண்டு ஆதரித்தோம். இன்னும் அன்னிய மதஸ்தர்கள் செய்யும் உபத்திரவத்தைப் பொறுக்கமுடியாமல் சுதேசங்களைவிட்டு ஓடிவந்து இந்தியாவில் குடிபுகுந்த கணக்கில்லாத புறமதஸ்தர்களைக் கைகொடுத்துக் காப்பாற்றினோம். இதைப்பற்றிய ஓர் ஸ்லோகம் என்னுடைய குழந்தைப்பருவமுதல் என் மனதைவிட்டு அகலாமலிருக்கிறது. அந்த ஸ்லோகத்தை இந்தியாவில் பிரதிதினமும் இலக்ஷம் ஜனங்கள் சொல்லிவருகிறார்கள். அதாவது, "பற்பல இடங்களில் தோன்றிய அநேக ஆறுகள், முடிவில் ஸமுத்திரத்தில் விழுந்து ஒன்றாவதுபோல், ஜெகதீசா! இந்த உலகத்தில் மனம்போன போக்குப்படி ஒவ்வொருமதத்தை (அது நேரானதோ-நேரில்லாததோ) அநுசரிக்கும் பக்தர்கள் கடைசியில் உன் பாதாரவிந்தத்தையே யடைகிறார்கள்" என்பதே.

பகவத்கீதையிற் சொல்லியிருப்பதற்கு வேறுசாக்ஷி வேண்டியதில்லை. தற்காலம் இங்கு கூடியிருக்கும் மகாஸபையே போதுமானது, "எவன் எம்மார்க்கி எந்த வழியை அனுசரித்து என்னை

அடையவிரும்புகிறானோ அவனுக்கு அம்மாதிரி அவ்வழியாகவே எதிர்சென்று நான் அவனை அடைகிறேன்" என்று, ஸ்ரீகிருஷ்ணபக வான் கூறியிருக்கிறார். உள்மதச்சண்டை, முரட்டுபக்தி, மதவெறி யாகிய இவைகள் வெகு நாளாக இந்தப்பூமியில் வாழ்ந்துவருகின் றன. இவைகள் எத்தனையோ தேசங்களை யழித்து ஜனங்களை யொ ழித்து நாகரீகத்தை அதஞ்செய்து நற்குணத்தை வதம்செய்து விப ரீதங்களை யுண்டாக்கிவிட்டன. இந்த மதவெறி யென்பது இல்லா திருந்தால் மனுஷ்யர்கள் மகத்தான நன்மைகளை அடைந்திருப் பார்கள். இப்போது இந்த மதவெறிக்கு மரணகாலம் கிட்டியது. இன்று காலமே இச்சபை கூடுவதற்காக அடித்த மணியே மதவெறி மாண்டுபோனதற்கான அறிகுறி. ஒரே இடத்திற்குப்போகும் சகோ தரர்களாகிய பலமதஸ்தர்கள் இனி கத்தியினாலும் இறகினாலும் ஒரு வர் தொண்டையை ஒருவர் முறித்து நெஞ்சைப் பிளந்து மாண்டு போகாமல் பரஸ்பர அன்புடன் வாழ்ந்து வருவார்களென்று நம்புகி றேன்."

# THE LOKOPAKARI PATRIKA.

## லோகோபகாரிப் பத்திரிகை.

இதென்ன விளம்பரம்? லோகோபகாரி யென்னும் தமிழ்ப் பத்திரிகையைப்பற்றியதோ? இதைக் கவனமாய்ப் படித்திருக்கிறோம். இந்த பத்திரிகை பிரதி வெள்ளிக்கிழமையும் பிரசுரமாகிறது. இதன் வருஷ சந்தா மூன்றே ரூபாய்தான். இத்தொகையை முன்பணமாகச் செலுத்தினாலன்றி பத்திரிகை கிடைக்காது. இதன் சந்தாதார்கட்கு ஞானத்திரட்டு, ஞானதரிசனி, தத்துவதரிசனி, நீதிமாலினி ஆகிய புஸ்தகங்களில் ஏதேனும் ஒன்றை இதன் மானேஜர் இனாமாக அனுப்புகிறார். அப்புத்தகத்தில் மூன்று ரூபாய் செலுத்தியதற்கு ரசீது வைக்கப்பட்டிருக்கிறது. அந்த இரசீதில் பணம் பெற்றுக்கொண்ட நாள் முதல் 12 மாதங்கள் முடிய லோகோபகாரிப் பத்திரிகையைத் தவறாது அனுப்பி வருவதாய் உறுதிமொழி கூறியிருப்பதால் அதையே உறுதிமொழிச்சீட்டாக வைத்துக்கொள்ளலாம். மற்றப் பத்திரிகைகளைவிட இது சிறந்தது. ஏன்? இப்பத்திரிகையில் ஸகல ஸமாசாரங்களும் அடங்கியிருக்கின்றன. தெளிவான தமிழ் நடையில் எழுதப்படும் ஒவ்வொரு விஷயமும் படிக்கப்படிக்க இன்பந் தரும்படி அத்தனை அர்த்த புஷ்டியுள்ளதா யிருக்கும். அவசியமான தெய்வ பக்தி, நீதிமார்க்கம், ஆத்மஞானம் முதலிய ஸத்விஷயங்கள் இப்பத்திரிகையின் முதற் பக்கத்தில் எழுதப்படுகின்றன. இந்த விஷயத்தில் இது ஒப்புயர் வற்றது. இதற்கு ஸமமான பத்திரிகை வேறொன்றில்லை. வைதிக நெறியைப் போதித்து சிறுவர்களையும் சிறுமிகளையும் நல்வழியில் நடத்துவதற்கு இந்த லோகோபகாரி ஓர் பெரிய ஆசாரியனைப் போல் விளங்குகிறது. ஆகவே, இந்த அருமையான தமிழ்ப்பத்திரிகையை வாங்கி யாதரியாதோர் ஸ்வபாஷையிலும், ஸ்வமதத்திலும், ஸ்வதேசத்திலும் அபிமான முடையோர் என்று நாம் சொல்லவே மாட்டோம். எமது வார்த்தையில் ஸந்தேக முண்டானால் ஏதாவது ஒரு வெள்ளிக்கிழமை வெளியாகும் லோகோபகாரிப் பத்திரிகையைப் படித்துப்பாருங்கள். அப்போது உங்களுக்கு உண்மை புலப்படும்.

அன்பர்களே! தயைசெய்து இந்த விளம்பரங்களைத் தாங்கள் ஆதரவோடு முற்றிலும் படித்துப் பிறகு தங்களிலாகாவிலுள்ள விவேகிகளாகிய உத்தியோகஸ்தர், மிராசுதார், வர்த்தகர் முதலிய கனவான்களெல்லோருக்கும் சேர்ப்பிக்கும்படி வேண்டுகிறோம். தாங்கள் இப்பத்திரிகைக்குச் சந்தாதார்களைச் சேர்த்து உபகரிப்பதானது எங்களுடைய நன்றியறிவை விர்த்திசெய்து பொது நன்மைக்குரிய இக்காரியத்தில் அதிகமான ஊக்கத்தோடு உழைக்கும்படி செய்யும். பத்திரிகையின் விருத்தியை நாடி இவ்விளம்பரங்களைப் பல கனவான்களிடமும் சேர்ப்பிக்கும் நண்பர்கட்கு எம்மாலியன்ற உதவியைச் செய்ய சித்தமாயிருக்கிறோம். லோகோபகாரிப் பத்திரிகாசிரியரால் வெளியிடப்பட்ட புஸ்தகங்களில் எதையடைய விரும்பினாலும் அவர்கட்கு (இப்பத்திரிகைக்கு சந்தாசேர்க்கும் உத்தமர்கட்கு) இனாமாய் அனுப்புவோம். ஈசுவரன் எல்லோருக்கும் மங்களத்தைச் செய்யட்டும்.

வி. நடராஜ ஐயர்,

மானேஜர், லோகோபகாரி ஆபீஸ், மதராஸ்.

# இதை நீங்களும் படித்து உங்கள் நண்பர்கட்கும் காட்டுங்கள்.

கனம்பொருந்திய ஐயா,

"முனைபுகுசேவகன் முனிந்தார்ப்பதுபோற் கசடறக்கற்ற கல்வியாற்றலால் தன்னைப்புகழத் தகுமெனச்சாற்றினர்" என்றபடி, எங்களால் வெளியாகும் "லோகோபகாரிப்" பத்திரிகையின் மேன்மையைப்பற்றி நாங்களே சொல்வதைத் தற்புகழ்ச்சி என்று நினைக்காமலும் அதனால் விபரீத அபிப்பிராயம் கொள்ளாமலும் இருக்கக்கோருகிறோம். தற்காலம் வழங்கும் தமிழ்ப் பத்திரிகைகளெல்லாவற்றிலும் லோகோபகாரியே சிறந்ததென்பதைத் தக்க நியாயங்களால் நிரூபிக்கிறோம்.

1. "லோகோபகாரி" யின் முதற்பக்கத்தில் எப்போதும் ஈசுவரபக்தியைப்பற்றிய விஷயங்களெழுதப்படுகின்றன; அதன்பின் பழமொழிகளை உபயோகித்து அவைகட்கிணங்க நற்சமாசாரங்களும், ஸாரமான கதைகளும் வரையப்படுகின்றன.

2. "லோகோபகாரிப்" பத்திரிகை அதன் பெயருக்கேற்றபடி உலகத்திலுள்ள ஸர்வஜனங்களுக்கும் பொதுவாய், ஸகலமதஸ்தர்களுக்கும் இன்பமாய், எல்லா ஜாதியர்களுக்கும் ஏற்றதாய், எல்லாவர்த்தமானங்களும் இருக்கப்பெற்றதாய், புறமத தூஷணையின்றி சொல்நயம் பொருள்நயம் தோன்ற எழுதப்படுகிறது.

3. "லோகோபகாரி" யின் சொந்தக்காரராகிய அடியிற் கையொப்பமிட்டிருக்கிறவரே அதன் ஆசிரியராகவிருக்கிறார். இதனாலேதான் அப்பத்திரிகை யாதொரு இடையூறுமின்றி நடந்துவருகின்றது.

4. "லோகோபகாரிப்" பத்திரிகை திவ்யமான கிளேஸ்காகிதத்தில் தெளிவான அக்ஷரத்தில் பிழையின்றி அச்சிடப்படுகிறது. ஆனால் இது ஒன்றுமட்டும் இருந்தால் என்ன உபயோகம்? உருவத்துக்கேற்ற அறிவு வேண்டாமா? காகிதமும் அச்சும் நன்றாயிருந்தால்மட்டும் போதாது. உள்ளேயிருக்கும் விஷயங்களன்றோ உவப்பாயிருக்கவேண்டும். அப்படி லோகோபகாரியில் உவப்பான விஷயங்களிருக்கின்றன வென்பதை புத்திமான்கள் தாங்களே படித்து உணரலாம்.

5. "லோகோபகாரிப்" பத்திரிகைக்கு ஏற்பட்ட வருஷ சந்தா மூன்றே ரூபாய். இப்படி ஏன் மிகவும் சொற்பமான தொகையை ஏற்படுத்தவேண்டுமென்றால் இதை எல்லோரும் எளிதில் வாங்கி படித்தறியட்டும் என்னும் ஆவலே அதற்குக் காரணமென்னலாம். காகிதக்கூலி, அச்சுக்கூலி, தபாற்கூலி ஆகிய இவைகளை அறிவாளிகள் கணக்கிட்டுப்பார்த்தால் மூன்று ரூபாய் ஏற்படுத்தியது சொற்பமென்றும், பத்திராதிபருக்கு அதனால் லாபமும் நஷ்டமுமின்றி அவருடைய உழைப்புக்கு ஓர்வித கூலியாகிறதென்றும் அறிவர். இவ்வளவு இலகுவான கிரயத்தில் இத்தனை பக்கங்கள் கொண்ட சிறந்தபத்திரிகை எதுவுமில்லை.

6. "லோகோபகாரிப்" பத்திரிகை 1895-ம் வருஷத்தி லேற்பட்டு இதுவரை யாதொரு விக்கினமுமின்றி நடைபெற்று வருவது ஈசுவர கிருபையாலென்பதை அடியிற்கண்டபடி நிரூபிக்கலாம். இப்பத்திரிகைக்கு மகான்களாகிய ஸ்ரீங்கேரிமடம் ஸதாநந்த ஸரஸ்வதிஸ்வாமிகளின் ஆசிர்வாதமும், ஸ்வாமி விவேகாநந்தர், சிவநாராயணஸ்வாமிகள் முதலிய பெரியோரின் கடாக்ஷமும் ஏற்பட்டிருக்கின்றன. அநேக புதிய பத்திரிகைகள் தோன்றி மறைந்து போவது போலின்றி இது வருஷந்தோறும் அதிகமான சந்தாநேயர்களால் ஆதரிக்கப்படுவதும் ஈசுவரகிருபையை நன்றாய் விளக்கும்.

# "லோகோபகாரிப்" பத்திரிகை.

இத்தலைப்பெயர் பூண்ட ஓர் தமிழ்ப் பத்திரிகை இச்சென்னையினின்றும், வாரமொருமுறை பிரசுரிக்கப்படுகிறது. இதன் வருஷ சந்தா மூன்றே ரூபாய். ஒரு வருஷ சந்தாவாகிய மூன்று ரூபாயையும் முன்பணமாகச் செலுத்துவோர்களுக்கு மட்டுமே பத்திரிகையும், இனுமாய்க் கொடுக்கப்படும் "நீதிமாலினி" என்னும் அருமையான புத்தகமும் அனுப்பப்படும். முன்பணம் செலுத்தாதவர்களுக்குப் பத்திரிகை கிடைக்காது. பத்திரிகை வேண்டியவர்கள் தங்கள் பெயர் விலாசங்களை ஓர் கார்டில் தெளிவாயெழுதியனுப்பினால் அவர்களுக்கு ஒரு வருஷம் முடிய "லோகோபகாரி"யை அனுப்புவதாய் உறுதிமொழிச் சீட்டெழுதி அதில் மானேஜர் கையெழுத்தும் ஆபீஸ் முத்திரையும் போட்டு "நீதிமாலினி" என்னும் புத்தகத்தில் அடக்கம்செய்து வி. பி. மூலமாக அனுப்பி சந்தாத்தொகையாகிய 3-ரூபாய், மணியார்டர் கம்மிஷன் 2-அணா, புத்தகம் வகைரா போஸ்டேஜ் பாக்கிங் சார்ஜ் 2-அணா, ஆகமொத்தம் மூன்று ரூபாய் நாலணாவும் வசூல் செய்யப்படும்.

இந்த "லோகோபகாரி" என்னும் பத்திரிகை யாதொரு இலக்கணப் பிழையுமின்றி, நல்ல தெளிவான செந்தமிழ்நடையில் ஒரு அக்ஷரமேனும் பயனற்றதாயிராமல், அர்த்த புஷ்டியும், ஜனங்களுக்கு அவசியமான விஷயங்களும், இராஜாங்க சமாசாரங்களே முக்கியமா யிருக்கப் பெற்றதாயும், படிப்பவர்களுக்கு நன்னடக்கையும், லௌகிக யுக்தியும், பாஷாஞானமும், சர்க்கார் விஷயங்களும், சிவில், கிரிமினல் வியவகார ஞானமும், ஈசுவர பக்தியும், ஆழ்ந்த யோசனையும் உண்டாகக் கூடியதாய் இங்கிலீஷும் தமிழும் நன்குயக்கற்ற பண்டிதர்களால் நடத்தப்பட்டு, தமிழ் ஜில்லாக்கள் முழுவதிலும் ஜ்வலிக்கும்படியாயிருக்கும். இங்கிலீஷ்ப் பாஷையிலுள்ள 'மதராஸ் மெயில்' (*Madras Mail*), 'டைம்ஸ்' (*Times*), 'ஹிந்து' (*The Hindu*), கல்கத்தாவில் வெளியாகும் 'வங்காளி' (*Bengalee*), 'அமிர்த பஜார் பத்திரிகா' (*Amrita Bazaar Patrika*), 'ஸ்டேட்ஸ்மன்' (*Statesman*), இன்னும் சீமை, பம்பாய், பூனா, அலகபாத் இவ்விடங்களில் ஆங்கிலேய பாஷையில் தேர்ந்த மேதாவிகளால் பிரசுரிக்கப்படும் பத்திரிகைகள் எல்லாவற்றையும் ஒருவர் வாசித்தால் எவ்வளவு சமாசாரம் அறிவாரோ அவ்வளவுக்கு அதிகமான சங்கதிகளை இந்த "லோகோபகாரியைப்" படிப்பதால் தெரிந்துகொள்ளலாம்.

## இப்பத்திரிகையிலடங்கும் விஷயங்களாவன.

1. பார்லிமெண்டு, கவர்னர்ஜெனரல், கவர்னர் இவர்களால் அப்போதைக்கப்போது ஏற்படுத்தப்படும் சட்டதிட்டங்கள் நியாயமானவையா, அவைகள் ஜனங்களுக்கு உபயோகமா, அல்லது கெடுதலா என்பதைப்பற்றி ஜனங்களுடைய அபிப்பிராயத்தைப் பத்திரிகை மூலமாய்க் கவர்ன்மெண்டாருக்குத் தெரிவிப்பது.

2. சர்க்கார் விஷயங்கள், இராஜாங்க சமாசாரங்கள்.

3. சீமையில் இந்தியாவைப்பற்றி அடிக்கடி பார்லிமெண்டு மெம்பர்கள் செய்கிற ஏற்பாடுகள்.

4. மதராஸ், கல்கத்தா இவைகளில் கௌன்ஸிலர்கள் பலவிஷயங்களையும் ஜனங்களுடைய அனுகூலத்துக்காக எடுத்து வாதிப்பதை அப்படியே தமிழில் வெகு தெளிவாய் மொழிபெயர்த் தெழுதுவது.

5. அக்கிரமமான வரிகள் போடக்கூடாதென்று அடிக்கடி கவர்ன்மெண்டாரை மன்றாடிக் கேட்பது.

6. காங்கிரஸ் விஷயமும், காங்கிரஸ் மெம்பர்கள் செய்கிற ஏற்பாடுகளும்.

7. பற்பல இடங்களிலும் சர்க்கார் உத்யோகஸ்தர்கள் அக்கிரமம் செய்தால் அதைப் பத்திரிகையில் பகிரங்கமாய் எடுத்துரைப்பது.

8. ஐரோப்பா, ஆசியா, ஆபிரிக்கா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா இக் கண்டங்களிலுள்ள தேச வர்த்தமானங்கள்.

9. இந்தியாவில் முக்கியமாய்ச் சென்னை ராஜதானியில் பிரதிதினமும் நடக்கும் விசேஷ வர்த்தமானங்கள்.

10. போர்ட்ஸெண்டு ஜார்ஜூ கெஜட்டின் சுருக்கம்.

11. நல்ல விவேகமுண்டாகும்படியான நீதியைப் போதிக்கக்கூடிய கதைகளை எழுதுவது.

12. சென்னை ஹைகோர்ட்டு, பிரவிடென்ஸி மாஜிஸ்திரேட் கோர்ட்டு இன்னும் இதர ஜில்லாக்களிலுள்ள கோர்ட்டுகளில் நடக்கும் சிவில் கிரிமினல் வியவகாரங்களில் முக்கியமாயும் ஆச்சரியமாயும் இருக்கப்பட்ட கேஸூகளின் ஸங்கிரகமும் அவைகளின்மேல் செய்யும் ஜட்ஜிகளின் தீர்மானங்களும்.

13. சில்லரை விஷயங்கள்.

குறிப்பு :—முதற்பக்கத்தில் இகபரஸாதகமான நீதிமார்க்கங்களும் வேதாந்த விஷயங்களும தடவைதோறும் எழுதப்படுகின்றன.

இந்த "லோகோபகாரி"யின் வருஷ சந்தா சொற்பமாயும், இப்பத்திரிகை இங்கிலீஷ்ப் பத்திரிகைகள் எல்லாவற்றிலுமுள்ள சமாசாரங்களையும் தன்னிடத்தி லிருக்கப்பெற்றதாயும், எல்லோரும் வாங்கித் தாங்களே படித்து ஆனந்தப்படும்படியாகவு மிருப்பதால் இப்பத்திரிகையை ஒவ்வொருவரும் வாங்கவேண்டிய தவசியமே. மேலும் நமது அன்பிற்கினிய நம் நாட்டுச்சிறுவர்களும், சிறுமிகளும் தமிழ்ப்பாஷையில் தேர்ந்து நன்னடக்கை வாய்ந்து, சொல் நயம், பொருள் நயம் தோன்ற இனிய மொழிகளில் வசனிப்பது எவ்வளவு பெருமையாயிருக்கும்! ஆதலின், இப்பெருமையை யடைவதற்கு இப்பத்திரிகை அதியவசியமானது. இதன்றி எந்த பாஷையால் நமது ஆழ்வாராதிகளும், நாயன்மார்களும் கடவுளை ஸ்தோத்திரஞ் செய்து ஸாயுச்சியத்தை யடைந்தனரோ, எந்த பாஷையை நமது முன்னோர்கள் நமக்கு ஓர் மூலதனமாக வைத்திருக்கிறார்களோ, எந்த பாஷையானது ஸாக்ஷாத் அகஸ்திய மகரிஷியால் ஸம்ஸ்கிருதத்துக்குச் சமானமாக வெளியாக்கப்பட்டதோ, எந்த பாஷையை நமது தாய்மார்கள் தங்கள் முலைப் பாலுடன் சேர்த்து நமக்கு ஊட்டினார்களோ அப்படிப்பட்ட அருமையான

நமது தமிழ்ப்பாஷையை விர்த்திசெய்யத்தக்க வழியாகிய தமிழ்ப்பத்திரிகையை நமது நாட்டுவாசிகளாகிய பிரபுக்கள் அபிமானிக்க வேண்டாமா? ஆதலின், எவ்விதத்திலும் உபயோகமுள்ள இந்த "லோகோபகாரி" யென்னுந் தமிழ்ப் பத்திரிகையைக் கனவான்களெல்லோரும் ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

நம்மவர்களுக்குத் தமிழ்ப்பாஷாபிமானம் வரவர விருத்தியாகும்படிக்கு அவசியமான விஷயங்கள் நிறைந்ததாய் இலக்கணப்பிழை அச்சுப்பிழைகளின்றி நல்ல கடிதத்தில் 8 பக்கங்களும் முக்கியமான சங்கதிகளே யிருக்கப்பெற்றதாய் வேண்டிய அளவு பிரயாசையுடனும் விடாமுயற்சியுடனும் இப்பத்திரிகையை நடத்திவருவது கேவலம் லோகோபகாரத்தின் பொருட்டேயல்லாமல் வேறுவிதமான லாபத்தை யுத்தேசித்தல்ல.

இச்சென்னையில் எங்களால் வெளியாகும் "லோகோபகாரி" என்னும் இப்பத்திரிகை 96-ம் வருஷத்தில் மாதம் மூன்றுமுறையாகவும், 97-ம் வருஷம் முதல் மாதம் நான்குமுறை அதாவது வாரமொரு முறையாகவும் பிரசுரிக்கப்படுகிறது. தற்காலம் இப்பத்திரிகையை ஆதரிக்கும் கனவான்கள் 2,000 பேர்களுக் கதிகமாயிருக்கின்றனர். இதனாலேயே இப்பத்திரிகையின் சந்தாதாரர்களுக்கு இதிலுள்ள அபிமானமும், சந்துஷ்டியும், இதன் அதிதீவிர விருத்தியும் தெளிவாய் விளங்கும். இதன்றி, எவ்விஷயத்திலும் இந்த "லோகோபகாரி" யென்னும் பத்திரிகையே வெகு சிறந்த தென்பது பிறருடைய சிபார்சின்றி ஒவ்வொருவரும் தங்களுடைய அனுபோகத்தில் தாங்களே அறிந்துகொள்ளலாம். ஆதலின் இதை ஒவ்வொருவரும் முற்றிலும் படித்து உடனே இதற்குக் கையொப்பம் செய்யக் கோருகிறோம்.

இப்பத்திரிகையைப்பெற இஷ்டமுள்ளவர்கள் தங்கள் பெயர், ஊர், போஸ்டாபீஸ் இவைகளை எங்கள் ரிஜிஸ்தரில் தாக்கல் செய்யும்படியாகக் கார்டு மூலமாய்த் தெரிவித்தால் நாங்கள் உடனே அவர்களுக்கு ஒருவருஷம் முடிய லோகோபகாரியை அனுப்புவதாய் உறுதிமொழிச்சீட்டெழுதி அதில் கையெழுத்தும் ஆபீஸ் முத்திரையும் போட்டு இனுமாயனுப்பும் புத்தகத்திலடக்கம்செய்து, வி. பி. மூலமாக அனுப்பி இப்பத்திரிகையின் சந்தாவை வசூல் செய்வோம்.

வி. நடராஜ ஐயர்,
மானேஜர், லோகோபகாரி ஆபீஸ், மதராஸ்.

☞ <u>நீதிமாலினி</u> :—இந்தப் புத்தகத்தில் நமது ஆரியர்கட்கு அவசியமான நீதிவிஷயங்களும், ஆத்மார்த்தமான ஸத்விஷயங்களும் நிரம்பிப் படிப்பவரின் மனதுக்கு ஸந்துஷ்டியையும் சாந்தியையும் கொடுக்கக்கூடிய பல சங்கதிகளிருக்கின்றன. இதன் விலை 12-அணா.

# ஞானத்திரட்டு.

இத்தலைப்பெயர்பூண்ட ஓர் தமிழ்ப்புத்தகம் இவ்வருஷம் ஜனவரிமா தத்தில் 100-பக்கங்களுள்ளதாய் அழகான பயிண்டுடன் வெளியானது. அச்சிட்டு வெளியாகியிருக்கிறது. இது உயர்ந்த 16-பவுன் கிரௌன் காகி இதன்விலை படம், தபாற்கூலி, வி. பி. சார்ஜு உள்பட 12-அணா. இதில் ஸகல கண்டங்களிலும் நமது ஆரியமதத்தின் பெருமையை நிலைநாட்டி, உலகமெங்கும் கீர்த்திபெற்று, ஓர் அவதாரபுருஷன்போல் விளங்கிவரும், ஸ்ரீமாந் விவேகாநந்த ஸ்வாமிகள் யோகம், ஞானம், பக்தி, கர்மம் ஆகிய வேதாந்த விஷயங்களைப்பற்றி இங்கிலீஷில் ஆங்காங்கே பிரஸங்கித்திருக் கிற உபன்யாசங்களையெல்லாம் உருட்டித் திரட்டி வெகு தெளிவான இனிய செந்தமிழ்நடையில் எல்லோருக்கும் பொருள் விளங்குமாறு மொழி பெயர்த்திருக்கிறோம். சரீரத்துக்கு ஆரோக்கியமான மருந்தைத் தேனி லும், நெய்யிலும், பாலிலும், சர்க்கரையிலும் சேர்த்துப் பெற்றோர்கள் குழந்தைகளுக்குக் கொடுப்பதுபோல், வேதாந்தமாகிய அரியமருந்தை ஸம யோசிதமான நற்கதைகளுடனும், அற்புதமான சரித்திரங்களுடனும், திவ் வியமான உதாரணங்களுடனும், விவேகாநந்தர் நமக்கு அளித்திருக்கிறார். ஆதலின் இப்புத்தகத்தைப் படித்தறிவது சற்று கஷ்டமாயிருக்குமென்று கொஞ்சமேனும் நினைக்கவேண்டாம். கீதா சாஸ்திரத்தையும் உபநிஷத் துக்களையும் கற்கண்டைப்போல் திரட்டி ரஸமான பல உதாரணங்களுடன் சிறுவர்கள்கூட வெகு எளிதில் அறிந்து ஆநந்தம் கொள்ளுமாறு ஸ்வாமி கள் பிரசங்கித்திருக்கிறார். ஆதலின், அவரது உபன்யாசங்களின் மொழி பெயர்ப்பாகிய இந்த ஞானத்திரட்டை ஒவ்வொருவரும் வாங்கிப்படிப்பது அவசியமாகும். சுலபமாயுமிருக்கும்.

(குறிப்பு) சர்க்கரை தித்திக்கும் என்று நாம் சொல்ல வேண்டியதில்லை. அதுபோல் விவேகாநந்தஸ்வாமிகளின் உபன்யாசங்கள் படிக்கப்படிக்க வெகு இன்பமாயிருக்கு மென்பதை ஒவ்வொருவரும் தாமே அறிந்துகொள் வார்கள். இது கேவலம் உபயோகமற்ற வீண்கதைகளடங்கிய புஸ்தக மன்று. வேதாந்தஸாரங்களடங்கிய கிரந்தம். அதிலும் எம்போலிய ஸாமான்யர்களால் எழுதப்பட்டதல்ல. மகா சமர்த்தராகிய ஸ்வாமி விவே காநந்தரால் செய்யப்பட்ட உபன்யாஸங்களின் மொழிபெயர்ப்பு.

இப்புத்தகத்தை வாங்க இஷ்டமுள்ளவர்கள் தங்கள் பெயர், ஊர், போஸ்டாபீஸ், ஜில்லா இவைகளைத் தெளிவாய் ஒரு போஸ்ட்கார்டில் எழுதியனுப்பினால் உடனே அவர்களுக்கு வி. பி. மூலமாகப் புத்தகம் அனுப்பப்படும்.

☞ இப்புத்தகத்திற்குள் வைத்து அனுப்பப்படும் விவேகாநந்த சுவா மிகளின் படம், பார்ப்பதற்கு வெகு அழகாயும் மனோக்ஞமாயுமிருக்கும். அவர்களுடைய முகத்தில் ஜ்வலிக்கும் தேஜஸ்ஸை அப்படத்தில் வியக்த மாய்க் காணலாம்.

இப்புத்தகம் வாங்குகிறவர்களுக்கு மிகுந்த லாபமுண்டு. படத்தை மட்டும் தனியாகப் பெறுவதானால் 8-அணாவுக்கு ஒரு நாளும் குறையாது. 8-அணா விலையுள்ள சுவாமிகளின் படத்தை அவர்கள் புஸ்தகத்துடன் பெறுவதால் தபாற்கூலி லாபத்துடன் இரண்டணாவுக்கு அடைகிறார்கள்.

வி. நடராஜ ஐயர்,
மானேஜர், லோகோபகாரி ஆபீஸ், மதராஸ்.

## ஞான தரிசனி.

இப்புத்தகம் பார்க்க அழகாயும், படிக்க இனிமையாயும், நினைக்க மனோகரமாயும் இருக்கிறது. இதில் வேதாந்த விஷயங்களும் நீதியைப் போதிக்கும் நற்கதைகளும் நிரம்பி படிப்பவர் மனதைக்கவரத்தக்க பலயுக்தி வார்த்தைகள் பழமொழிகள் அவற்றை விளக்கத்தக்க சிறு கதைகள் முதலியன செறிந்து ஸ்ரீமான் விவேகாநந்த ஸ்வாமிகள் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஆகிய மகான்களின் நன்மொழிகளும் இகபரஸாதகமான லௌகிக வைதிக விஷயங்களும் நிறைந்து சிறுவர்களை நல்வழியில் நடத்தக்கூடிய சற்புத்திகள் மிகுந்திருக்கின்றன. இப்புத்தகத்தின் முதற்பதிப்பு இரண்டாயிரம் காபிகளும் செலவழிந்து இப்போது இரண்டாம் பதிப்பு வெளியிட்டிருப்பதே இதன் அருமையையும் பெருமையையும் அவசியத்தையும் நன்றாக விளக்கும். ஆகலின் சன்மார்க்கப் பிரியர்களான ஒவ்வொருவரும் இதை வாங்கி வாசிக்கும்படி கோருகிறோம். இப்புத்தகத்தை வாங்க விரும்புவோர் ஒரு போஸ்ட் கார்ட்டில் தங்கள் பெயர் விலாஸத்தைத் தெளிவாயெழுதி மதராஸ் "லோகோபகாரி" மானேஜருக்கென்று மேல் விலாசம் வரைந்தனுப்பினால் தக்ஷணமே புத்தகம் வி. பி. போஸ்டுமூலம் அனுப்பப்படும். இதன்விலை ஸகல தபாற்செலவுகளு முள்பட 12-அணா.

---

## தத்துவ தரிசனி.

இப்புத்தகமும் ஞானதரிசனியைப்போல் நல்விஷயங்களடங்கப்பெற்ற அருமையான புத்தகமேயாம். இதன் விலையும் ஸகல தபாற்செலவுகளுள்பட 12 அணா. ஞானதரிசனியை வாங்கிப் படித்தவர்கள் இதை வாங்கிப் படிப்பது அதி அவசியம். புத்தகம் வேண்டியவர்கள் சென்னை லோகோபகாரி பத்திராதிபருக் கெழுதிக்கொள்ளவும்.

ஞானத்திரட்டு:—இது ஸ்வாமி விவேகாநந்தரின் உபந்யாஸங்களடங்கிய புத்தகம். முதற்பாகம் விலை 12-அணா. இரண்டாம்பாகம் விலை 10-அணா. வேறுவித தபாற்செலவுகளில்லை.

லோகோபகாரிப் பத்திராசிரியரால் இயற்றப்பட்ட ஞானதரிசனி, தத்துவதரிசனி, ஞானத்திரட்டு 1, 2, பாகங்கள், நீதிமாலினி முதலிய புத்தகங்கள் ஒவ்வொன்றின் விலையும் 12 அணா தபாற்செலவு பிரத்யேகமில்லை. ஒரேகாலத்தில் மேற்கூறிய புத்தகங்களில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பிரதிகளை வாங்கினால் 8-அணா வீதம் தரப்படும். அப்போதும் தபாற்செலவு பிரத்யேகமில்லை.

☞ ஆரியஸஹோதரர்களே! ஆஸ்திகபக்தர்களே!! ஒரு விஷயம் நீங்கள் கவனத்தில் வைக்கத்தகுந்தது. ஒரு முறை லோகோபகாரியைப் பொறுமையோடும் ஆதரவோடும் படித்தால் தக்ஷணமே அதன் அருமையும் பெருமையும் உங்களுக்கு நன்றாய் விளங்கும். லோகோபகாரியானது ஒப்புயர்வற்று எல்லாவற்றிலும் சிறந்திருக்கிறதென்பதை உங்கள் அனுபோகத்தில் அறிந்துகொள்ளலாம். ஈசுவரன் எல்லோருக்கும் மங்களத்தை யுண்டாக்கட்டும். ஓம் தத் ஸத்.

அடியில் வரைந்திருக்கும் கடிதம் விவேகாநந்த ஸ்வாமிகளால் மதராஸ் லோகோபகாரி மானேஜர் வி. நடராஜ ஐயருக்கு எழுதப்பட்டது.

BALLEN VILLA, DARJEELING,
*15th April*, 1898.

DEAR SIR,

I have much pleasure to acknowledge receipt of your letter of the 7th instant together with a copy of a Free Rendering in Lucid Tamil of some of my lectures. Indeed you have done a great service to the Tamil speaking people generally and to your anxious subscribers specially. It is no doubt very desirable that there should be a broadcast spreading of all that I have said amongst the people and the best mode of doing it is to render it in all the vernaculars of the country and you are to be congratulated for taking the lead in right earnest.

Wishing you all success in your laudable venture and with blessings to you,

I remain,
Yours truly,
VIVEKANANDA.

அன்பார்ந்த ஐயா, டார்ஜிலிங்கு 15-4-98.

நிகழும் மாதம் 7உ யன்று நீர் வரைந்து விடுத்த கடிதத்தையும் எனது உபன்யாஸங்களிற் சிலவடங்கிய ஞானத்திரட்டு என்னும் புத்தகத்தையும் மிகுந்த ஸந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டேன். உண்மையாகவே நீர் பொதுவாய் தமிழ் பேசும் ஜனங்களுக்கும், முக்கியமாய் எனது பிரஸங்கங்களைப்படிக்க விரும்பிய உமது பத்திரிகைகளின் சந்தாதாரர்களுக்கும் பெரிய உபகாரம் செய்திருக்கிறீர். நான் சொன்ன விஷயங்களைச் ஸகல ஜனங்களும் அறியவேண்டுமென்பது என்னுடைய முக்கியகருத்து. சுதேச பாஷைகளில் என்னுடைய உபந்யாஸங்களை மொழிபெயர்ப்பதுதான் அதற்குத் தகுந்த வழி. இவ்விஷயத்தில் நீர் மிகுந்த ஆவலுடன் முயற்சிசெய்து எல்லோருக்கும் முதன்மையாய் எனது உபந்யாஸங்களைத் தமிழில் மொழிபெயர்த்ததற்காக உம்மை நான் மிகவும் மெச்சுகிறேன்.

பெருமையைத் தரத்தக்க உம்முடைய பிரயத்னம் நன்றாகப் பலிக்குமாறு நான் கோருவதுடன் இக்கடித மூலமாய் உமக்கு அநேக ஆசீர்வாதமும் செய்கிறேன்.

உமது உண்மையான,
விவேகாநந்தர்.

HIGGINBOTHAM & CO., MADRAS AND BANGALORE.